

# நாளுக்கு நாள்

## அதிக தெளிவான,

## எழிலோங்கும் சருமம்



ரெக்ஸோனுவிலுள்ள **கேடில்** இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்



ரெக்ஸோனுவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் மெதுவாகத்தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழுமழுப்பும் தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள்.




# ரெக்ஸோனு

## கேடில் கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

RP 107-50 TM

ரெக்ஸோனு ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.

# கல்கி பொருளடக்கம்

மலர் 12
இதழ் 43

1953 மே 24

விஜய ௵
வைகாசி 11உ.





## தாண்டுவது எப்படி?




ஐந்து வருஷத் திட்டத்தில் அபிவிருத்தித் திட்டங்களுக்காகச் செலவு செய்ய வேண்டிய தொகையில் 600 கோடிரூபாய் துண்டு விழுகிறது என்று பார்லிமெண்டில் சமர்ப்பிக்கப்பட்டுள்ள அறிக்கையிலிருந்து தெரிய வருகிறது.

GREATEST ARTISTS

FINEST RECORDING




*The Hallmark of Quality*

# கேட்டு ஆனந்தியுங்கள்!

## எம். எஸ். சுப்புலக்ஷ்மி

N. 18100
நீ இரங்காயெனில் — அடாணா
வண்டினம் முரலும் — தோடி

N. 18208
மா நவை
—வஸந்த (2 பாகங்கள்)

N. 18218
கண்ணெடுத்தாகிலும்
—சிம்மேந்திர மத்திமம் (2 பாகங்கள்)

N. 18234
காலைத் தூக்கி
—யதுகுல காம்போஜி (2 பாகங்கள்)

N. 18250
மாலைப் பொழுதினிலே
—2 பாகங்கள் (ராகமாலிகை)

N. 18680
என்ன காணு ராமபஜன
—பந்துவராளி (2 பாகங்கள்)

N. 18685
ஸர குண பாலிம்ப
—2 பாகங்கள் (கேதார கௌள)

N. 28557
ப்ரோசே வாரு
—2 பாகங்கள் (கமாஸ்)

## என். ஸி. வஸந்தகோகிலம்

N. 18219
ஆனந்த நடனம்
—காம்போஜி (2 பாகங்கள்)

N. 18239
தந்தை தாய்
—ஷண்முகப்ரியா (2 பாகங்கள்)

N. 18259
பா மாலை
நித்திரும் செந்தமிழால்

N. 18299
அந்தரங்கமெல்லாம்
—வாசஸ்பதி (2 பாகங்கள்)

N. 28575
சுந்தரி நன்னு
—2 பாகங்கள் (பேகட)

N. 28767
எடுலைன பக்தி —ஸாமா
நேனருஞ்சரா —ஸிம்ஹவாஹினி

## ஜி. என். பாலசுப்பிரமணியம்

HT. 123
வாசுதேவயனி
—கல்யாணி (2 பாகங்கள்)

HT. 125
ராரா ஸமேதா —மிஸ்ர யமன்
ஸ்ரீபகீர தனயே —சுத்தஸன்யாஸி

## பி. ஏ. பெரியநாயகி

N. 26060 கந்தா குஞ்சித கரஹரப்ரியா (2 பாகங்கள்)

THE GRAMOPHONE COMPANY LIMITED

CALCUTTA : BOMBAY : MADRAS : DELHI

# "HIS MASTER'S VOICE"




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 43

# ராஜாஜியின் பிடிவாதம்

திருச்சி நகர வாசிகள் சென்ற பல வருஷ காலமாகக் கண்டறியாத காட்சியை இந்த மே மாதம் 16-ந் தேதியன்று கண்டார்கள். அறுபதினாயிரத்துக்கு மேல் ஒரு லட்சம் வரையில் மதிப்பிடக்கூடிய ஜனங்கள் ஒரு பொதுக் கூட்டத்தில் கூடியிருக்கக் கண்டார்கள். இத்தகைய கூட்டத்தில் ஒரு காங்கிரஸ் தலைவர்—சென்னை சர்க்காரின் மந்திரி—ஒரு மணி நேரம் பேசியதையும், மக்கள் உற்சாகமாகக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு ஆரவாரமான குதூகலத்துடன் அமைதியாகக் கலைந்து போனதையும் கண்டார்கள். காங்கிரஸ் பொதுக் கூட்டம் ஒன்றிற்கு இவ்வளவு மாபெரும் ஜனத் திரள் சேர்ந்திருந்ததைத் திருச்சி நகரம் கண்டு பத்து வருஷங்களுக்கு மேலிருக்கும். சென்ற பத்து வருஷ காலத்தில் திருச்சியில் காங்கிரஸ் கூட்டம் போட்டால் சாதாரணமாக நூறு இருநூறு பேர் வருவார்கள். மந்திரிமார்கள் வந்தால் உத்தியோகஸ்தர்களையும் சேர்த்து முந்நூறு பேர் வருவார்கள். மாபெரும் காங்கிரஸ் சொற்பொழிவாளர்கள் வெளியூர்களிலிருந்து வந்தால் ஆயிரம் இரண்டாயிரம் பேர் வருவார்கள். காங்கிரஸ் பொதுக் கூட்டத்துக்கு இம்மாதிரி ஜனசமுத்திரம் திரண்டு வந்ததைப் பார்த்து எத்தனையோ காலம் ஆகிவிட்டது!

இத்தகைய மாபெரும் பொதுக் கூட்டத்தில் ராஜாஜி ஒரு மணி நேரம் வழக்கம் போல் கசப்பும் சிரிப்புமாகப் பேசினார். ராஜாஜி சில உண்மைகளை எடுத்துச் சொல்லும் போது அது கேட்பவர்களுக்குக் கசப்பாக இருக்கும். பின்னர் தொடர்ந்து வரும் நகைச் சுவை அதைச் சிரிப்பாக மாற்றிவிடும்.

இதே முறையில் திருச்சி பொதுக் கூட்டத்தில் பேசுகையில், ராஜாஜி தாம் எவ்வளவு பிடிவாதக்காரர் என்பதைக் காட்டிக் கொண்டார். அத்துடன், வழக்கமில்லாத வழக்கமாகக் கொஞ்சம் 'தற்பெருமை'யும் பேசிக் கொண்டார்.

"சென்ற வருஷம் இதே காலத்தில் கண்ட்ரோலை ரத்து செய்தேன். எல்லாரையும் கலந்தாலோசித்து ரத்து செய்ய வேண்டுமென்று எண்ணியிருந்தால் முடிந்திருக்குமா? ஒருநாளும் முடிந்திராது. ஆயிரம் பதினாயிரம் ஆட்சேபங்களை எழுப்பியிருப்பார்கள். நானே பிடிவாதமாகத்தான் கண்ட்ரோலை ரத்து செய்தேன். அதன் பலனை இப்போது எல்லோரும் கண்டு கொண்டார்கள். இனிமேல் எது எப்படி ஆனாலும் கண்ட்ரோல் திரும்பி வரப்போவதில்லை!" என்று ராஜாஜி கூறியபோது சபையோரின் உற்சாக கரகோஷம் வானை அளாவியது.

ராஜாஜி கண்ட்ரோலை ரத்து செய்த சமயத்தில் வடக்கே அதற்கு மிக்க எதிர்ப்பு இருந்தது. நிதிமந்திரி தேசமுக் தாம் ராஜிநாமா செய்து விடுவதாகப் பயமுறுத்தினார். நேருஜி அவரைத் தாஜா செய்து வைத்தார். பின்னர் ஒவ்வொரு மாகாணமாகச் சென்னையைப் பின் பற்றியது. ஐக்கிய மாகாணத்தில் தானிய விலை நிலவரத்தைப் பற்றி நாலு நாளைக்கு முன்பு ரேடியோவில் சொன்னார்கள். சென்ற வருஷம் இதே மாதத்தில் விற்ற விலையை விட இப்போது அரிசி, கோதுமை, சோளம், புன்செய் தானியங்கள், பருப்பு வகைகள் எல்லாம் 100க்கு 20 விதம் விலை குறைவாக விற்பதாகத் தெரிவித்தார்கள்.

இம்மாதிரிதான் நாடெங்கும் தானியங்கள் விலை இறங்கி இருக்கிறது. வேண்டிய அளவும் கிடைக்கிறது. தமிழ் நாட்டின் பஞ்சப் பிரதேசங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து திரும்பிய கனம் டி. டி. கே. "எல்லா இடங்களிலும் ஒருபடி அரிசி ஒரு ரூபாய்க்குள் கிடைக்கிறது. இது கண்ட்ரோலை எடுத்ததின் பலன்தான்!" என்று கூறினார்.

ராஜாஜி சாதாரணமாகத் தாம் செய்த காரியத்தைப் பற்றிப் பெருமையாகப் பேசிக் கொள்வதில்லை. திருச்சியில் அவ்விதம் பேசுவதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது. சமீபத்தில் வெளியான புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தின் நன்மைகளைக் குறித்து ராஜாஜி திடமான நம்பிக்கை கொண்டிருக்கிறார். அத் திட்டத்தை ஆசிரியர்மார்கள் சிலர் குறைகூறுவதற்கு ராஜாஜி பதில் சொல்ல நேர்ந்தது. ஆசிரியர்கள் தங்களிடம் யோசனை கேட்டுக் கொண்டு மேற்படி சீர்திருத்தத்தைச் செய்யவில்லை என்று ஓர் ஆட்சேபத்தைக் கூறியிருக்கிறார்கள். அந்த ஆட்சேபத்துக்குப் பதிலாக

ராஜாஜி கண்ட்ரோலை எடுத்தது பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, மேலும் கூறியதாவது :—

"ஆசிரியர்களைக் கேட்டுக் கொண்டு எந்தக் கல்விச் சீர்திருத்தமாவது செய்ய முடியுமா! கேட்டால் அவர்கள் இலேசில் பதில் சொல்வார்களா! பதில் சொன்னாலும் ஒருவரோடொருவர் மாறுபட்டுத்தான் சொல்வார்கள். யார் எதிர்த்தாலும் சரி, புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தை அமுல் நடத்தத்தான் போகிறேன். அதனால் நிச்சயமாகத் தீமை ஒன்றும் விளையாது. கிராமாந்தரக் குழந்தைகளுக்கு அமோகமான நன்மைதான் விளையும். இந்த விஷயத்தில் என்னிடம் நம்பிக்கை வையுங்கள். அப்படித் தவறாகப் போய்விட்டால் நான் இறந்த பிறகு என்னுடைய சமாதியின் பேரில் சேற்றை அள்ளிப் போடுங்கள்!"

ராஜாஜி இவ்வளவு பிடிவாதமாகவும் ஆத்திரமாகவும் உணர்ச்சியுடனும் பேசவேண்டுமென்றால், புதிய கல்வித் திட்டத்தில் அவருடைய ஆர்வமும் நம்பிக்கையும் எவ்வளவு வேரூன்றிப் போயிருக்க வேண்டும்!

கிராமாந்தரங்களின் பக்கமே போய்ப் பார்த்தறியாதவர்கள் "கிராமக் குழந்தைகளின் நன்மை"யைப் பற்றிப் பேசுகிறார்கள். கிராமப் பள்ளிக்கூடங்களின் நிழலில் ஒதுங்கி அறியாதவர்கள் கிராமக் குழந்தைகளுக்குத் தீங்கு உண்டாகி விடுமே என்று பரிந்து பேசுகிறார்கள்.

ராஜாஜி பத்து வருஷம் சரியான பட்டிக்காட்டுப் பிரதேசத்தில் வசித்தவர். கிராமக் குழந்தைகளுக்குத் தாமே பள்ளிக்கூடம் நடத்தி அவர்களுக்குப் படிப்புச் சொல்லித் தந்தவர். மற்ற கிராமப் பள்ளிக்கூடங்களுக்கும் சென்று அங்கே குழந்தைகள் படும்பாட்டைக் கண்ணால் பார்த்தவர்.

அந்த அநுபவங்களை யெல்லாம் வைத்துக் கொண்டு எத்தனையோ காலம் சிந்தித்து இந்தத் திட்டத்தை வகுத்திருக்கிறார். ஏதோ புதிதாக நேற்றைக்குத் திடுதிப்பென்று திட்டத்தைக் கொண்டு வந்து விட்டார் என்பதும் பொருந்தவறு.

மூன்று ஆண்டுகளுக்கு முன்னரே இத் திட்டம் பற்றிப் பேசி யிருக்கிறார். அப்போதே "சுதேசமித்திரன்" முதலிய பத்திரிகைகள் பலமாக ஆதரித்து எழுதியிருக்கின்றன. ஆசிரியர்கள் பலரும் உற்சாகமாக வரவேற்றிருக்கிறார்கள்.

"என்னிடம் நம்பிக்கை வையுங்கள்!" என்று ராஜாஜி இப்போது வேண்டிக் கொள்கிறார்.

அவருடைய வேண்டுகோளை மதித்து நம்பிக்கையின் பேரில் புதிய திட்டத்தை ஒப்புக்கொள்கிறவர்கள் ஒப்புக் கொள்ளலாம். அல்லது சில காலம் சகித்துக் கொண்டிருந்தாவது பார்க்கலாம்.

நம்பிக்கையின் பேரில் ஒப்புக் கொள்ள விருப்பமில்லாதவர்கள், அறிவினால் ஆராய்ந்து பார்த்தும் முடிவு செய்யலாம்.

அறிவின் துணைகொண்டு விருப்பு வெறுப்பின்றி ஆராய்ந்து பார்ப்பவர்கள் பின் வரும் முடிவுகளுக்குத்தான் வரும்படி யிருக்கும் என்பதில் நமக்குச் சிறிதும் ஐயமில்லை :—

1. பொதுவாக நமது நாட்டுக்கும், சிறப்பாக நம் குழந்தைக் குலத்துக்கும் அளவில்லாத நன்மை பயக்கக்கூடிய ஒரு திட்டம் சென்ற நூற்றைம்பது ஆண்டு காலத்தில் இந்தப் புதிய கல்வித் திட்டத்தைப் போல் வெளியானது கிடையாது.

2. இந்தியா தேசம் சுதந்திரம் அடைந்த பிறகு இந்தப் புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தைப் போன்ற நன்மையான திட்டம் எதுவும் இதுவரை வெளியானது கிடையாது.

3. ராஜாஜி தம் வாழ்வில் செய்துள்ள மகத்தான பல சேவைகளில் இந்தப் புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்துக்கு இணையான சேவை வேறொன்றும் கிடையாது.

மேற்கூறிய மூன்று உண்மைகளையும் இன்று உடனடியாகச் சிலரால் உணர முடியாமற் போகலாம். சில வருஷங்கள் நடத்திப் பார்த்த பிறகு கட்டாயம் உணர்ந்தே தீருவார்கள்.

ராஜாஜி நமக்குச் செய்துள்ள எல்லாச் சேவைகளையும் மறந்து விட்டாலும், "செய்தே தீருவேன்" என்று பிடிவாதமாகச் செய்த இந்தச் சேவையைத் தமிழ் மக்கள் மறக்க மாட்டார்கள். இக் காலத்துத் தமிழ் மக்கள் மட்டுமின்றி வருங் கால சந்ததிகளும் நன்றியுடன் நினைவுகூருவார்கள்.

# அந்த "நாம்" யார்?

தமிழ் நாட்டின் சிறந்த சிறுகதை எழுத்தாளரான ஸ்ரீ பி. எஸ். ராமையா அவர்களை ஓர் இரண்டாம் வாசக புத்தகம் திணறித் திண்டாடும்படி அடித்து விட்டது என்றால், அது எத்தனை வியப்பான காரியம்! ஸ்ரீ பி. எஸ். ராமய்யாவின் ரஸமான கடிதத்தை நேயர்களே படித்து அந்த அதிசயமான விஷயம் இன்னதென்பதை அறிந்து கொள்வார்களாக :—

"கல்கி மே 10-ந் தேதி இதழிலுள்ள 'குழந்தைக் குலத்துக்கு விடுதலை' என்ற தலைப்பிட்ட தலையங்கத்தைப் படித்தபோது, தற்போதுள்ள கல்வி முறையிலுள்ள ஒரு குறை பாட்டை, சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டுமென்ற ஆவல் எழுந்தது.

என் பிள்ளைகளில் ஒருவன் படிக்கும் தமிழ்ப் பாடப் புத்தகத்திற்குப் பெயர் 'திருவள்ளுவர் செந்தமிழ் வாசகம் புத்தகம் 2.' இதன் ஆசிரியர் அ. கி. பரந்தாமனார், எம். ஏ. தலைமைத் தமிழ் ஆசிரியர், திருப்பாவூற் கலாசாலை, வேப்பேரி, சென்னை.

இந்தப் புஸ்தகத்தின் 3 வது பாடத்திற்குத் 'தொழிலாளர்கள்' என்பது தலைப்பு. பாடத்தில் படங்களுடன் 'இவன் தச்சன். அவன் கருமான்' என்று குயவன், சேணியன், தையற்காரன், வண்ணான் ஆகிய தொழிலாளர்களைப் பற்றிச் சொல்லப்படுகிறது. சிறு சிறு வாக்கியங்களில் அந்தந்தத் தொழிலாளி செய்யும் வேலை, அவன் ஆயுதங்கள் ஆகியவற்றைப் பற்றிச் சொல்லியிருக்கிறது.

பாடத்தின் முடிவில் ஒரு தனி வாக்கியம் இருக்கிறது. 'இவர்கள் தொழிலாளர்கள். நாம் இவர்களை அன்பாக நடத்த வேண்டும்' என்று போதிக்கிறது அந்த வாக்கியம்.

இந்தக் கடைசி வாக்கியத்தைப் படித்து நான் திடுக்கிட்டுப் போனேன். இவர்கள் தொழிலாளர்கள் என்பது சத்தியம். படங்களுடன் தெளிவாக இருக்கிறது. ஆனால் கடைசி வாக்கியத்திலுள்ள 'நாம்' என்பது யார்? தற்செயலாக என் புதல்வன் 'நாம் என்றால் யார்?' என்று கேட்டு விட்டால் அவனுக்கு நான் என்ன பதில் சொல்ல முடியும்?

இந்தப் புத்தகம் துரைத்தனத்தாரின் பாட புத்தகப் பரிசோதனைக் குழுவினரால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

இதைப் பாட புத்தகமாகப் படிக்கும் ஆயிரக் கணக்கான குழந்தைகளில், அதில் சொல்லப்படும் அறுவகைத் தொழிலாளர்களின் குழந்தைகளும் இருப்பார்கள். அவர்கள் மனதில் இந்த 'நாம்' என்ன மனோபாவத்தை வளர்க்கும் என்பதை யோசித்துப் பார்த்து, 'துரைத்தனத்தாரின் குழுவினர்' இந்தப் பாட புத்தகத்தைத் தகுதியுள்ளதென்று ஏற்றிருப்பார்கள் என்று என்னால் நம்ப முடியவில்லை.

இந்த மாதிரி பாடங்களைப் படிக்கும் குழந்தைகளைப் புதிய முறையின்படி பயிற்சி செய்விப்பது கொஞ்சம் சிரமமாக இருக்குமென்பது நிச்சயம். தொழில் பயிற்சியில் அந்தக் குழந்தைகளின் மனம் எவ்வளவு தூரம் ஒட்டும் என்பதை யோசிக்க வேண்டும்.

நமது நாட்டில் நிகழ்ந்து கொண்டிருக்கும் சமூக, சமுதாயப் புரட்சியின் ஓர் அம்சந்தான் இப்போது ஆரம்பமாகப் போகும் புதிய முறைக் கல்வித் திட்டம். புரட்சியைத் தெளிவாகப் புரிந்துகொண்டு அதை நடத்திச் செல்லும் ஆற்றல் படைத்த ஒருவரைத் தலைவராகக் கொண்ட மந்திரி சபை, புரட்சியின் அடுத்த படிக்கு மக்களை அழைத்துச் செல்லுகிறது. இந்தப் புதுப்படியில் ஏறுவதற்குச் சென்னை இராஜ்யம் தலைமை வகித்து வழி காட்டுகிறது என்பது நாமெல்லாம் தலை நிமிர்ந்து பெருமைப்பட வேண்டிய விஷயம்.

'துரைத்தனத்தாரின் பாடப் புத்தகப் பரிசோதனைக் குழுவினர்' கொஞ்சம் சிரத்தை காட்டித் தங்கள் பொறுப்பை வகித்தால் தான் இந்தப் புதிய முறை கல்வித்திட்டம் வெற்றிபெற முடியும். மேலே எடுத்துக் காட்டியுள்ளது போன்ற மனோபாவம் முதலில் அவர்களிட மிருந்து விலக வேண்டும்.

*புரசவாக்கம், சென்னை*
*11—5—53* பி. எஸ். ராமையா."

திரு பி. எஸ். ராமய்யா அவர்கள், தமது புதல்வன் "அந்த 'நாம்' யார்?" என்று கேட்டால் விடை யிறுப்பதற்குக் கஷ்டப்படக் கூடும். ஆனால் பழைய பரம்பரையில் வந்த ஆசிரியர் வர்க்கத்தினருக்கு அதில் கஷ்டம் ஒன்றும் இராது. "நாம் படிப்பாளிகள்" என்று பளிச்சென்று பதில் சொல்லி விடுவார்கள்.

கையினால் தொழில் செய்கிறவர்கள் ஒரு தனிப்பட்ட தாழ்ந்த வர்க்கத்தார் என்பதும், ஏட்டுக் கல்வி பயின்று ஆசிரியத் தொழிலோ அல்லது வேறு உத்தியோகமோ செய்கிறவர்கள் ஒரு தனிப்பட்ட உயர்ந்த வர்க்கத்தார் என்பதும், ஏட்டுக் கல்வியாளராகிய பெரிய மனிதர்கள் கேவலம் கைத் தொழில் செய்து பிழைப்பவர்களை அன்பாக நடத்தினால் அதுவே பெரிய மனிதத் தன்மைக்கு அடையாளம் என்பதும் ஏட்டுக் கல்வி வர்க்கத்தின் உள்ளத்திலும் இரத்தத்திலும் ஊறிப்போன நம்பிக்கையாகும்.

மேற்படி பாட புத்தகம் எழுதிய ஆசிரியரையோ அல்லது அங்கீகரித்த பாட புத்தகக் குழுவையோ மட்டும் நாம் குறை சொல்லிப் பயனில்லை. அந்தப் பாட புத்தகக் குழுவைப்போன்றவர்கள்தான் மற்றப் 'புத்தகப் புழு'க்களாகிய ஏட்டுக் கல்விக் குழுவினர் அனைவரும். அதாவது, "தொழிலாளிகள் ஒரு தனி இனம்; படிப்பாளிகள் அவர்களிடமிருந்து வேறுபட்ட ஒரு தனி இனம்" என்று நம்புகிறவர்கள்.

எனவே, மங்களூரில் கூடிய ஆசிரியர் மகாநாடு சென்னை சர்க்காரின் புதிய கல்வித் திட்டத்தை ஒப்புக் கொள்ளாததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஆசிரியர்கள் உடனடியாக ஒப்புக் கொண்டிருந்தால்தான் ஆச்சரியமாயிருந்திருக்கும். மெக்காலே துரையின் பரம்பரையில் வந்த ஆசிரியர்கள் — அதிலும் கல்வி மகாநாட்டுக்கு விஜயம் செய்யும் ஆசிரியர் சிகாமணிகள் — புரட்சிகரமான எந்தத் திட்டத்தையாவது இலேசில் ஒப்புக் கொண்டு விட முடியுமா!

ஆயினும் ஆற அமர யோசித்துப் பார்த்த பிறகு புதிய திட்டத்தில் உள்ள அளவில்லா நன்மைகளை அவர்கள் உணர்ந்து ஒப்புக் கொள்வார்கள் என்று நம்புகிறோம். "இத்தனை காலமாகத்தான் பழைய முறையைப் பார்த்தாகி விட்டதே! அதில் உள்ள கேடுகளைப் பற்றி எவ்வளவோ அறிஞர்கள் பேசிப் பேசி அலுத்துப் போய்விட்டதே! புதிய முறையைச் சில வருஷம் பரீட்சித்துப் பார்ப்போம்" என்றாவது ஒப்புக் கொள்ளலாம் அல்லவா!

பழைய தலைமுறையைச் சேர்ந்த ஆசிரியர்கள் எதிர்த்தால் எதிர்த்துவிட்டுப் போகட்டும். அதுவே புதிய திட்டத்தின் அவசியத்தை நிரூபிக்கும் அத்தாட்சி என்று வைத்துக் கொள்ளலாம். புதிய தலைமுறையைச் சேர்ந்த இளம் ஆசிரியர்கள், — சுதந்திர இந்தியாவின் புதிய பொறுப்புக்களையும் இலட்சியங்களையும் உணர்ந்தவர்கள், — எத்தனையோபேர் இருப்பார்கள். அவர்கள் புதிய திட்டத்தை ஆதரிப்பதுடன் தங்கள் ஆதரவை ஐயமறப் பிரகடனப்படுத்தவும் வேண்டும்.

தென்னிந்திய உபாத்தியாயர் சங்கத் தலைவர் ஸ்ரீ எஸ். நடராஜன் அவர்கள் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் "புதிய திட்டத்தின் கீழ் பல ஆசிரியர்களுக்கு வேலை இல்லாமற் போய் விடுமோ!" என்ற பீதியை வெளிப்படுத்தியிருக்கிறார். இத்தகைய பீதி கொள்வதற்கு எவ்வித முகாந்திரமும் இல்லை. மங்களூரில் கூடியவர்கள் இந்தப் பீதி காரணமாகவே "புதிய திட்டம் குழந்தைகளுக்குத் தீங்கு பயப்பது" என்று தீர்மானித்தார்கள் போலிருக்கிறது. பீதி கொண்டவர்கள் "நல்லது எது!" "கெட்டது எது!" என்று சரியாக ஆராய்ந்து தீர்மானிப்பது இயலாத காரியந்தானே!

ஆசிரியர்களுக்கு வேலையில்லாமற் போய்விடும் என்று பயப்படக் காரணம் எதுவும் இல்லை. இம் மாகாணத்தில் இன்னும் நாற்பது லட்சம் குழந்தைகள் பள்ளிக்கூடம் போக வேண்டிய வயதை அடைந்திருந்தும் படிக்கும் வசதியின்றி இருக்கிறார்கள். ஆண்டு தோறும் லட்சக்கணக்கான குழந்தைகள் ஜனனம் ஆகிக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால், இன்னும் நெடுங்காலத்துக்குப் பயிற்சி பெற்ற உபாத்தியாயர்களுக்கு நாட்டில் கிராக்கி இருந்து கொண்டிருக்கும்.

ஆகையால், வேலை போய் விடுமோ என்ற பீதியை மறந்து விட்டு, ஆசிரியர்கள் புதிய திட்டத்தை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

புதிய கல்வித் திட்டம் சாதிப் பிரிவினையை வளர்க்கக் கூடியது என்று சொல்லுகிற புத்திசாலிகளுக்கும் ஸ்ரீ பி. எஸ். ராமய்யா எடுத்துக் காட்டியுள்ள பாடம் நல்ல பதிலாகும்.

"தொழிலாளிகள் தனி இனம்: படிப்பாளிகள் தனி இனம்" என்று பிரிக்கும் மெக்காலே கல்வி முறை சாதிப் பிரிவினையை வளர்க்கக் கூடியதா!

அல்லது, "எல்லாப் பிள்ளைகளும் ஒரு வேளை படிக்க வேண்டும், ஒரு வேளை கைத்தொழில் செய்ய வேண்டும்" என்று விதிக்கும் கல்வி முறை சாதிப் பிரிவினையை நிலைநாட்டக் கூடியதா!

"கைத்தொழில் செய்வது இழிவு" என்ற கேவலமான மனப்பான்மை கொண்டவர்கள்தான் புதிய கல்வித் திட்டத்தை எதிர்ப்பார்கள். உண்மையில்,

"தொண்டரென்று ஓர் வகுப்பு இல்லை—தொழில்
சோம்பரைப் போல் இழிவு இல்லை"

என்ற பாரதியாரின் அமுத வாக்கை நடத்திக் காட்டக் கூடியது புதிய கல்வித் திட்டமாகும்.

# தியாகத்தைக் கேவலப் படுத்தாதீர்!

தேசியப் போரில் தியாகங்கள் புரிந்தவர்களுக்குத் தமிழ் நாட்டில் ஒரு காலத்தில் மிக்க மதிப்பும் மரியாதையும் இருந்து வந்தன. இன்னும் ஓரளவு மிச்சம் இருந்து வருகின்றன.

அவற்றை அடியோடு தொலைப்பதற்கு வேண்டிய முயற்சிகளைச் சிலர் செய்து வருகிறார்கள். "தியாகிகள் கூட்டங்கள்" என்றும், "தியாகிகள் மகாநாடுகள்" என்றும் கூட்டுகிறார்கள். இக் கூட்டங்களுக்கு யார் வருகிறார்களோ தெரியாது. ஆனால் தியாகிகளின் பெயரால் அவர்களுக்கு அழியாத அபகீர்த்தியை அளிக்கக் கூடிய தீர்மானங்கள் செய்யப்படுகின்றன; கேவலப்படுத்தும் பேச்சுக்கள் பேசப்படுகின்றன.

தியாகிகள் "எங்கள் தியாகத்துக்குப் பரிசு கொடுங்கள்" என்று கேட்டவுடனேயே அவர்களுடைய தியாகம் பயனற்றுப் போய்விடுகிறது.

தியாகத்துக்கு விலையே கிடையாது; தேசத்துக்காகச் செய்யும் தியாகத்துக்கு இணையாகச் சொல்லக்கூடிய பரிசு மூவுலகத்திலும் கிடையாது. அத்தகைய தியாகத்தை ஐந்து ஏக்கரா நிலத்துக்கு ஈடாகச் செய்யும் முயற்சிகளைப் பற்றி என்னவென்று சொல்வது!

ஆகையால், தியாகிகளின் பெயரால் கூட்டம் கூட்டி நிலம் வேண்டும் என்று கிளர்ச்சி செய்கிறவர்கள் தியாகிகளுக்குத் தீங்கு இழைக்கிறார்கள்.

உண்மையில், இவர்கள் தியாகிகளுக்கு நன்மை செய்ய விரும்பினால் பொது ஜனக் கூட்டங்கள் நடத்த வேண்டும். அத்தகைய கூட்டங்களில் "தியாகிகளுக்கு நில மான்யம் கொடுங்கள்" என்று தீர்மானம் நிறைவேற்ற வேண்டும்.

தியாகிகள் அல்லாதவர்கள் தியாகிகளுக்குச் சர்க்கார் மான்யம் அளித்து உதவி புரிய வேண்டும் என்று வற்புறுத்தினால், அது கௌரவமாயிருக்கும்.

தியாகிகளைக் கொண்டே "எங்கள் தியாகத்துக்கு விலை கொடுங்கள்" என்று கிளர்ச்சி செய்வது தியாகிகளைக் கேவலப் படுத்துவதாகும்.

"என்னுடைய கைப் பொருளைத் திருடுகிறவன் அற்பத்தைத் திருடுகிறான்; என்னுடைய நற்பெயரைத் திருடுகிறவன் எனது எல்லாச் செல்வத்தையும் திருடிக் கொள்கிறான்" என்பது மகா கவியின் சத்திய வாக்கு.

* * *

நாலு வருஷங்களுக்கு முன்பு காங்கிரஸ் மந்திரிகள் தியாகிகளுக்கு ஐந்து ஏக்கரா நன்செய் அல்லது பத்து ஏக்கரா புன்செய் நிலம் வீரமான்யம் அளிக்கப் போவதாக அறிக்கை பிறப்பித்த போது, அதை நாம் வரவேற்றோம்.

இந்தத் திட்டத்தின்படி தியாகிகளுக்குக் கொடுப்பதற்கு வேண்டிய அளவு நிலம் இருப்பதை உறுதிப் படுத்திக் கொண்டே சர்க்கார் உத்தரவு பிறந்திருக்கும் என்று நம்பினோம்.

அவ்விதம் உறுதிப்படுத்திக் கொள்ளாமல் நிலம் இருக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்ளவும் முயற்சி செய்யாமல் மேற்படி உத்தரவு பிறப்பிக்கப்பட்டது என்று பின்னால் தெரியவந்தது.

உத்தரவு பிறப்பித்தவர்கள் அதைக் காரியத்தில் நிறைவேற்றுவதில் சிறிதளவேனும் திறமை காட்டவில்லை.

ஆறு மாதம் அல்லது ஒரு வருஷத்துக்குள் தியாகிகளுக்கெல்லாம் நிலம் வழங்கப்பட்டிருந்தால், அந்த அத்தியாயம் முடிந்து போயிருக்கும்.

அதற்குப் பதிலாக, தியாகிகளுக்கு நிலம் வழங்கும் காரியத்தை எவ்வளவு சிரிப்பாய்ச் சிரிக்க அடிக்கலாமோ அவ்வளவும் அடித்தார்கள்.

தியாகிகள் நிலத்துக்கு விண்ணப்பம் எழுதிக் கொண்டு போய் ரிவின்யூ இன்ஸ்பெக்டர் முதல் டிபுடி கலெக்டர் வரையில் உத்தியோகஸ்தர்களின் முன்னிலையில் நிற்கும்படி நேர்ந்தது. டபேதார்களால் அங்கு மிங்கும் மொத்துண்டு அலைந்து திரியும்படியும் நேர்ந்தது.

ஒரு வருஷம், இரண்டு வருஷம், மூன்று வருஷம் தியாகிகள் இழுத்தடிக்கப்பட்டார்கள்.

தியாகத்துடன் ஸ்நானப் பிராப்தியும் இல்லாத சிலருக்குச் சட்டப்பட்டென்று நிலம் கிடைத்தது.

உண்மைத் தியாகிகள் சிலருக்கும் நிலம் கிடைத்தது. ஆனால் நிலத்தின் அருகில் சென்றபோது ஏற்கெனவே அந்த நிலங்களைப் பண்படுத்தியிருந்த குடியானவர்கள் தடியை எடுத்துக் கொண்டு வந்தார்கள். கிரிமினல் வழக்குகள், ஸிவில் வழக்குகள் எல்லாம் தொடர்ந்தன.

இவ்விதமாக, தியாகிகளுக்கு வீரமான்யம் வழங்கிய காரியம் அவமானகரமான அலங்கோலமாயிற்று. பொது ஜனங்கள் அடைந்த அருவருப்பைச் சொல்ல முடியாது.

காங்கிரஸ் விரோதிகள் இந்த நிலையை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். "ஐந்து ஏக்கரா தியாகி" என்றும். "பத்து ஏக்கரா தியாகி" என்றும் பட்டம் சூட்டினார்கள்.

சென்ற பொதுத் தேர்தலில் இம் மாகாணத்தில் காங்கிரஸ் அடைந்த தோல்விக்கு இதுவும் ஓர் உதவிக் காரணம் ஆயிற்று.

* * *

ராஜாஜி ஆரம்பத்திலிருந்தே இத் திட்டத்தை ஆதரிக்கவில்லை. காங்கிரஸ்காரர்கள் சர்க்கார் பதவிக்கு வந்ததும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களுக்குத் தனிச் சலுகை காட்டுவது சரியன்று; தார்மிக ரீதியிலும் அது குற்றம், அரசியல் முறையிலும் பொருந்தவறு என்பது ராஜாஜியின் கொள்கை.

ஆகையால் ராஜாஜி முதன் மந்திரியானவுடனேயே மேற்படி திட்டத்தை ரத்து செய்தார். அதற்கு வேண்டிய காரணங்களையும் கூறினார். அப்போது யாரும் ஆட்சேபிக்கவில்லை.

சமீபகாலத்திலேதான் ஆட்சேபங்கள் கிளம்பியிருக்கின்றன. பொது ஜனங்களிடமிருந்து ஆட்சேபம் கிளம்பவில்லை. அப்படிக் கிளம்பினால் நன்றாயிருக்கும். பொது ஜனங்கள் "ராஜாஜி இந்தக் காரியம் செய்வது தவறு. தியாகிகளுடைய

# முதலைக் கண்ணீர்!




தியாகத்தைப் பாராட்டி அவர்களுக்கு மான்யம் வழங்க வேண்டும்'' என்று கிளர்ச்சி செய்தால், ராஜாஜிக்குக்கூட அது மகிழ்ச்சியை அளிக்கலாம். அவருடைய மனமும் மாறினாலும் மாறலாம்.

அவ்விதம் ஒன்றும் நடக்கவில்லை. தியாகிகளின் மகாநாடுகள் நடக்கின்றன. தியாகிகளின் பெயரால் யாரோ நடத்துகிறார்கள். அதற்காகப் பணச் செலவும் செய்கிறார்கள். இவ்விதம் தியாகிகளின் பேரில் மக்களுக்கு அருவருப்பை வளர்க்கிறார்கள். தியாகிகளுக்கு அழியாத அபகீர்த்தியைச் சம்பாதித்துக் கொடுக்கிறார்கள்.

முன்னே, கருப்பு மார்க்கெட்டில் பணம் சம்பாதித்தவர்கள் காங்கிரஸ் ஊழியர்களை இம்மாதிரியெல்லாம் உபயோகப்படுத்திக் கொண்டார்கள். அதனால் 'காங்கிரஸ் ஊழியர்கள்' என்றாலே நாட்டில் கெட்ட பெயர் உண்டாயிற்று. சென்ற பொதுத் தேர்தலிலும் அது பிரதிபலித்தது.

* *

தியாகிகளுக்கு நில மான்ய விஷயத்தில் உள்ள குறைகளைத் தீர்த்துக் கொள்ள வேறு வழிகள் இருக்கின்றன. தியாகிகளின் தலைவராகிய ஸ்ரீ காமராஜ நாடார் இருக்கிறார். அவரிடம் தெரிவித்துக் கொள்ளலாம். ஸ்ரீ காமராஜ் வற்புறுத்தியதனாலேயே ராஜாஜி முதன் மந்திரி பதவியை ஒப்புக் கொண்டார். "தியாகிகளுக்கு நிலத்தைக் கொடுங்கள்; இல்லாவிடில், முதன் மந்திரி பதவியை விடுங்கள்!" என்று ஸ்ரீ காமராஜ் சொன்னால், ராஜாஜி இரண்டில் ஒன்றைச் செய்து விட்டுப் போகிறார்.

சித்தூர் ஜில்லாவில் தமிழர்கள் வாழும் பகுதிகளைப் பற்றிய பிரச்னையை ஆந்திர காங்கிரஸ் தலைவர்களுடன் பேசி முடிவு செய்து விடலாம் என்று ஸ்ரீ காமராஜ் தைரியம் சொல்கிறார். அதற்காகக் கிளர்ச்சியே வேண்டாம் என்கிறார்.

அப்படியிருக்க, இந்தத் தியாகி நிலப் பிரச்னையை அவரால் பேசித் தீர்க்க முடியாதா!

இதற்காகத் தியாகிகள் மகாநாடு கூட்டிக் கிளர்ச்சி செய்து, தங்கள் தியாகத்தையெல்லாம் வீணாக்க வேண்டுமா! 'தியாகி' என்றால், நாடு சிரிக்கும்படியான மிகக் கேவலமான நிலைமையை உண்டு பண்ணிக் கொள்ள வேண்டுமா!

சைன்யத்தைச் சேர்ந்த வீரர்களுக்குச் சர்க்கார் நில மான்யம் கொடுக்கவில்லையா என்று ஓர் அதிசயமான வாதத்தைச் சிலர் சொல்லுகிறார்கள்.

இவர்களுக்குத் தியாகத்தைப் பற்றியும் தெரியாது, சைன்யத்தைப் பற்றியும் தெரியாது என்று ஏற்படுகிறது.

சைன்யத்தில் சேருகிறவர்கள் 'தியாகம் செய்கிறோம்' என்று சொல்லிக் கொண்டு சேருகிறார்களா! தங்களைத் தியாகிகள் என்றுதான் சொல்லிக் கொள்கிறார்களா!

அவர்கள் சம்பளத்துக்காகவும் மற்ற வசதிகளுக்காகவும் சைன்யத்தில் சேருகிறார்கள்.

பிரிட்டிஷ் ஆட்சியின் காலத்தில் சைன்யத்தில் சேர்ந்தவர்கள் எல்லாரும், அதனால் ஏற்படும் அநுகூலங்களை முன்னிட்டே சேர்ந்தார்கள்.

தேசியப் போரில் சேர்ந்த தியாகிகளோ, அப்படி எந்தவிதமான அநுகூலத்தையும் எதிர்பார்க்கவில்லை. எதிர்பார்ப்பதாகச் சொல்லவும் இல்லை. இதுவரையில் எதிர்பார்த்திருந்தாலும், இனியும் எதிர்பார்த்தாலும், அவர்கள் தியாகிகள் ஆகமாட்டார்கள் அல்லவா!

* * *

தேசியப் போரில் சேர்ந்த தியாகிகளில் பலர் இப்போது சட்டசபைகளிலும் பார்லிமெண்டுகளிலும் அங்கத்தினர்களாயிருக்கிறார்கள். மந்திரிகளாகவும் இருக்கிறார்கள்.

ஆனால் அவர்கள் தியாகிகள் என்பதற்காக அப்பதவிகளை வகிக்கவில்லை. பொது ஜனங்கள் வோட்டுப் பெற்றுப் பதவிகளில் இருக்கிறார்கள்.

எல்லாத் தியாகிகளும் அவர்களைப் போலவே சட்டசபைகளுக்கு நிற்கவும் மந்திரிகளாகவும் உரிமை பெற்றவர்கள். அப்படி நிற்பதையோ மந்திரி பதவிகளுக்கு வருவதையோ யாரும் தடை செய்ய முடியாது.

ஆனால் "நாங்கள் தியாகிகள்; எங்கள் தியாகத்துக்குப் பரிசு கொடுங்கள்" என்று கேட்பது, தங்களைத் தாங்களே குறைத்துக் கொள்வதாகும்.

அரசியல் துர்நோக்கம் கொண்டவர்களின் சூழ்ச்சியில் அகப்பட்டுக் கொள்வது தங்களைப் படுமோசமாகக் கேவலப்படுத்திக் கொள்வதாகும்.

தியாகிகள் இத்தகைய கேவலத்துக்குத் தங்களை ஒருபோதும் ஆளாக்கிக் கொள்ள வேண்டாம்.




அத்தியாயம் 16

## பூங்குழலி பாய்ந்தாள்!

சோழ நாட்டில் பிரயாணம் செய்துள்ளவர்கள் அந் நாட்டின் இயற்கை அமைப்பில் ஒரு விசித்திரத்தைக் கவனித்திருப்பார்கள். சோழ நாட்டைச் சோறுடைய வளநாடாகச் செய்யும் நதிகளில் வெள்ளம் வரும்போது, வெள்ளத்தின் மேல் மட்டம் நதிக்கு இரு புறங்களிலுள்ள பூமி மட்டத்துக்கு மிக்க உயரமாயிருக்கும். இவ்விதம் இருப்பதினாலேதான் நதிகளில் வரும் வெள்ளம் வாய்க்கால்களின் வழியாக வயல்களுக்குப் பாய்வது சாத்தியமாகின்றது.

இந்த நிலையில் வெள்ளத்தை நதிப் படுகையோடு போகச் செய்வதென்பது மிகவும் சிரமமான காரியம் அல்லவா? நதிகளுக்கு இரு பக்கங்களிலும் உயரமான கரைகள் உறுதியாக அமைந்திருக்க வேண்டும். இல்லாவிடில், வெள்ளம் நதியோடு போவதற்குப் பதிலாக, மழை நீர் நாலாபுறமும் பாய்ந்து ஓடுவது போல் ஓடிச் சோழ நாட்டைத் தண்ணீர் தேங்கிய சதுப்பு நிலமாக்கி ஒன்றுக்கும் பயனற்றதாகச் செய்து விடும்.

இதை முன்னிட்டு ஆதி காலத்திலிருந்து சோழ மன்னர்கள் காவேரிக்கும் காவேரியின் கிளை நதிகளுக்கும் கரைகள் அமைப்பதில் மிக்க கவனம் செலுத்தினார்கள். கரிகால் வளவன் ஈழ நாட்டிலிருந்து யுத்தத்தில் தோற்றவர்களைச் சிறைப்படுத்தி வந்து காவேரிக்குக் கரையெடுக்கும் வேலையில் அவர்களை ஈடுபடுத்தினான் என்னும் வரலாற்றை நேயர்கள் அறிந்திருப்பார்கள்.

காவேரியின் கிளை நதிகளில் தண்ணீர் நல்ல மேல் மட்டத்தில் வருவதற்கு உதவியாகவே ஸ்ரீரங்கத்துக்கு ஒரு காத தூரம் கிழக்கே சோழ மன்னர்கள் கல்லணை கட்டினார்கள். அந்த அணையின் மூலம் தண்ணீர் மட்டம் மேலும் உயர்ந்து கிளை நதிகளில் நிறையத் தண்ணீர் பாய்வது சாத்திய மாயிற்று.

இவ்விதம் இயற்கை அமைப்போடு இடைவிடாத செயற்கை முயற்சிகளும் சேர்ந்தே சோழ நாட்டைப் பண்டை நாளிலேயே நீர் வளத்தில் இணையில்லாத நாடாகச் செய்திருந்தன.

சோழ வள நாட்டுக்கு இவ்விதம் இயற்கை விசேஷ உதவிகள் செய்தது

போலவே சில சமயம் விபரீதமான அபாயங்களையும் உண்டாக்கி வந்தது.

சோழ மண்டலத்துக் கடற் கரைக்குக் கிழக்கே கடலில் அடிக்கடி சுழிக் காற்றுகளும் புயற் காற்றுகளும் தோன்றுவதுண்டு. இக் காற்றுகள் சில சமயம் கடற்கரை யோரமாக வடக்கு நோக்கிச் சென்று கிருஷ்ணா - கோதாவரி முகத்துவாரங்களிலோ அல்லது கலிங்க நாட்டிலோ உள்ளே பிரவேசித்துப் பெரு மழை கொட்டச் செய்து கடுமையான சேதங்களை விளைக்கும். வேறு சில சமயங்களில் சோழ நாட்டுக்குள்ளேயே நேரடியாகப் பிரவேசித்து மேற்கு நோக்கி விரைந்து செல்லும். கோடிக் கரைக்கும் கொள்ளிடக் கரையின் முகத்துவாரத்துக்கும் மத்தியில் இவ்விதம் சுழிக்காற்று உள்நாட்டில் பிரவேசிப்பது சரித்திரத்தில் பலமுறை நடந்திருக்கும் சம்பவம். சில சமயம் அச் சுழிக் காற்றுகள் கோர பயங்கர ரூபங் கொண்டு கடலையே பொங்கி எழச் செய்து கடற்கரை யோரமுள்ள ஊர்களையே அழித்து விடும்!

பூம்புகார் என்று வழங்கிய காவேரிப் பட்டினத்தைக் கடல் கொண்டது வெறுங்கதையன்று; சரித்திர ஆதாரங்களினால் நிரூபிக்கக் கூடிய உண்மை நிகழ்ச்சியே யாகும்.

நதிகளில் வெள்ளம் அதிகமாக வரும் போது சிலசமயம் கரைகள் உடைந்து விடுவதும் உண்டு. நதிகளின் நீர்மட்டத்தைக் காட்டிலும் பூமி மட்டம் தாழ்வாயிருக்கும் காரணத்தினால் உடைப்பு எடுத்ததும் சுற்றுப் புறமெல்லாம் ஒரே தண்ணீர் மயமாகி விடும். நதிகளுக்கு அருகிலுள்ள ஊர்கள் முழுகிப் போய் விடும். அப்போதெல்லாம் ஜனங்கள் உயிர் தப்புவதற்கு அக்கம்பக்கத்திலுள்ள கோயில்கள் உதவியாயிருக்கும்.

விஜயாலய சோழனின் மகன் ஆதித்த சோழன் காவேரி உற்பத்தியாகும் ஸஹ்ஸ்ய மலையிலிருந்து அந்த மாநதி கடலில் சங்கமமாகும் இடம் வரையில் நூற்றெட்டு ஆலயங்களை எடுப்பித்தான் என்று சரித்திரம் கூறுகிறது. சாதாரண காலங்களில் கோயில்கள் கடவுளை ஆராதிப்பதற்குப் பயன்படுவது போலவே, பெருவெள்ளம் வந்து உடைப்பெடுக்கும் காலத்தில் மக்கள் கோயில் மண்டபங்களின் மீது ஏறி உயிர் தப்புவதற்கும் உபயோகமா யிருக்கட்டும் என்பது ஆதித்த சோழனின் நோக்கமாக இருக்கலாம் அல்லவா?

நதிக் கரைகளில் உடைப்பு உண்டாவதன் காரணமாகச் சில சமயம் நதிகளின் போக்கே மாறி விடுவதும் உண்டு. அரிசிலாறு, குடமுருட்டி முதலிய நதிகள் இப்படிப் பலமுறை இடம் மாறி, திசை மாறியிருக்கின்றன என்பதைப் பழைய வரலாறுகளிலிருந்து அறியலாம்.

* * *

இனி நம்முடைய வரலாறு நடந்த காலத்துக்கு வருவோம். இலங்கைத் தீவிலிருந்து சோழ நாட்டுக்குப் பார்த்திபேந்திரனுடைய கப்பல் வந்து கொண்டிருந்த போது உண்டான சுழிக்காற்று, வந்தியத் தேவனை முன்னிட்டு இளவரசர் அருள்மொழி வர்மரைக் கடலில் குதிக்கச் செய்த பிறகு, கடலோரமாகவே சென்று கலிங்க நாட்டை அடைந்து மறைந்தது.

ஆனால் அருள்மொழி வர்மர் நாகைப் பட்டினம் சூடாமணி விஹாரத்தில் தங்கியிருந்த போது உண்டான சுழிக் காற்று சோழ நாட்டுக்குள்ளேயே புகுந்து பற்பல அட்டகாசங்களைச் செய்து கொண்டு மேற்கு நோக்கிச் சென்றது. ஒரே இரவில் அது காவேரியின் இருபுறங்களிலும் தன் லீலைகளை நடத்திக் கொண்டு போய் மறுநாள் கொங்கு நாட்டை அடைந்து தேய்ந்து மறைந்தது. அது பிரயாணம் செய்த இடங்களி லெல்லாம் பற்பல சேதங்களை விளைத்தது மட்டுமன்று; அதைத் தொடர்ந்து பெரு மழை கொட்டும் படியாகவும் செய்து கொண்டு போயிற்று. மேற்கே போகப் போக மழை அதிகமாகப் பெய்தது. ஆகவே காவேரியிலும் கொள்ளிடத்திலும் அவற்றிலிருந்து பிரிந்த கிளை நதிகளிலும் மறுநாள் முதல் வெள்ளம் அபரிமிதமாக வந்தது. பல நதிகள் கரைகளை உடைத்துக் கொண்டன. மழையினாலும் நதிகளின் உடைப்பினாலும் சோழ நாடெங்கும் வெள்ளக் காடாகி விட்டது.

ஆனால் இவ்வளவு இயற்கை விபரீதங்களும் சோழ நாட்டு மக்களைப் பீதி கொண்டு செயலிழந்து விடும்படி செய்து விடவில்லை. இவை அடிக்கடி நடைபெறும் நிகழ்ச்சிகளாதலால், அம்மாதிரி நிலைமைகளில் என்ன செய்ய வேண்டும் என்பதை மக்கள் அறிந்திருந்தார்கள். அப்போதைக்குக் கோயில் மண்டபங்களிலோ வேறு உயரமான இடங்களிலோ ஏறிக்கொண்டு உயிர் தப்புவார்கள். வெள்ளம் எவ்வளவு அவசர

மாக வந்ததோ, அவ்வளவு துரிதமாக வடிந்தும் போய்விடும். பிறகு வழக்கம் போல் அவரவர்களின் வேலையில் ஈடுபடு வார்கள். வீடுகளை இழந்தவர்கள் அக்கம் பக்கத்தில் உள்ளவர்களின் உதவியைக் கொண்டு உடனே வீடு கட்டிக் கொள் வார்கள். "ஐயோ! போய் விட்டதே!" என்று தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விடமாட்டார்கள்.

சோர்வு, சோம்பல் என்பதையே அறியாத தன்னம்பிக்கை கொண்ட மக்கள் அக்காலத்தில் சோழ நாட்டில் வாழ்ந்திருந்தார்கள். இல்லாவிடில் இன்றைக்கும் உலகம் கண்டு வியக்கும்படியான அற்புதங்களை அவர்கள் சாதித்திருக்க முடியாது அல்லவா?

• • •

**வா**னதி கோயில் மண்டபத்தின் மீது ஏறாமல் தவறித் தண்ணீரில் விழுந்ததும் முதலில் மண்டபத்தின்மேல் ஏறியிருந்தவர்கள் கவலை அடைந்தார்கள். ஆனால் உடனடியாக அந்தக் கவலை மாறியது. வானதி ஜோதிடர் வீட்டுக் கூரைமீது தொத்திக் கொண்டதைப் பார்த்து அவர்களுக்குத் தைரியம் உண்டாயிற்று. இளைய பிராட்டி ஓரளவு குதூகலமே அடைந்தாள். வானதியை அபாயகரமான நிலைமைகளில் சிக்க வைப்பதிலும் அவள் எப்படிச் சமாளிக்கிறாள் என்று பார்ப்பதிலும் குந்தவை தேவிக்கு எப்போதும் உற்சாகம் இருந்தது. வீராதி வீரனை தன் தம்பியை மணந்து கொள்ளப் போகிறவள் நெஞ்சுத் துணிவுள்ள தீர மங்கையாக வேண்டுமென்பதில் இளைய பிராட்டிக்குச் சிரத்தை இருந்தது. அத்தகைய தீரத்தை வானதியின் உள்ளத்தில் வளர்க்கும் பொருட்டுக் குந்தவை பல உபாயங்களையும் தந்திரங்களையும் கையாண்டு வந்தாள். அந்த உபாயங்கள் நல்ல பலன் அளித்திருக்கின்றன என்ற நம்பிக்கையும் அவளுக்கு ஏற்பட்டிருந்தது.

சில காலமாக வானதி மூர்ச்சையடைந்து விழும் வழக்கத்தை விட்டு விட்டிருந்தாள் அல்லவா?

இப்போது குந்தவையின் தந்திரம் ஒன்றுமின்றித் தெய்வாதீனமாகவே வானதியின் தீரத்தைச் சோதிக்கும் வாய்ப்பு ஏற்பட்டு விட்டது. சுற்றிலும் வெள்ளம் சூழ்ந்திருக்க, ஓர் ஓட்டுக் கூரையின் மேல் வானதி தொத்திக் கொண்டிருந்தாள். அவள் பயப்படாதிருப்பாளா? ஜோதிடரின் சீடன் படகு கொண்டு வந்து அவளைத் தப்புவிக்கும் வரையில் தைரியத்தைக் கைவிடாதிருப்பாளா? — ஆம்; இருப்பாள்! சந்தேகமில்லை! இத்தனை காலமும் அளித்து வந்த பயிற்சி இச்சமயம் பயன்படாமலா போய் விடும்?

இவ்விதம் குந்தவை எண்ணமிட்டுக் கொண்டிருந்த போது, ஆழ்வார்க்கடியான், "தாயே! இது என்ன? கூரை நகர்வதாகத் தோன்றுகிறதே?" என்றான்.

"உன் கண்ணிலே ஏதோ கோளாறு! வெள்ளம் நகர்ந்து செல்கிறது; கூரை நகர்வதாகத் தோன்றுகிறது!" என்றாள் குந்தவை. இப்படிச் சொல்லும்போதே அவளுடைய உள்ளத்திலும் சந்தேகம் உதித்து விட்டது. அதன் அறிகுறி முகத்திலும் காணப்பட்டது.

"அம்மா! நன்றாய்ப் பாருங்கள்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஐயோ! இது என்ன விபரீதம்?" என்றாள் இளைய பிராட்டி.

"ஜோதிடரே! உம்முடைய சீடன் சீக்கிரம் படகுடன் வருவானா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"போதும்! போதும்! ஜோதிடரையும் அவருடைய சீடனையும் நம்பியது போதும்! திருமலை! உன்னால் வானதியைக் காப்பாற்ற முடியுமா என்று பார்! இல்லாவிட்டால், நானே வெள்ளத்தில் குதிக்க வேண்டியதுதான்! வானதிக்கு ஏதேனும் நேர்ந்து விட்டால், அப்புறம் நான் ஒரு கணமும் உயிர் வைத்திருக்க மாட்டேன்!" என்றாள்.

"தாயே! அபாயம் நேரும் காலத்திலே தான் நிதானத்தை இழக்கக் கூடாது. இது தங்களுக்குத் தெரியாதது அல்ல. கொடும்பாளூர் இளவரசிக்கு உதவி செய்வதற்காக என் உயிரைக் கொடுக்கவும் சித்தமாயிருக்கிறேன். அதனால் பயன் ஏற்பட வேண்டுமே? படகு இல்லாமல் நான் மட்டும் நீந்திச் சென்றால் அந்தக் கூரையில் போய் நானும் தொத்தி ஏறிக் கொள்ளலாம். கொடும்பாளூர் இளவரசியைத் தாங்கும் கூரை என்னையும் சேர்த்துத் தாங்குமா? அல்லது இரண்டு பேரையும் வெள்ளத்தில் அமுக்கிவிட்டுக் கூரையும் மூழ்கிப் போய் விடுமா? இதைப் பற்றிச் சிறிது யோசிக்க வேண்டும்......"

பூங்குழலியின் சிரிப்புச் சத்தத்தைக் கேட்டு அவளை இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

"இந்த வீர வைஷ்ணவர் யோசித்து முடிப்பதற்குள் கொடும்பாளூர் இள

வரசி வாழ்க்கை முடிந்து விடும்!" என்றாள் பூங்குழலி.

"அப்படி நேர்ந்தால் இந்த ஓடக்காரப் பெண் சந்தோஷப் படுவாள்!" என்று ஆழ்வார்க்கடியான் கூறியதும் பூங்குழலியின் முகத்தில் ஆத்திரம் கொதித்தது.

திருமலை மேலும் தொடர்ந்து கூறினான் :—"ஆனால், தேவி! அவ்விதம் ஒன்றும் நேரப் போவதில்லை! ஆலிலை மேல் பள்ளி கொண்டு அகில மெல்லாம் காப்பாற்றும் திருமால் வானதியையும் காப்பாற்றுவார். மச்ச கூர்ம வராக அவதாரங்கள் எடுத்து இந்தப் பூவுலகைக் காப்பாற்றிய ஸ்ரீமந் நாராயணன் கொடும்பாளூர் இளவரசியையும் காப்பாற்றுவார்! ...... அதோ பாருங்கள்! ஜோதிடர் சீடன் படகுடன் வருகிறான்!"

ஆழ்வார்க்கடியான் சுட்டிக் காட்டிய திசையில் உண்மையாக ஒரு படகு வந்து கொண்டிருந்தது. அப்படகு வெள்ளத்தின் வேகத்தை எதிர்த்து இவர்கள் இருந்த கோயில் மண்டபத்தை நோக்கி மெதுவாக வந்து கொண்டிருந்தது.

வானதி ஏறியிருந்த கூரையோ வெள்ளத்தோடு போய்க் கொண்டிருந்தது.

படகு இங்கே வந்து இவர்களை ஏற்றிக் கொண்டு போவதற்கு வெகு நேரம் ஆகிவிடும். அதற்குள் வானதி அதிக தூரம் போய் விடுவாள். கண்ணுக்கு மறைந்தாலும் மறைந்து விடுவாள்.

இதையெல்லாம் எண்ணி மண்டபத்தின் மேல் நின்றவர்கள் படகில் வந்த ஜோதிடர் சீடனைப் பார்த்து உரத்துக் கத்தினார்கள்; சமிக்ஞைகளும் செய்து பார்த்தார்கள். தன்னைச் சீக்கிரம் வரச் சொல்கிறார்கள் என்று எண்ணிக் கொண்டு அவன் படகை விரைவாகச் செலுத்தி வர முயன்றான்.

பூங்குழலி அப்போது குந்தவையைப் பார்த்து, "தேவி! எனக்கு அனுமதி கொடுங்கள்! நான் நீந்திப் போய்ப் படகை வழிமறித்து அழைத்துச் சென்று கொடும்பாளூர் இளவரசியை ஏற்றி வருகிறேன்!" என்றாள்.

குந்தவை சிறிது தயங்கினாள். பூங்குழலி கையைக் கொடுக்கப் போய்த்தான் வானதி வெள்ளத்தில் விழுந்தாள் என்பது அவளுக்கு நினைவு இருந்தது.

"தேவி! என்னை நம்புங்கள். என்னுடைய அஜாக்கிரதையினால்தான் இளவரசி வெள்ளத்தில் விழுந்தாள். ஆகையால் அவரை மீட்பது என்னுடைய கடமை!" என்று பூங்குழலி கூறினாள்.

"பெண்ணே! உன்னை நான் நம்புகிறேன். ஆனால் வானதியைத்தான் நம்பவில்லை!" என்றாள் குந்தவை.

"ஆகா! நான் இருக்கும் படகில் ஒரு வேளை ஏற மறுத்து விடுவார் என்கிறீர்களா? அப்படியானால் அவரை ஏற்றி விட்டு நான் இறங்கிக் கொள்வேன்!" என்று சொல்லிக் கொண்டே பூங்குழலி வெள்ளத்தில் பாய்ந்தாள். படகை நோக்கி விரைந்து சென்றாள்.

குந்தவை ஜோதிடரைப் பார்த்து, "ஐயா! ஜோதிடரே! உம்முடைய சாஸ்திரத்தில் ரொம்ப நம்பிக்கை வைத்திருந்தேன். இன்றைக்கு அந்த நம்பிக்கையை இழந்து விட்டேன்!" என்றாள்.

"ஆனால் எனக்கு இன்றைக்குத்தான் பூரண நம்பிக்கை ஏற்பட்டது, தேவி! கொடும்பாளூர் இளவரசியின் ஜாதகப் பிரகாரம் அவருக்கு இன்று பெரிய கண்டம் வரவேண்டும். பழுவேட்டரையர் மூலம் அது வருமோ என்று நினைத்தேன். அப்படி வராமற் போகவே ஆச்சரியமடைந்தேன். வேறு விதமாகக் கண்டம் வந்தது. இளவரசி இந்தக் கண்டத்துக்குத் தப்பிப் பிழைப்பார்! ஆகா! அவருடைய அபூர்வமான கை ரேகைகள்! அவர் விஷயமாக நான் சொல்லியிருப்பதெல்லாம் நிறைவேறும்! அதைப் பற்றிச் சந்தேகமில்லை!" என்றார்.

"அழகாய்த்தானிருக்கிறது. அது எப்படி நிறைவேறும்? வானதி இந்தக் கண்டத்துக்குத் தப்பிப் பிழைத்தாலும் உம் ஜோசியம் நிறைவேறப் போவதில்லை. சற்றுமுன் உம்முடைய வீட்டில் அந்தப் பெண் செய்த சபதத்தை நீர் கேட்கவில்லையா?" என்றாள் குந்தவை.

"யார் என்ன சபதம் செய்தாலும், என் ஜோசியம் நிறைவேறியே தீரும். அப்படி நிறைவேறாவிட்டால், என்னிடமுள்ள ஜோதிட ஏடுகளை யெல்லாம் காவேரி நதியில் எறிந்து விடுகிறேன்! இது என் சபதம்!" என்றார் ஜோதிடர்.

அப்போது ஆழ்வார்க்கடியான், "ஜோதிடரே! உமது ஏடுகளை நீரே எறியும் வரையில் காவேரி மாதா காத்திருக்கவில்லை. அவளே கொண்டு போய் விட்டாள்!" என்றான்.

ஜோதிடர் அவன் கூறியதன் உண்மையை உணர்ந்து திகைத்து நின்றார். "ஆயினும், என் ஜோதிடம் பலிக்காமற் போகாது!" என்று தம் வாய்க்குள்ளே முணுமுணுத்துக் கொண்டார்.

## அத்தியாயம் 17

# யானை எறிந்தது!

சென்ற அத்தியாயங்களில் கூறிய சம்பவங்கள் நடந்த அன்றைக்கு முதல் நாள், நாகைப்பட்டின நகர மாந்தரின் விருந்ினராக இளவரசர் அருள்மொழி வர்மரை நாம் விட்டு விட்டு வந்தோம். விருந்தெல்லாம் முடிந்த பிறகு அலங்கரித்த யானைமீது ஏறி இளவரசர் புறப்பட்டார். எண்ணற்ற மக்கள் அவரைத் தொடர்ந்து தஞ்சைக்கு வருவோம் என்று கிளம்பினார்கள். அன்றிரவு இளவரசரும் அவருடன் வந்த ஜனங்களும் திரு ஆரூர் வந்து சேர்ந்தார்கள்.

திரு ஆரூர் மக்கள் இளவரசர் வருகையை முன்னதாக அறிந்திருந்தபடியால், அவருக்கு இராஜரீக வரவேற்பு அளித்து இராஜோபசாரங்கள் செய்தார்கள். பழம் பெரும் பதியான திரு ஆரூரில் குணவாசலிலிருந்து குடவாசல் வரையில் மக்கள் திரண்டு நின்றார்கள். நாலு இராஜ வீதிகளிலும் எள்ளுப் போட்டால் எள்ளு விழாதபடி ஜனக் கூட்டம் நிறைந்திருந்தது. வீடுகளின் முகப்புகள் எல்லாம் தோரணங்களினால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. திரு ஆரூர்ச் சோழ மாளிகையையும் அதிகாரிகள் அலங்கரித்திருந்தார்கள். இளவரசருக்கு மட்டுமின்றி அவருடன் வரும் திரளான மக்களுக்கும் விருந்தளிக்க ஏற்பாடு செய்திருந்தார்கள்.

முதல் நாளிரவு திரு ஆரூர் வழியாகவும் கொடும் புயல் சென்றிருந்தது. ஆனால் இளவரசர் வருகையில் உண்டான குதூகல கோலாகலப் புயல் முதல் நாள் அடித்த புயலை அடியோடு மறக்கச் செய்து விட்டது. வீதிகளிலெல்லாம் வாத்திய முழக்கங்களும் ஆடல்பாடல்களும் குரவைக் கூத்துக்களும் பொம்மையாட்டங்களும் வீர முழக்கங்களுடன் கூடிய கத்தி விளையாட்டு—கழி விளையாட்டுக்களும் நடந்து கொண்டிருந்தன.

தஞ்சாவூர்ச் சோழ குலத்தினர் தில்லையம்பலத்தில் ஆடும் நடராஜப் பெருமானின் கோயிலுக்கு அடுத்தபடியாகத் திரு ஆரூரில் உள்ள தியாகராஜப் பெருமானின் ஆலயத்திடம் விசேஷ பக்தி கொண்டு, ஏராளமான மானியங்கள் அளித்திருந்தார்கள். ஆனால் இளவரசர் அருள்மொழிவர்மர் மட்டும் அது வரையில் திரு ஆரூர் வந்ததில்லை. ஆகையால் கோயிலுக்கு இளவரசர் அவசியம் வர வேண்டுமென்று ஆலயத்தார் வற்புறுத்தினார்கள். இளவரசரும் கோயிலுக்குப் போனார். பல காரணங்களினால் அவருடைய உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருந்தபடியால் இறைவனுடைய திருக்கோலங்களில் அவருடைய மனம் பூரணமாக ஈடுபட முடியவில்லை. அர்ச்சனை ஆராதனைகள் முடிந்து இறைவனுடைய பிரசாதங்களும் பெற்றுத் திரும்பும் சமயத்தில், ஆலயத்தார்களைப் பார்த்து இளவரசர் "இந்தக் கோயிலின் இறைவருக்குத் தியாகராஜர் என்று ஏன் பெயர் வந்தது?" என்று கேட்டார்.

தேவர்களுக்குள் மகா தேவரும் மூவர்களில் முதல்வருமான சிவபெருமான் மூன்று உலகங்களிலும் வாழும் உயிர்கள் உய்யும் பொருட்டுச் செய்த தியாகங்களை ஆலயத்தார் எடுத்துச் சொன்னார்கள். மூன்று உலகங்களையும் ஆக்கவும் அழிக்கவும் வல்ல பெருமான் தம்முடைய பக்தர்களுக்கு அருள் புரியுமாறு மேற்கொண்ட கஷ்டங்களைப் பற்றிக் கூறினார்கள். உயிர்கள் உய்யும் பொருட்டுத் தவக்கோலம் பூண்டு மயானத்தில் தவம் புரிந்ததைப் பற்றிச் சொன்னார்கள். அந்தத் தவத்தையும் கைவிட்டுத் தேவர்களின் நன்மைக்காக உமையை மணந்தது பற்றிக் கூறினார்கள். எல்லா உலகங்களுக்கும் இறைவர் பிக்ஷாடன மூர்த்தியாகத் தோன்றிப் பிச்சை எடுத்த வரலாற்றைக் கூறினார்கள். தில்லை அம்பலத்தில் வந்து ஆடியது பற்றிச் சொன்னார்கள். பிட்டுக்கு மண் சுமந்து பாண்டிய மன்னனிடம் பிரம்பினால் அடிபட்டது பற்றியும் கூறினார்கள்.

அத்தகைய தியாகராஜப் பெருமான் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள திரு ஆரூரில் பழைய காலத்தில் அருள்மொழிவர்மரின் முன்னோர்கள் வசித்து வந்ததையும், மனு நீதிச் சோழன் பசுவுக்கு நீதி வழங்கும் பொருட்டுத் தன் அருமை மகனையே தியாகம் செய்த அற்புதத்தையும் நினைவூட்டினார்கள்.

இவையெல்லாம் அருள்மொழிவர்மரின் உள்ளத்தில் நன்கு பதிந்தன. இது காறும் புத்த பகவானுடைய தியாகத்தை நினைந்து நினைந்து வியந்து கொண்டிருந்த இளவரசர், தேவ தேவரான சிவபெருமானைத் தியாக மூர்த்தியாகச் சித்தரிக்கும் வரலாறுகளைப் பற்றி எண்ணி

எண்ணி வியக்கத் தொடங்கினர். மேலைத் தேசங்களிலே கடவுளின் திருப் புதல்வராகப் போற்றப்படும் அவதார புருஷர் மக்களின் நலத்துக்காகச் சிலு வையில் அறையப் பட்டு மாண்டார் என்ற வரலாறும் அவர் காதுக்கு எட்டி யிருந்தது. இவற்றை யெல்லாம் பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க, மனிதனுக்குத் தெய் வத்தன்மை அளிக்கக் கூடியது தியாகந் தான் என்னும் எண்ணம் அவர் மன தில் வேரூன்றியது. ஆதலின் அவரைச் சூழ்ந்துள்ள மக்கள் அனைவரும் தம் மீதுள்ள அன்பின் மிகுதியினால் தம்மைத் தஞ்சைச் சிங்காதனத்தில் அமர்த்திப் பட்டம் சூட்ட விரும்புவது பற்றி அவர் மனம் அளவில்லாத வேதனை அடைந் தது. இவர்களுடைய அன்புச் சிறையி லிருந்து தப்புவது எப்படி என்பது பற்றி யும் தீவிரமாக யோசிக்கலானார்.

ஆலய வழிபாட்டுக்குப் பிறகு திரு ஆரூர் மக்கள் இளவரசருக்குப் பெரு விருந்து அளித்தார்கள். அவரை உபசரிக் கும் பொருட்டுப் பற்பல கேளிக்கைகளை நடத்தினார்கள். அவற்றிலெல்லாம் இள வரசரின் உள்ளம் ஈடுபடாவிட்டாலும் வெளிப்படையாக உற்சாகம் காட்டி ஏற்றுக் கொண்டார்.

பின்னர், ஏறக்குறைய நடுநிசியில் இளவரசர் சோழ மாளிகைக்கு வந்து சேர்ந்தார். அங்கே சில விபரீதமான செய்திகள் காத்திருந்தன. தஞ்சைக்கு மேற்கே பலமான மழை பெய்தபடியால் காவேரியிலும் கொள்ளிடத்திலும் அவற் றின் கிளை நதிகளிலும் பெரு வெள்ளம் வந்து பல இடங்களில் கரை உடைத்துக் கொண்டதாகவும், ஒரே வெள்ளக் காடாக இருப்பதால் மேற்கொண்டு பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்து வது கஷ்டமா யிருக்குமென்றும் சொன் னார்கள். இரண்டு நாள் திரு ஆரூரில் தங்கி வெள்ளம் வடிந்த பிறகு புறப்படு வது உசிதம் என்றும் தெரிவித்தார்கள். இதற்கு இளவரசர் இஷ்டப்படவில்லை. தஞ்சையை உடனே அடைய வேண்டு மென்ற பரபரப்பு அவர் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. நதி உடைப்புக் களும் வெள்ளமும் அவருடைய அந்த ஆர்வத்தைத் தடை செய்துவிடக்கூடுமா, என்ன? ஆம்; இத்தனை ஜனங்களும் பரிவாரங்களும் புடை சூழப் போவதா யிருந்தால் பிரயாணம் தடைப் படத்தான் செய்யும். தாம் மட்டும் தனியே யானை மீது ஏறிச் சென்றால் பிரயாணம் தடைப் படவேண்டிய அவசியமில்லை. யானைக்கு அண்டாத ஆழம் உடைய நதி எதுவும் தஞ்சைக்குப் போகும் வழியில் இல்லை. அப்படி யிருந்தாலும் இளவரசருக்கு அதைப்பற்றிக் கவலை கிடையாது. தண் ணீரிடத்தில் அவருக்கு எப்போதும் அச்சம் ஏற்பட்டதில்லை. பொன்னி நதி அவருடைய அன்னைக்கு மேலான அன் புடையவள் ஆயிற்றே? சின்னஞ்சிறு குழந்தைப் பிராயத்தில் தான் மூழ்கிப் போகாமல் காப்பாற்றிய காவேரித் தாய் இப்போது தன்னைக் காப்பாற்ற மாட்டாளா?

இந்தப் பெருந் திரளான மக்களிட மிருந்து எப்படித் தப்பித்துச் செல்வது என்பதுதான் கேள்வி. அயோத்தியின் மக்களிடமிருந்து இராமர் இரவுக்கிரவே தப்பிச் சென்றது பொன்னியின் செல்வ ருக்கு நினைவு வந்தது. அவ்விதமே அவரும் இரவில் ஜனங்கள் தூங்கும் சமயத்தில் போய் விட்டால் என்ன? எல்லாவற்றுக்கும் யானைப் பாகனிடம் எந்த நேரத்திலும் புறப்பட ஆயத்தமா யிருக்கும்படி சொல்லி வைப்பது நல்லது.

இந்த எண்ணம் தோன்றியதும் யானைப் பாகனை அழைத்து வரும்படி அரண்மனைச் சேவகனுக்கு இளவரசர் கட்டளை யிட்டார். சேவகன் வீதிக்குச் சென்று பார்த்து விட்டு உடனே திரும்பி வந்தான். யானை மட்டும் வாசலில் கட்டி யிருக்கிறதென்றும் யானைப் பாகனைக் காணோம் என்றும் தெரிவித்தான்.

"ஒருவேளை வீதிகளில் நடைபெறும் ஆடல்பாடல் களியாட்டங்களைப் பார்க் கப் போயிருப்பான். அவன் திரும்பி வந்ததும் அழைத்து வா! அல்லது யாரையாவது சிலரை அனுப்பித் தேடிப் பார்க்கச் சொல்!" என்று இளவரசர் கட்டளை யிட்டார்.

"ஆகட்டும், அரசே! படகோட்டி முருகய்யன் என்பவன் ஒருவன் மாளிகை வாசலில் வந்து காத்திருக்கிறான். தங்களை அவசரமாகப் பார்க்க வேண்டும் என்று அவன் பிடிவாதம் பிடிக்கிறான்!" என்றான் சேவகன்.

படகோட்டி முருகய்யனை இத்தனை நேரம் மறந்திருந்தது பற்றி இளவரசர் பச்சாத்தாபங் கொண்டார். தாம் இரகசியமாகத் தப்பிச் செல்வதற்கு அவன் ஒருவேளை உதவியா யிருந்தாலும் இருப்பான். அவனை உடனே தம்மிடம் அனுப்பும்படி அரண்மனைச் சேவகனுக் குக் கட்டளை யிட்டார்.



மூருகய்யன் இளவரசரிடம் வந்ததும் அவருடைய காலில் விழுந்து தேம்பி அழத் தொடங்கினான். இந்த மூட பக்தனைச் சமாதானப் படுத்துவதும் அவனிடம் விஷயங்களைக் கிரஹிப்பதும் சிரமமான காரியந்தான். ஆயினும் செய்ய வேண்டும்.

மூருகய்யன் தனது துயரத்தின் காரணத்தைக் கூறினான். அதன் விவரமாவது :—

மூருகய்யன் நாகைப்பட்டினத்திலேயே தன் மனைவியிடமிருந்து பிரிந்து விட்டான். திருஆரூர் வந்து சேர்ந்த பிறகு அவளும் அங்கு வந்திருக்கிறாளா என்று பார்ப்பதற்காக ஜனக்கூட்



டத்தினிடையில் அலைந்து சுற்றினான். ஒரு ஜாம நேரம் தேடியபிறகு இராஜ வீதியிலிருந்துபிரிந்து சென்ற ஒரு சந்தின் முனையில் அவன் மனைவியும் இளவரசர் ஏறிவந்த யானையைச் செலுத்திய யானைப் பாகனும் போவதைக் கண்டான். அவர்கள் சந்தில் புகுந்ததும் மிக வேகமாக நடந்து சென்றார்கள். முருகய்யனும் தொடர்ந்து போனான். கடைசியாக ஒரு வீட்டின் வாசலில் நின்றார்கள். அங்கே இன்னொரு மனிதன் அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அவனும் இவர்களுடன் சேர்ந்து கொண்டான். பிறகு மூன்று பேரும் சேர்ந்து போனார்கள். முருகய்யனுக்கு ஏதேதோ சந்தேகங்கள் உதித்தன. தன் மனைவியின் ஒழுக்கத்தைப் பற்றியே ஐயம் கொண்டான். உண்மையைக் கண்டு பிடிக்க ஆத்திரம் அடைந்தான். ஆகையால் அவர்களைப் போய்ப் பிடித்துவிடாமல் பின்னாலேயே போனான். அவர்கள் ஊரைத் தாண்டி வாய்க்கால்—வயல் வரப்புகள் வழியாகச் சென்று கடைசியில் ஒரு மயானத்தை அடைந்தார்கள். முருகய்யனுடைய உள்ளம் பயங்கரத்தை அடைந்தது. ஆயினும் அவன் விடாமல் சென்று மயானத்தில் இருந்த ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்து கொண்டான். ராக்கம்மாளுடனும் யானைப்பாகனுடனும் வழியில் சேர்ந்து கொண்ட மனிதன், மயானத்தில் சாம்பலைப் பூசிக் கொண்டு ஏதேதோ பயங்கரமான மந்திரங்களை உச்சரித்தான். பிறகு யானைப் பாகனைப் பார்த்து, "நாளைக் காலையில் உன் உயிருக்கு ஆபத்து வரப்போகிறது! ஜாக்கிரதையாயிருந்து பிழை!" என்றான். யானைப் பாகன் கதி கலக்கத்துடன், "என்ன ஆபத்து? எவ்விதம் வரும்? தெரிந்தால் அல்லவோ பிழைக்கலாம்?" என்றான். மந்திரவாதி "யானைக்குத் திடீர் என்று மதம் பிடிக்கும்! நீ அருகில் நெருங்கியதும் உன்னைக் கீழே தள்ளிவிட்டு ஓடும்! உன்னால்தான் யானைக்கு மதம் பிடித்தது என்று ஜனங்கள் எண்ணுவார்கள். உன் கையிலுள்ள அங்குசத்தைப் பிடுங்கி உன்னைக் கொன்று விடுவார்கள்!" என்றான் மந்திரவாதி. "ஐயையோ! தப்புவதற்கு வழி என்ன?" என்று யானைப் பாகன் கேட்டான். "நாளைக் காலையில் யானையிடம் நெருங்காமலிருந்து விடு!" என்றான் மந்திரவாதி. "அது எப்படி முடியும்? பின்னால் இராஜ தண்டனைக்கு உள்ளாக நேரிடுமே?" என்று யானைப் பாகன் அலறினான். "அப்படியானால், என் வீட்டுக்கு வா! மந்திரித்த கவசம் தருகிறேன். அதை அணிந்து கொண்டு போ! கையில் அங்குசத்தைக் கொண்டு போகாதே!" என்றான் மந்திரவாதி. "அப்படியே ஆகட்டும், ஐயா! இளவரசருக்கு ஏதேனும் ஆபத்து நேருமா?" என்று யானைப்பாகன் கேட்டான். "அது எப்படிச் சொல்ல முடியும்? இளவரசர் வந்து கேட்டால் அல்லவோ சொல்லலாம்?" என்றான் மந்திரவாதி.

முருகய்யன் அதற்குமேல் அங்கே நிற்க மனமில்லாமல் ஓடி வந்துவிட்டான். நாளைக் காலையில் யானைக்கு மதம் பிடிக்கப்போகும் செய்தியை இள



வரசரிடம் சொல்லி எச்சரிப்பதற்காகவே முக்கியமாக ஓடிவந்தான்......

இதையெல்லாம் கூறிவிட்டு முருகய்யன் மீண்டும் தேம்பி அழுதான்.

"அப்பனே! ஏன் அழுகிறாய்? நீதான் சமயத்தில் வந்து எச்சரிக்கை செய்து விட்டாயே? இனி, நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்றார் பொன்னியின் செல்வர்.

"ஐயா! இதிலெல்லாம் என் மனைவி சம்பந்தப்படுவது பற்றித்தான் வருந்துகிறேன். ராக்கம்மாளைப் பற்றி என்ன நினைப்பது என்றே எனக்குத் தெரியவில்லை. அவளைப் பற்றிய பழைய சந்தேகங்கள் திரும்பி வருகின்றன!" என்றான் முருகய்யன்.

"அவளை நான் திருத்தி விடுகிறேன். நீ கவலைப்படாதே! உடனே, திரும்பிப் போ! யானைப் பாகனை எப்படியாவது தேடிப் பிடித்து அழைத்துக் கொண்டு வா!" என்றார் இளவரசர்.

படகோட்டி முருகய்யன் போன பிறகு பொன்னியின் செல்வர் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். முருகய்யன் கண்டது, கேட்டது இவற்றின் பொருள் என்னவாயிருக்கும் என்று ஊகத்தினால் உணர முயன்றார். பழுவேட்டரையர்களின் உத்தேசம், பாண்டிய நாட்டுச் சதிகாரர்களின் முயற்சி,—இவற்றைக் குறித்து இளைய பிராட்டி கூறியதையெல்லாம் நினைவு படுத்திக் கொண்டார். அந்தச் சதிகாரர்களின் முயற்சியில் இது ஒன்றாயிருக்கலாம். அல்லது வெறும் மூடத்தனமாகவும் இருக்கலாம். எப்படியிருந்தாலும், காலையில் தாம் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி ஒரு முடிவுக்கு வந்தார். பிறகு, நிம்மதியாக நித்திரையில் ஆழ்ந்தார்.

மறுநாள் அதிகாலையிலேயே எழுந்து பிரயாணத்துக்கு ஆயத்தமானார். மாளிகை வாசலுக்கு வந்தார். அங்கே கட்டியிருந்த யானை இளவரசரைப் பார்த்ததும் ஆதரவோடு துதிக்கையை நீட்டி அவரைத் தடவிக் கொடுத்துக் கொஞ்சியது. "யானைக்கு மதம் பிடிக்கும்" என்று மந்திரவாதி கூறியதாக முருகய்யன் சொன்னது இளவரசருக்கு நினைவு வந்தது. மதம் பிடிக்கும் என்பதற்கு அறிகுறி எதுவும் இல்லை.

"யானைப் பாகன் எங்கே?" என்று இளவரசர் உரத்த குரலில் கேட்டார். உடனே பல குரல்கள் "யானைப் பாகன் எங்கே?" என்று எதிரொலி செய்தன.

இளவரசரைப் போலவே அதிகாலையில் பிரயாணம் தொடங்க ஆயத்தமாக ஜனங்கள் திரண்டு வந்திருந்தார்கள். அவர்களிடையே அகப்பட்டுக் கொண்டு முன்னால் வர முடியாமல் திணறிக் கொண்டிருந்த முருகய்யனைப் பார்த்தார். அவனை நோக்கிச் சமிக்ஞை செய்யவே ஜனங்கள் அவனுக்கு வழி விட்டார்கள். முருகய்யன் அருகில் வந்து இரவில் வெகுநேரம் தேடிய பிறகு தன் மனைவியை மாத்திரம் கண்டு பிடித்ததாகவும், அவள் தான் மயானத்துக்குப் போனதையெல்லாம் அடியோடு மறுத்து, முருகய்யனுக்குப் பித்துப் பிடித்து விட்டது என்று கூறியதாகவும், யானைப்பாகன் அகப்படவே இல்லை என்றும் சொன்னான்.

"அதைப் பற்றிக் கவலை இல்லை, முருகய்யா! யானையின் காலைக் கட்டியுள்ள சங்கிலியை அவிழ்த்து விடு!" என்றார் இளவரசர்.

முருகய்யன் அவ்வாறு அவிழ்த்து விட்டுக் கொண்டிருக்கும் போதே, "இதோ யானைப்பாகன் வந்து விட்டான்!" என்று ஒரு குரல் கேட்டது. "வந்து விட்டான்! வந்து விட்டான்!" என்று பல குரல்கள் ஒலித்தன.

கையில் அங்குசத்துடன் யானைப் பாகன் ஓடி வந்து கொண்டிருந்தான். கூட்டத்திலிருந்தவர்கள் அவசர அவசரமாக விலகிக் கொண்டு அவனுக்கு வழி விட்டார்கள்.

பொன்னியின் செல்வரும் "நல்ல வேளை!" என்று பெருமூச்சு விட்டு, யானைப்பாகன் ஓடிவந்து கொண்டிருந்த திசையை நோக்கினார்.

பாவம்! ஒரு நாள் இரவு அனுபவத்தில் அவன் எவ்வளவு மாறிப் போயிருக்கிறான்? பயப்பிராந்தி கொண்டவனாக அல்லவா தோன்றுகிறான்?

ஒரு கையில் அங்குசம் வைத்துக் கொண்டிருந்த யானைப் பாகன் யானையின் அருகில் வந்து அதன் துதிக்கையை இன்னொரு கையினால் தொட்டான்.

யானை உடனே அவனைத் துதிக்கையால் சுழற்றிப் பிடித்தது. தலைக்கு மேலே தூக்கியது. கேட்டவர்கள் பீதி கொள்ளும்படியாகப் பிளிறி விட்டு, யானைப் பாகனை வீசி எறிந்தது!

யானைப்பாகன் வெகு தூரத்திலே போய் விழுந்தான். அவன் கையில் வைத்திருந்த அங்குசம் இன்னும் அப்பாலே போய் விழுந்தது.

"யானைக்கு மதம் பிடித்து விட்டது!" என்று பயங்கரம் நிறைந்த குரல் அந்த ஜனக் கூட்டத்திலே எழுந்தது.

சுற்றிலும் நின்ற ஜனங்கள் நாலா பக்கமும் சிதறி ஓடத்தொடங்கினார்கள்!

Parry's

CORONATION
ASSORTMENT

மேன்மை தங்கிய ராணி
2ம் எலிஜபெத்தின் பட்
டாபிஷேக ஞாபகார்த்த
மாக பாரீஸ் மிட்டாய் தயா
ரிப்பாளர்கள் பெருமையுடன்
அளிக்கும் "பட்டாபிஷேக கதம்
பம்." அழகான பெட்டியில் உள்ள
இந்த மிட்டாய்கள் சிக்கனமா
னவை; சரித்திர முக்கியத்வம்
வாய்ந்த இந்த சந்தர்ப்
பத்துக்கு ஏற்றவை. உங்
கள் கடைக்காரரிடம் ரூ.
2-8-0க்கே கிடைக்கும்.




Parry's பாரீஸ்

MG 24

## பட்டாபிஷேக கதம்பம்

தயாரிப்பாளர் : ஈஸ்ட் இந்தியா டிஸ்டிலரீஸ் & ஷுகர் பாக்டரீஸ் லிட்., நெல்லிக்குப்பம், தென் இந்தியா

# சோஷலிஸம் வரவேண்டும்!

மே மாதம் பத்தாந்தேதி 'கல்கி' இதழில் தாங்கள் எழுதியுள்ள "சோஷலிஸம் வர வேண்டும்! இன்றேல் கம்யூனிஸம் வந்தே தீரும்!" என்ற கட்டுரை அரசியலில் ஈடு பாடுடையவர்களின் சிந்தனையைக் கிளறு வதாக அமைந்துள்ளது.

என்னுடைய பதினேந்தாவது வயதில் அரசியலில் ஈடுபட்டு, கல்லூரிப் படிப்புத் தடைப்பட்டதிலிருந்து சோஷலிஸ்ட் கட்சி யிடமும், அதனுடைய தலைவர்களிடமும், கொள்கைகளிலும் நம்பிக்கை கொண்டு, பல ஆண்டு காலம் கட்சிக்காக முழு நேர ஊழியனாகப் பணியாற்றியவன் என்ற முறை யிலே சில விஷயங்களைத் தங்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறேன்.

சோஷலிஸ எண்ணத்தை இந்திய இளைஞர் களின் இதயத்திலே ஏற்படுத்தியவர் நேருஜி என்பதை யாரும் மறுக்க முடியாது. சுதந் திரப் பாதையிலே கோடிக் கணக்கான மக்களை வழி நடத்திச் சென்ற லட்சிய வீரர் நேரு, சோஷலிஸப் பாதையிலும் சுதந்திர இந்தியாவை நடத்திச் செல்வார் என்ற நம்பிக்கை பொய்த்துப் போனதினால் தான் சோஷலிஸ்ட் கட்சி தனிக் கட்சியாக இயங்க நேர்ந்தது.

தாங்கள் கூறுவது போல் மந்திரி சபையில் மட்டுமல்ல—மகாத்மா கட்டி வளர்த்த காங் கிரஸிலும் ஸ்ரீ தேஷ்முக் போன்ற பிற்போக் காளர்கள், முன்னேற்றப் பாதையில் செல்ல விரும்பும் நேருவுக்கு முட்டுக்கட்டை போடுவ தால்தான் அவரது லட்சியம் ஈடேறாத நிலையிலே இருந்து வருகிறது. ஸ்ரீ ஜெயப் பிரகாஷ் நாராயண் போன்ற தன்னலமற்ற தலைவர்கள் நேருவுக்குப் பக்க பலமாக இருந் திருந்தால் சோஷலிஸப் பாதையில் இந்தியா வெகு தூரம் முன்னேறியிருக்கும். இன்றைய தினம் சோஷலிஸம் நடைமுறைக்கு உதவாத தத்துவார்த்த வாதமாக நேருவுக்குப் படுகிற தென்றால் சூழ்நிலை தான் அத்தகைய எண் ணத்தை அவருக்கு ஏற்படுத்தியிருக்க வேண்டும்.

சமீபத்தில் நேருஜி ஜெயப்பிரகாஷ் நாராயணை ஒத்துழைக்குமாறு அழைத்து அதன் பேரில் பேச்சு வார்த்தை நடத்திய போது, ஒத்துழைப்புக்கு அடிப்படையாக ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயண் சமர்ப்பித்த 14 அம்சத் திட்டம், காங்கிரஸினுடைய பிரகடனப்படுத்தப்பட்ட லட்சியத்துக்கு அணுவளவும் மாறுபட்டது அல்ல. ராம்கார் காங்கிரஸில் சமர்ப்பிக்க ஜெயப்பிரகாஷ் வகுத்த திட்டம்தான் அது. மகாத்மாவின் ஆசியும் அங்கீகாரமும் பெற்றது. 'காங்கிர ஸின் கொள்கைக்கு விரோதமாகவோ, நேருஜியின் லட்சியங்களுக்கு மாறாகவோ அதிலே எதுவும் கிடையாது. ஆயினும் உடனடியாக நடைமுறையில் சாத்தியமில்லை என்பதாகச் சொல்லி நேருஜி அத்திட்டத்தை நிராகரித்து விட்டார். திட்டத்தை நேருஜி ஏற்றுக் கொண்டிருந்தால் வெளியிலிருந்தே சோஷலிஸ்டுகள் ஒத்துழைத் திருப்பார்கள். அதை நிறைவேற்ற நேருவினால் தான் முடி யும்; நேருதான் செய்யவேண்டும் என்பது தான் ஜெயப்பிரகாஷின் எண்ணம்.

சென்ற பொதுத் தேர்தலில் சோஷலிஸ்ட் கட்சி கணிசமான அளவுக்கு வெற்றி பெறாத தற்குக் காரணம் ஸ்தாபன ரீதியாகவுள்ள பலக் குறைவுதான் என்பதை நாங்கள் உணர்ந்தே இருக்கிறோம். சோஷலிஸ்டுகள் வரட்டு ஜம்பமடிக்கும் வாய்ப் பந்தல்காரர் களல்ல; தங்களிடமுள்ள குறைகளைத் திருத் திக் கொண்டு தகுதியானவர்களாகத் தங் களை ஆக்கிக் கொள்வதே அவர்கள் நோக் கம். அஹிம்சா மூர்த்தி காந்தியின் அறவழி நின்று அந்தராத்மாவின் ஆக்ஞைக்கிணங்க பாரத மக்களின் வாழ்விலே ஏற்றங் காணப் பாடுபடும் ஜெயப்பிரகாஷை, ஆசாரிய கிருபளானியோ அன்றி வேறு எவருமோ குறுக்கே நின்று தடுத்துவிட முடியாது. "ஜெயப்பிரகாஷ் ஒரு சாதாரண ஊழியர். சோஷலிஸ தத்துவத்துக்கே ஒரு ஆதர்ச புருஷர். தீமைகளை எல்லாம் எதிர்க்கவே அவர் பிறந்துள்ளார். ஜெயப்பிரகாஷைப் போன்ற ஒரு உண்மையான வீரனைப் பெற் றெடுத்த எந்த தேசமும் பெருமை கொள் ளும்" என்ற மகாத்மா காந்தியின் மணி வாக்கிலிருந்து சற்றும் மாறுபடாமல் நடந்து வருபவர். அவரது நேர்மையையோ, மனத் தூய்மையையோ எவரும் குறை கூற முடியாது. நேரு-ஜெயப்பிரகாஷ் ஒத்துழைப் பின் மூலம் தான் இந்த நாட்டிற்கு விமோ சனம் ஏற்பட முடியும். நிற்க.

தமிழ்நாட்டில், கட்சி வளர்ச்சியடையாத தற்குத் தாங்கள் கூறியுள்ள காரணம் நூற் றுக்கு நூறு உண்மை என்பதைப் பட்டவர்த் தனமாக ஒப்புக் கொள்வதில் நான் வெட்கப் படவில்லை; ஆனால் வேதனையடைகிறேன். இங்கே சோஷலிஸ்ட் கட்சி இயங்குவதாகப் பெருமையுடன் கூறிக் கொள்ள முடியாது. கட்சி நடத்துவதாகப் பெயர்தான் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

1948-ல் ஜெயப்பிரகாஷ் நாராயண் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்த போது நிலவிய சூழ்நிலையையும், மக்களின் உற்சா கத்தையும் சரியான துறையில் ஒன்று திரட் டிப் பயன்படுத்தியிருந்தால் சோஷலிஸ்ட் கட்சியை நல்ல முறையில் கட்டியிருக்க முடி யும். இங்கே கட்சியை நடத்துவதாக பெயர் பண்ணிக் கொண்டிருக்கிறவர்கள் அதிலே தவறியது மட்டுமல்ல; எத்தனையோ ஆர்வ மும், துடிதுடிப்பும், லட்சியத்தில் அசைக்க முடியாத நம்பிக்கையும் கொண்டவர்கள் மனமுடைந்து போகும்படி செய்து விட்டார்

கள். தங்களது உழைப்பும், சக்தியும் விரயமாவதைக் கண்டு வெறுத் தொதுங்கி முழு நேரமும் கட்சிக்காகப் பாடு பட்டவர்கள் வெறும் அனுதாபிகளாக நின்று விடும்படியான நிலைமையை உண்டாக்கி விட்டார்கள்.

கொள்கையைச் சரிவரப் புரிந்து கொள்ளாதவர்கள், குறுகிய மனப்பான்மை கொண்டவர்கள், படித்தவர்கள் கட்சிக்குள் வந்து விட்டால் தங்கள் பதவிக்கு விபத்து வந்து விடுமோ எனப் பயந்தவர்கள், ஜாதிய வெறியினல் எண்ணத்திலே பின்னமடைந்தவர்கள் இவர்கள் சட்டைப் பைக்குள் அடங்கி விட்ட செல்லாக் காசாக மாறிவிட்டது சோஷலிஸ்ட் கட்சி. தமிழ் நாட்டிலே என்ன பேச வேண்டும், எதைப் பேச வேண்டும் என்ற திட்டவட்டமான கட்டுப்பாடு எதுவுமின்றி, மேடை ஏறி விட்டவ ரெல்லாம் பிரசங்கி என்ற நிலையில் கட்சியின் கொள்கை பொது மக்களிடையே பரவாததில் வியப்பெதுவுமில்லை. தலைமை அதற்குத் தகுந்த முறையிலே ஊழியர்களைத் தயார் செய்யாதது மட்டுமல்ல ; தங்களையே கூடத் தயார் செய்து கொள்ள வில்லை. ஆளுகின்ற கட்சியில் பதவிப் போட்டி ஏற்படுவதில் வியப்பெதுவுமில்லை. ஆனால் புதிதாக உருவாகும் கட்சியில் ஏற்பட்டால் உருப்படுவதற்கு வழி ஏது? ஊழியர்களைப் பொறுத்த வரை, உயிரைக் கூடக் கொடுக்கத் தயாரா யிருக்கும் ஆயிரக் கணக்கான பேர் தமிழ் நாட்டில் உள்ளனர். தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் இதை நான் நேரிலேயே கண்டிருக்கிறேன். அவர்களுக்கு உற்சாகமூட்டி அவர்களது சக்தியை ஒன்று திரட்டிச் சரியான துறையில் பயன் படுத்தாததால், விழலுக் கிறைத்த நீராக அது வீணுகிக் கொண்டிருக்கிறது.

பிரசாரத்துக்காகப் பல பாகங்களுக்கும் சென்றிருந்த போது, ஆங்காங்கே தன்னலமற்றுப் பணியாற்றும் பல ஊழியர்களுடன் அளவளாவிப் பேசியதிலிருந்து அறிந்து கொண்ட விஷயங்கள் இவை.

ஜெயப்பிரகாஷின் தலைமையிலும், சோஷலிஸ்ட் கட்சியின் கொள்கை திட்டங்களிலும் என் போன்றவர்களுக்கு இருக்கும் தகர்க்க முடியாத நம்பிக்கை என்றும் குன்றிவிடாது. ஆனல் எல்லாத் துறையிலும் முன்னணியில் நிற்கும் தமிழ் நாட்டில், ஒரு சில சுயநலவாதிகளின் சூழ்ச்சிகளினல், திறமையின்மையினல், நேர்மையற்ற போக்கினல் சோஷலிஸ்ட் கட்சி வளராமலிருக்கிறதே என்ற வருத்தம் மட்டும் ஏக்கப் பெருமூச்சாக எழும்பிக் கொண்டே யிருக்கிறது.

பல ஆண்டுகளாகக் கட்சியில் இருப்பவர்களையே அருகில் நெருங்க விடாமல் விரட்டியடிக்கும் போது, தாங்கள் சொல்வது போல் அதிருப்தி கொண்ட காங்கிரஸ் வாதிகளையோ, குறிப்பாக அறிவாளிகளையோ கட்சிக்குள் வர இன்றையத் தமிழ் நாட்டுத் தலைமை ஒருகாலும் அனுமதிக்காது. கட்சிக்கென்று தனியாக ஒரு காரியாலயம் வைத்து நடத்தவும் கையாலாகாமலிருக்கும் போதே நிலைமை இப்படி யென்றால், பின்னல் எப்படி யிருக்குமோ ?

தமிழ் நாட்டிலே உள்ள நிலைமையைச் சரிவரப் புரிந்து கொண்டு, இங்குள்ள காளான்களையும், களையான்களையும் போக்கித் திறமையும், தகுதியும், யோக்கியப் பொறுப்பும், நாணயமும், நம்பிக்கையும் உள்ளவர்களிடம் தலைமைப் பொறுப்பு ஒப்புவித்தா லன்றி சோஷலிஸ்ட் கட்சியை நல்லமுறையில் அமைக்க இடமே யில்லை.

ஜெயப்பிரகாஷ் அல்லது அசோக மேத்தா தமிழ்நாட்டில் சில மாதங்கள் தங்கி ஆங்காங்கே சென்று ஊழியர்களைக் கலந்தாலோசித்து, 'பொறுக்கி எடுத்த உருப்படாதவர்களையும், உபயோகமற்றவர்களையும்' விலக்கி லட்சியத்தில் நம்பிக்கையும், மக்களிடம் நன்மதிப்பையும் பெற்ற அறிவாளிகளையும் நிர்வாகத் திறமையுள்ளவர்களையும் கொண்ட தலைமையை ஏற்படுத்தினல் தான் தமிழ்

நாட்டில் கட்சி வளர முடியும். அந்த நாள் விரைவில் வர வேண்டும்.

சென்னை
11—5—53 எஸ். சங்கரன்

●

"சோஷலிஸம் வர வேண்டும்! இன்றேல் கம்யூனிஸம் வந்தே தீரும்" என்ற தலைப்பில் தாங்கள் எழுதியுள்ளதை மிகவும் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன்.

பஞ்சமும், பட்டினியும், வறுமையும் வாட்டும் நாட்டில்தான் கம்யூனிஸம் பரவும்; தலை தூக்க முயற்சி செய்யும். அக்கிரமத்தால், அதிகாரத்தால், அநாகரிகத்தால் வந்தே தீரும். இது உலகின் கம்யூனிஸ நாடுகளாகிய ரஷ்யாவும், சீனாவும் உலக மக்களுக்கு உணர்த்தும் அறிவுரை.

சொந்த நாட்டைச் சொர்க்கம் ஆக்க, வென்ற நாட்டைச் சூறையாடிய வெள்ளையர்கள் இந்தியாவின் சொத்தை இருநூறு ஆண்டுகளாக உறிஞ்சி விட்டார்கள். இப்பொழுது இந்தியா வேலையான தொரு நிலையிலே உள்ளது. எங்கே பார்த்தாலும் "பட்டினிச் சாவு" புரளிகள். இதைக் கூர்ந்து நோக்குங்கால் இந்தியா கம்யூனிஸத்துக்கு அழை கூவி அழைப்பது போல் தோன்றுகிறது.

"சோஷலிஸம்" உலகின் உன்னத லக்ஷியமென்று உவந்து போற்றப்படுகிறது. மக்களை மன்னர்களாக்கும் மாண்புள்ளதென்று மதிக்கப்படுகின்றது. உலகமே இன்று இதன் பாதையிலே தான் செல்லுகிறது. சமதர்ம சோஷலிஸம் கட்டாயம் இந்தியாவுக்கு வர வேண்டும்.

இந்திய காங்கிரஸ் தோன்றிய முதலே அதில் மிதவாதிகள், தீவிர வாதிகள் என்னும் இரு பிரிவுண்டு. இவர்களே பிற்காலத்தில் இந்திய சோஷலிஸ லக்ஷியத்தை வகுத்துக் கொண்டனர். 1939ல் ஸ்ரீ ஜெயப்பிரகாச் நாராயண் "காங்கிரஸ் சோஷலிஸத்தை" ஏற்படுத்தினர். அதன் பிறகு பல சந்தர்ப்பங்களில் அது பலவாறாக மாறி இப்பொழுது "பிரஜா—சோஷலிஸ்ட் கட்சி"யாகக் கூனிக் குறுகிக் காட்சி யளிக்கிறது. நாட்டை நல்வழியில் செலுத்துவதற்குக் காந்திஜியின் அருமைச் சீடன் கண்ட கனவு இன்று சின்னாபின்னமாகிச் சிதைந்து, சீர் குலைந்து கிடக்கின்றது. இந்த நிலைமையிலே நாம் நாட்டிற்கு நல்லதொரு பணியாற்ற வேண்டும். இந்திய சோஷலிஸக் கட்சியிலே ஸ்ரீ ஜெயப்பிரகாச், டாக்டர் லோஹியா, நரேந்திர தேவ், ஹரீந்திரநாத் போன்ற அரும் தலைவர்கள் உள்ளனர். இவர்களது அரிய ஆற்றலுக்கு ஆதரவு தருவதுதான் நமது பணி. வெறும் வாய்ப் பந்தல் போடும் சோஷலிஸ்டுகளையும், சோணகிரிகளையும் பூண்டோடு ஒழித்துப் புத்துணர்வு பெற வேண்டும். காங்கிரஸின் போக்கில் அதிருப்தி கொண்ட அனைவரும் புது லக்ஷியத்தை வகுத்துப் புத்துணர்வு அடைவார்களாக.

திண்டுக்கல்
13—5—53 என். மீனாட்சி சுந்தரம்

●

"சோஷலிஸம்" பற்றித் தாங்கள் எழுதியுள்ள கருத்தைப் பூரணமாக ஏற்றுச் செயலாற்ற வேண்டியது சோஷலிஸ்டுகளின் தலையாய கடமை. அதிலும் சில காரணங்களால் மனம் சலிப்புற்ற பொது ஊழியர்கள் பலர் நிறைந்த தென்னிந்தியாவில், சோஷலிஸ உயர்தரத் தலைவர்கள் கவனம் செலுத்தி, சிதறிக் கிடக்கும் ஊழியர்களை ஒன்று திரட்டி, உருப்படுத்துவார்களேயானால், தாங்கள் குறிப்பிட்டபடி சோஷலிஸ்ட் அரசியல் — சமுதாயக் கொள்கைகள் ஜனநாயகச் சட்டரீதியான முறையில் நம் நாட்டில் அமுலாக உறுதுணையாக இருக்கும். அம்மாதிரியான முயற்சிக்குத் தமிழ் நாட்டு வாலிபர்களின் சலியாத ஒத்துழைப்பும் கிடைக்கும்.

தோட்டக்குறிச்சி
11—5—53 ம. பி. திருமலைசாமி

●

'நம் தேச மக்கள் பஞ்சத்தினாலும், பட்டினியினாலும் பிணிகளாலும் பீடிக்கப்பட்டு அவல நிலையில் அவதியுறும்பொழுது, சுய லாபத்தை மட்டும் கருதி மக்களைச் சுரண்டி வாழும் முதலாளித்வ சமூக அமைப்பு அடியோடு மாறச் சோஷலிஸம் நம் நாட்டில் நிச்சயம் வந்தே யாக வேண்டும். அதுவும் இப்பொழுதே உடனடியாக வரத்தான் வேண்டும்! இன்றேல் நம் மக்கள் கம்யூனிஸ்டுகளின் வலையில் சிக்கி, எண்ணற்ற தேசபக்தர்கள் ஒப்பற்ற தியாகங்கள் புரிந்து பெற்ற சுதந்திரத்தை இழந்து விடும்' என்ற பொருள் படத் தாங்கள் தீட்டியிருந்த தலையங்கத்தை இந்த தேசத்து மக்களின் நல் வாழ்வில் கவலை கொண்டவர்களும், ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டவர்களும் மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள்; அதைப் பற்றிச் சிந்திப்பார்கள் என்பதில் ஐயம் இல்லை!

நாட்டில் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டிருக்கும் வேலையில்லாத் திண்டாட்டமும் அதன் பயனாய் மக்களிடையே புயற்காற்று போல் பரவி வரும் வறுமையும் சோஷலிஸம் உடனடியாக நமது தேசத்தில் வரவேண்டியதின் அவசியத்தை ஆணித்தரமாக வலியுறுத்துகின்றன. இன்று நாட்டில் பெரும்பான்மையாக உள்ளோர் ஏழைமையினால் சமுதாயத்தின் அடித்தளத்திலே நசுக்கப்பட்ட மக்கள்தான். அவர்களுடைய பிரச்னைகளை எந்தக் கட்சி தெளிவாகப் புரிந்துகொண்டு அவைகளைத் தீர்ப்பதற்கு உருவான திட்டங்களை மக்கள் முன் சமர்ப்பிக்கிறதோ அதுதான் அரசியலை நிர்வகிக்கும் கட்சியாக இருக்கவல்லது. சட்டரீதியிலும், ஜனநாயக முறையிலும் வறுமையால் வாடும் மக்களின் வாழ்க்கைப் பிரச்னைகளைச் சமாளிக்க சோஷலிஸ்ட் கட்சி ஒன்றிடம்தான் உயர்ந்த திட்டங்கள் உள்ளன. கம்யூனிஸம் இந்த தேசத்தில் பரவாமலிருக்க சோஷலிஸம்தான் சரியான மாற்று. இதை இளைஞர்களும் இத் தேசத்தின் முன்னேற்றத்தில் ஆர்வமுள்ளவர்களும் உணர வேண்டும். கடந்த இரண்டு ஆண்டுகளாக சோஷலிஸ்ட் கட்சியின் தலைவர்கள் தங்கள் சிந்தனையிலே அடைந்துள்ள வளர்ச்சியைக் கண்டு சமூக முன்னேற்றத்திலும் சமதர்ம அரசியலை நிர்மாணிப்பதிலும் விருப்பமுள்ள அனைவரும் நிச்சயம் பெரு மகிழ்ச்சி அடைவார்கள்.

நம் அரசாங்கத்தினர் மக்களின் வறுமை நிலையையும் பிற்போக்கான நிலையையும் உணர்ந்து உரிய காலத்தில் சோஷலிஸ்டுத் திட்டங்களைக் கொண்டுவரத் தவறினால் மக்களின் மனத்தில் மாபெரும் அதிருப்தி தோன்றி அதன் விளைவாகப் பெரும் பலாத்காரப் புரட்சி தோன்றத்தான் செய்யும். இது தொன்று தொட்டுச் சரித்திரம் நமக்குக் கற்பித்த பாடம். அப்பொழுது தேசமுக் போன்ற பிற்போக்காளர்கள் என்னதான் கூடியாய்க் கதறினாலும் போன ஜனநாயகம் திரும்பி வராது. இதை இந்த தேசத்தின் நலனில் கவலையுள்ளவர்களும் ஜனநாயகத்தில் பற்றுள்ளவர்களும் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

அவர்கள் அனைவரும் சோஷலிஸ்ட் கட்சியில் சேர்ந்து அதைப் பலப்படுத்திக் குழப்பத்திலாழ்ந்திருக்கும் நம் மக்களுக்குப் புதியதொரு நம்பிக்கையை அளிக்க வேண்டும்!

சென்ற பொதுத் தேர்தலில் போட்டியிட்ட பெரும்பாலான அரசியல் கட்சிகள் மக்களின் அதிருப்தியைப் பயன்படுத்திக் கொண்டும் சாதி மத பாகுபாடுகளைக் காட்டியும் வோட்டுப் பெற முயன்றபொழுது சோஷலிஸ்ட் கட்சி ஒன்றுதான் தன் கொள்கைகளைத் தெளிவாக மக்கள் முன்பு வைத்து வோட்டுக் கேட்டது என்பதை சோஷலிஸ்டுக் கட்சியின் ஜன்ம வைரிகளும் கூட ஒப்புக் கொள்வார்கள். நம் நாட்டில் உண்மையான ஜனநாயகம் வளர வேண்டுமானால் எல்லா அரசியல் கட்சிகளும் தேர்தல் காலங்களில் இம் முறையையே பின்பற்ற வேண்டும்.

நம் தமிழ் நாட்டில் சோஷலிஷ்ட் கட்சி சரியாக வேரூன்றவில்லை என்று தாங்கள் எழுதியிருப்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். உண்மையில் இந்த தேசத்தில் சோஷலிஸம் வர வேண்டும் என்று மனப்பூர்வமாக விரும்புகிறவர்கள் கட்சிக்கு வெளியிலிருந்து கொண்டு கட்சியையும் அதன் நிர்வாகிகளையும் கண்டனம் செய்வதால் மட்டும் ஒன்றும் ஏற்படப் போவதில்லை. அவர்களும் இன்னும் இந்த நாட்டு மக்களிடையே பொருளாதாரப் புரட்சி ஏற்பட வேண்டும் என்று விரும்புவோரும் கட்சியில் சேர்ந்து அதைப் பலப்படுத்தி மாபெரும் மக்கள் கட்சியாக்கப் பாடுபட வேண்டும்.

தேப்பரம்
9—5-53 வி. சேதுராமன்

சோஷலிஸ்ட் கட்சி இந்தியாமீது பக்தி கொள்ளுகிறது. கம்யூனிஸ்ட் கட்சி ரஷ்யாவிடம் பக்தி புகட்டுகிறது. சோஷலிஸ்ட் கட்சி, இந்தியா சுபிட்சமடைய மக்களின் மகிழ்ச்சி கலந்த எழுச்சியை நம்புகிறது. கம்யூனிஸ்ட் கட்சி துப்பாக்கியையும், தூக்கு மேடையையும், ரகஸ்ய ஒற்றர்களையும் நம்புகிறது. சோஷலிஸ்ட் கட்சி மக்களைச் சிந்திக்கச் செய்யவும் சுயமாக அபிப்பிராயங்களைச் சொல்லவும் இந்த நாட்டையே ஆளும் ஆற்றலை ஏற்படுத்தவும் விரும்புகிறது. கம்யூனிஸ்ட் கட்சி, சுயமாக எதையும் சிந்திக்கவோ பேசவோ கூடாது என்று விரும்புகிறது. சோஷலிஸ்ட் கட்சி தன் லட்சியங்களை அடைய உண்மையையும் நேர்மையையும், மக்களின் அரசியல் அறிவையும் நம்புகிறது. கம்யூனிஸ்ட் கட்சி மக்களின் மிருக உணர்ச்சியையும் பலாத்காரக் குழப்பத்தையும், சர்வாதிகாரத்தையும் நம்புகிறது. சோஷலிஸ்ட் கட்சி, எந்த நாட்டையும் அடிமை கொள்ளவோ, எந்த நாட்டுக்கும் அடிமையாக இருக்கவோ எண்ணம் இல்லாத சுதந்திர உணர்ச்சி, தன்மானம் கொண்டது. கம்யூனிஸ்ட் கட்சி நாட்டையும் மக்களையும் ரஷ்யாவுக்கு அடிமையாக்கி, மற்றக் குட்டி நாடுகளைத் தனக்கு அடிமையாக்கும் சதித் திட்டம் பூண்டு செயல்படுகிறது.

ஆகவே, நாம் பெற்ற சுதந்திரம் பேணி வளர்க்கப்பட வேண்டுமானால், மக்கள் மானத்துடன் வாழ வேண்டுமானால் நம் பாரத நாட்டில் சோஷலிஸம் வேர் விட்டுத் தழைக்க வேண்டும்.

பங்களூர்
12—5—53 ஆர். ஜி. ஜெயராமன்

## சோஷலிஸக் கட்டுரைக்கு நூறு ரூபாய் பரிசு

"சோஷலிஸம் வரவேண்டும்! இன்றேல், கம்யூனிஸம் வந்தே தீரும்!" என்ற கட்டுரையை வரவேற்று நேயர்களிடமிருந்து ஏராளமான கடிதங்கள் வந்திருக்கின்றன. நேயர்களின் உற்சாகத்தை நாம் வரவேற்று, சோஷலிஸம் பற்றிய ஒரு கட்டுரைப் போட்டி ஏற்படுத்தத் தீர்மானித்திருக்கிறோம்.

"சோஷலிஸம் ஏன் வேண்டும்?" என்னும் தலைப்பில் எழுதப்படும் கட்டுரைகளில் சிறந்தது என்று ஆசிரியர் கருதும் கட்டுரைக்கு ரூபாய் நூறு பரிசு வழங்கப்படும்.

கட்டுரை, வாசகர்கள் ரஸித்துச் சுவையுடன் படிக்குமாறு எளிய தமிழில் அமைந்திருக்க வேண்டும்.

கட்டுரைகள் நாளது 1953-ம் ஆண்டு ஜூன் மாதம் 30-ம் தேதிக்குள் காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும்.

சோஷலிஸ இயக்கத்தின் அடிப்படைத் தத்துவங்கள், சோஷலிஸத்தினால் பாரத தேசம் அடையக் கூடிய நன்மைகள், இந்திய சோஷலிஸ்ட் கட்சியின் முன்னணி வேலைத் திட்டம், அக் கட்சியின் தற்போதைய நிலை, கட்சியை வலுப்படுத்துவதற்குரிய யோசனைகள், சோஷலிஸ்ட் இலட்சியத்தையும் வேலைத் திட்டத்தையும் மக்களிடையே பரப்புவதற்குச் சிறந்த வழிகள்,—இவை யெல்லாம் போட்டிக் கட்டுரைக்கு விஷயமாக அமையலாம். இவற்றில் ஏதேனும் சில அம்சங்களைப் பற்றியும் எழுதலாம்.

கட்டுரை, "கல்கி" இதழில் நாலு பக்கங்களுக்குக் குறையாமலும் எட்டுப் பக்கங்களுக்கு மேற்படாமலும் இருக்க வேண்டும்.

பரிசு பெறும் கட்டுரையைத் தவிர, பிரசுரத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும் நல்ல கட்டுரைகளுக்கு உசிதம்போல் சன்மானம் வழங்கப்படும்.

இந்தப் போட்டிக்கு அனுப்பப்படும் கட்டுரைகளின் மேலுறையில் தயவு செய்து "சோஷலிஸக் கட்டுரை" என்று குறிப்பிடக் கோருகிறோம்.

கைத்தறி நெசவாளர் கஷ்டப்படுகிறார்களே
என்பதற்காக மட்டுமல்ல

நம் நாட்டு மக்கள்
கைத்தறித் துணிகளை
வாங்குவது.

# கோ - ஆப்டெக்ஸ்

## கைத்தறித் துணிகள்

- அழகு
- உழைப்பு
- நயம்

இம் மூவம்சங்களிலும்
சகலருக்கும்
திருப்தி யளிப்பன.

நாடெங்கும் பரவியுள்ள
124 டிப்போக்களிலும்
கிடைக்கும்.





கோ-ஆப்டெக்ஸ்
ஆடைகள்

சென்னை மாகாண கைத்தறி நெசவாளர்
கூட்டுறவு சங்கம் லிமிடெட்


"ஹாலோவேஸ் கார்டன்", 34, பாந்தியன் ரோடு, எழும்பூர், சென்னை-8

போன்: 8176 & 85839 :: தந்தி: "HANDLOOM"




மரகத புரியில் நாளொரு சட்டமும் பொழுதொரு மாறுதலுமா யிருக்கும். மரகதபுரி அரசன் தினம் பல விநோதமான சட்டங்களைக் கொண்டு வந்து மக்களைத் திக்கு முக்காடச் செய்வான்.

பகலில் எல்லோரும் தூங்கி இரவில் தத்தம் கடமைகளைச் செய்ய வேண்டும் என்று சட்டம் பிறக்கும். அந்தச் சட்டத்தை அனைவரும் ஏற்று அதன்படி நடந்தே தீரவேண்டும். இல்லாவிட்டால் கடுந் தண்டனைதான். மன்னனுக்குச் சட்டத்தை அமுல் நடத்துவதில் சிறிதும் பாரபட்சம் கிடையாது.

ஒரு நாள் மந்திரி அரசனுடைய சட்டத்துக்கு விரோதமாக இரவில் தூங்கி விட்டார். அரசனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. மறு நாள் மந்திரி வந்ததும் அவரை வேலையிலிருந்து நீக்கி, அதோடு அவருக்குச் சிறைத் தண்டனையும் கொடுத்து விட்டான் மன்னன்.

அரண்மனை அதிகாரிகளும், மரகதபுரி மக்களும் நாட்டில் இன்னும் எந்த விதப் புதுச் சட்டம் தோன்றித் தாங்கள் தவிக்க வேண்டி வருமோ என்று பயந்து குலை நடுங்கிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் பயந்தது வீண் போகவில்லை. மரகதபுரியில் அன்று திடீரென்று ஒரு புதுச் சட்டம் பிறந்தது. அதாவது, நாட்டிலே யிருக்கும், முதியவர்களைத் தவிர மற்ற இளவயதினர் அனைவரும் நாட்டை விட்டே வெளியேறி விட வேண்டும் என்பதுதான்.

புதிய சட்டம் பிறந்தவுடனே மரகதபுரியிலுள்ள இளம் வயதினரெல்லாம் தண்டனைக்குப் பயந்து நாட்டை விட்டு வெளியேறி விட்டனர். ஆனால் அரசனின் செல்வப் புதல்வி பிரேமா மட்டும் இளவயதினளாயிருந்தும் நாட்டை விட்டுப் போகவில்லை. ஆனால் அவள் மரகதபுரியை விட்டுப் போகா விட்டாலும் அதை விடக் கொடுமையான தண்டனையை நாட்டுக்குள்ளேயே அநுபவிக்கும்படி நேர்ந்துவிட்டது.

அந்தப்புரத்தை அடுத்தாற்போல் அழகிய தோட்டம். தோட்டத்திலிருந்த பளிங்குக் கல் ஆசனத்தில் அரசகுமாரி பிரேமா உட்கார்ந்து கொண்டிருந்தாள். அவள் முகத்தில் சோகம் தாண்டவ மாடியது. அவளுடைய சோகத்தைக் கண்டு வருந்திய குயில் ஒன்று அவளுக்கு ஆறுதல் கூறுவதற்கு முன் வந்தது.

"பெண்ணே! உன் கண்கள் கலங்கியிருக்கக் காரணம் என்ன? உன் வருத்தத்தைப் போக்க என்னாலான உதவி செய்கிறேன்!" என்றது குயில்.

"குயிலே! என் துயரை நீக்க உன்னால் இயலாது. என் தந்தை என்னைக் கிழ அரசனுக்குக் கல்யாணம் செய்து கொடுப்பதாக நிச்சயித்து விட்டார்" என்று கூறிக் கண்ணீர் பெருக்கினாள் பிரேமா.

"என்ன? உங்கள் தந்தை அவ்வளவு கொடிய உள்ளம் படைத்தவரா?"

"என் தந்தைக்கு வயது ஏற ஏறப் புத்தியும் மங்கி விட்டது போலும்! சட்டந்தான்

அவருக்கு எல்லாம். சட்டத்தினுல் ஏற்படும் கஷ்டங்கள் அவருக்குத் தெரிவதில்லை. மரகதபுரி நாட்டிலே வயதானவர்களைத் தவிர இளவயதினர் யாருமிருக்கக் கூடாது என்று கட்டளையிட்டு விட்டார். மரகதபுரி நாட்டில் முதியவர்களைத் தவிர மருந்துக்குக் கூட இளைஞர்களே கிடையாது...''

''அப்படியானுல் தாங்கள் இளவயதினராயிற்றே? தங்களை மட்டும் அரசர் நாட்டில் வைத்துக் கொள்ளலாமா?''

''நான் அவருடைய அருமைக் குமாரி என்பதனுல், என்னைக் கிழ அரசனுக்கு மணம் முடித்து விட்டால் இங்கே யிருப்பதில் தடை யில்லை என்று அவருடைய வயது முதிர்ந்த மதி மந்திரிகள் கூறவே, என்னை நாடு கடத்த வில்லை. இப்பொழுது எனக்கு அவர்கள் நாட்டை விட்டுத் துரத்தினுல் நல்லது என்று தோன்றுகிறது. வேறு நாட்டுக்குப் போய் விட்டால் வீர வாலிபனை மணந்துகொள்ளலாமல்லவா?''

''கவலைப் படாதே, பிரேமா! உன் தந்தையின் மனங் கோணுமல் நீ கிழ அரசனையே மணந்து கொள். பிறகு உனக்கு உன் ஆசை பூர்த்தியாகும்'' என்று ஆறுதல் கூறியது குயில்.

''குயிலே! உனக்கும் புத்தி கெட்டு விட்டதா? என் தந்தைதான் அறியாமல் கிழவனைக் கல்யாணம் செய்து கொள்ளச் சொன்னுல் நீயும் அவருக்குப் பரிந்து பேச வருகிருயே? போ! என்னை விட்டுப் போய் விடு'' என்று கடிந்து கொண்டாள் பிரேமா.

''ராஜ குமாரியே! உன் நலனுக்காகத் தான் சொல்கிறேன்.என் வார்த்தையை நம்பினுல் நிச்சயம் உனக்குப் பலன் உண்டு'' என்று கூறி விட்டுக் குயில் பறந்தது.

மறு நாள் காலை. அரண்மனை அமர்க்களப் பட்டது. மரகதபுரி ராஜ குமாரி பிரேமாவைச் சுந்தர புரி கிழ மன்னன் மணந்து கொள்ள வரப் போகிருன் என்ருல் அரண்மனை தடபுடல் படாமல் என்ன செய்யும்?

குறிப்பிட்ட நேரத்தில் சுந்தரபுரி மன்னன் தள்ளாடித் தள்ளாடி அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். மரகதபுரி மன்னன் சுந்தரபுரி கிழட்டு அரசனை மாலையிட்டு வரவேற்ருன்.

பிரேமா தாடியும், மீசையும், கிழடு தட்டிய முகமும் கொண்ட சுந்தரபுரி மன்னனைப் பார்த்ததும் மூர்ச்சையாகிக் கீழே விழுந்தாள். மரகதபுரி மன்னன் அவளுக்கு மூர்ச்சை தெளிவித்து விடாப்பிடியாகக் கிழட்டு மன்னனுக்கே அவளை மணம் முடித்து வைத்தான்.

இராஜ குமாரியின் திருமணம் முடிந்ததும் பிரமாதமான விருந்துக்கு ஏற்பாடு செய்தான் மரகதபுரி மன்னன். விருந்து ஆரம்பிக்கும் சமயத்தில் சுந்தரபுரி கிழட்டு மன்னனைக் காணவில்லை.

விருந்து ஆரம்பித்த சிறிது நேரங் கழித்துச் சுந்தரபுரி மன்னன் வந்து சேர்ந்தான். அவன் தள்ளாடித் தள்ளாடி நடந்து வர வில்லை. வாலிப முறுக்கோடு கம்பீர நடை நடந்து வந்தான். அவனைப் பார்த்ததும் மரகதபுரி அரசனுக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை.

''சுந்தரபுரி மன்னனே! என்னைத் தந்திர வித்தை பயின்று ஏமாற்றி விட்டாயே? நாட்டின் விதிக்கு மாருக என் பெண்ணை அபகரித்துச் செல்ல முயன்றிருக்கிருயே? அது என்னிடம் நடக்காது!''

''அரசே! நான் தந்திர வித்தைகளைக் கைக் கொள்ள வில்லை. நான் எப்பொழுதும்போல்தானிருக்கிறேன். என்னைக் கிழவனுகத் தோற்றமளிக்கச் செய்தது இந்த உடைகள்தான்'' என்று கூறி அவன் தன் வேஷ உடைகளை எடுத்துக் காட்டினுன்.

''நீ என்னை ஏமாற்றி விட்டாய். இப்பொழுதே இந்த நாட்டை விட்டுப் போய் விடு. இல்லா விட்டால் உன் உயிர் உன்னிடம் நிலைத்து நிற்காது'' என்று சினத்துடன் கூறினுன் மரகதபுரி மன்னன்.

''அப்பா! அவரைப் பிரிந்து என்னுல் இருக்க முடியாது. அவரை மன்னித்து விடுங்கள்'' என்று கெஞ்சினுள் பிரேமா.

''பிரேமா! சட்டத்துக்கு மாருக உன்னை இந்நாட்டில் வைத்ததே தவறு. அதோடு நீ ஏமாளிக்குப் பரிந்து பேச வந்ததால் உன்னையும் நாடுகடத்தி விட்டேன்'' என்ருன் மன்னன்.

பிரேமா ஆனந்தந் தாங்க முடியாமல், ''அப்பா! நீங்கள் செய்த உதவிக்கு என் நன்றி. நானும் அவருடன் போகிறேன்'' என்று கூறி விட்டுப் பின் சுந்தரபுரி மன்னனின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு புறப்பட்டு விட்டாள்.

வழியில் குயில் அவர்களைச் சந்தித்து, ''என்ன பிரேமா! உன் ஆசை நிறைவேறியதில் என்னை மறந்து விட்டாயே?'' என்று கூறியது.

குயில் இருந்த பக்கம் அவர்கள் திரும்பிய பொழுதுஅது தேவதையாக மாறிவிட்டது.

''பிரேமா! இந்த தேவதைதான் என்னைக் கிழ வேடம் தாங்கி உன்னை மணந்து கொள்ளும்படி வேண்டிக் கொண்டது. அது சொல்லியிரா விட்டால் நாமிருவரும் இன்று மணந்து கொண்டிருக்க முடியாது'' என்ருன் சுந்தரபுரி மன்னன்.

''என்னை மன்னித்து விடுங்கள். அன்று நீங்கள் குயில்தான் என்று கருதி உங்களிடம் கடுமையாக நடந்து கொண்டு விட்டேன்'' என்று கூறித் தேவதையின் காலில் விழுந்தாள் பிரேமா.

தேவதை அவளைத் தூக்கி நிறுத்தி இருவரையும் ஆசீர்வதித்து விட்டு மறைந்தது. சுந்தரபுரி மன்னன் தன் நாட்டையடைந்து பிரேமாவுடன் சுகமாக நெடுங் காலம் வாழ்ந்திருந்தான்.

# இலங்கையில் பரபரப்பு

*கொழும்பு மே மீ 15உ*

இலங்கை இந்தியர்களின் பிரச்னையில் இவ்வாரம் ஏற்பட்டிருந்ததைப் போல கொந்தளிப்பும் பரபரப்பும் நிலையும் தடுமாற்றமும் வேறு எப்பொழுதும் ஏற்பட்டிருந்ததில்லை. ஸ்ரீ தேசாய் நேருவிடம் தமது சமரச யோசனைகளைச் சமர்ப்பித்துக் கலந்து பேசுவதற்காகப் புறப்பட்டுப் போனபொழுது ஆரம்பித்த பரபரப்பு அதிகரித்து நேற்று உச்ச நிலைமையை அடைந்தது.

(1) பிரஜாவுரிமைச் சட்டத்தைத் தளர்த்திவிட்டு ஏழரை லட்சம் இந்திய இலங்கையர்களிலே சுமார் ஐந்து லட்சம் பேர்களை இலங்கைப் பிரஜைகளாக ஏற்றுக் கொள்ளுவது. (2) மற்றவர்களில் இந்நாட்டில் நிரந்தரமாக வசிப்பவர்களென்று தெரியும் சுமார் மூன்று லட்சம் பேர்களுக்கு அரசியல், ஓட்டுரிமையில்லாமல் இலங்கையில் நிரந்தரமாக வசிக்க உரிமையளித்து அவர்களை இலங்கைப் பிரஜைகளாக ஏற்றுக் கொள்ளுவதை 10 வருடங்களுக்குப் பின் புனராலோசனை செய்வது. (3) பாக்கியுள்ள இரண்டு லட்சம் இந்தியர்களுக்குக் கொடுத்த வாசபர்மிட்டைப் புதுப்பிக்க மறுத்துப் படிப்படியாக இந்தியாவுக்கு நாடு கடத்திவிடுவது. இதுதான் ஸ்ரீ தேசாயின் சமரசத் திட்டமென்று பொதுவாகக் கூறப்படுகிறது.

இந்தத் திட்டம் நடைமுறையில் வரும்பொழுது சுமார் நான்கு லட்சம் பேர்களுக்குப் பிரஜாவுரிமையும் லட்சம் பேர்களுக்கு நிரந்தர வாச உரிமையும் கிடைக்குமென்றும், குறைந்தது நான்கு லட்சம் இந்தியர்கள் நாடு கடத்தப்படுவார்களென்றும், ஆகவே ஸ்ரீ தேசாயின் சமரச யோசனைகள் இந்தியர்களுக்குப் பெரும் துரோகம் செய்வதாகுமென்றும் இந்திய வர்த்தகச் சங்கமும் அதனுடன் இணைந்த மற்றும் பல 14 ஸ்தாபனங்களும் கருதுகின்றன. இந்தியப் பிரஜைகளாகவே உள்ளவர்கள் நாடு கடத்தப்படுவதற்கு இந்தியா சம்மதிக்கப்படாதென்றும் அவர்களது இலங்கை வாச உரிமைக்குப் பாதுகாப்பு ஏற்பட வேண்டுமென்றும் நேருஜிக்கு ஒரு தூது கோஷ்டி அனுப்பி வற்புறுத்த அவர்கள் முதலில் தீர்மானித்தார்கள். டில்லிக்குத் தூது போவதா வேண்டாமா! என்பதைப் பற்றிக் காரசாரமான விவாதம் நடந்து கடைசியில் இந்தியர்களாகவே இருப்பவர்களுடைய நிலைமை என்ன என்பதை ஸ்ரீ தேசாயிடம் நேரில் கேட்டுவிட்டுப் பிறகு ஒரு முடிவு செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது.

வர்த்தகர்களுடைய கூட்டமொன்றில் நேற்று தேசாய் பேசினார். இந்தியர்கள் நாடு கடத்தப்படுவதற்கு இந்திய அரசாங்கம் சம்மதமளிக்கப் போவதாகக் கூறப்படுவது தவறு என்று அவர் முதலில் அழுத்தமாகச் சொன்னார். இரு தேசப் பிரதம மந்திரிகளும் லண்டனில் சந்திக்கும்பொழுது தோட்டத் தொழிலாளரின் பிரஜாவுரிமையைப் பற்றி மட்டுமே பேசி முடிவு செய்யப்படுமென்றும் இதர இந்தியர்களின் வாச உரிமையைப் பற்றித் தமது சமரச யோசனைகளில் ஏதுமில்லையென்றும் தொழிலாளரின் பிரஜாவுரிமைக்காக மற்றவர்களின் வாச உரிமை தியாகம் செய்யப்படுவதாகக் கூறப்படுவது உண்மையல்லவென்றும் அவர் கூறினார். மற்ற இந்தியர்களின் வாச உரிமைகளை உறுதிப்படுத்தும் ஒரு ஷரத்தும் சமரச உடன்பாட்டில் ஏன் சேர்க்கப்படவில்லை என்று கேட்டதற்கு இந்தியப் பிரஜைகளுடைய வாச உரிமையையும் இந்திய இலங்கையர்களின் பிரஜாவுரிமையையும் சம்பந்தப்படுத்த இலங்கைப் பிரதம மந்திரி தயாராயில்லையென்றும், ஆகவே தற்சமயம் பிரஜாவுரிமைப் பிரச்னையைத் தவிர வேறு எதைப் பற்றியும் பேசுவது அசாத்தியமென்றும் ஸ்ரீ தேசாய் சொன்னார்.

இதன்பின் டில்லிக்குத் தூது அனுப்புவதில்லையென்று இந்திய வர்த்தகச் சங்கம் தீர்மானித்தது. இந்தத் தீர்மானத்தை ஆட்சேபித்து அதன் உபதலைவரும் மூலபுருஷருமான ஸ்ரீ கே. ஜி. ராவ் தமது பதவியை ராஜிநாமாச் செய்து விட்டார். டில்லிக்குத் தூதுபோவது நின்றுவிட்ட பொழுதிலும் ஸ்ரீ தேசாய் இந்நாட்டிலே இந்தியப் பிரஜைகளாகத் தொடர்ந்திருப்பவர்களுக்குத் துரோகம் செய்து விட்டாரென்ற அபிப்பிராயமும் இலங்கைக்கு இந்தியா பணிந்து விட்டதென்ற ஒரு அபிப்பிராயமும் சரியாகவோ தவறாகவோ பலமாக இருந்து வருகிறது. வாசபர்மிட்டுடன் இங்கு வசிக்க வேண்டிய இந்தியர்கள் ஐந்தாறு ஆண்டுகளுக்குள் படிப்படியாக நாடுகடத்தப்பட்டு விடுவார்களென்ற எண்ணமும் எல்லோருடைய மனதிலும் உறுதியாக ஏற்பட்டு விட்டது. இவ்வளவு நடக்கையில் இலங்கை இந்திய காங்கிரஸ் தலைவர்கள் ஒரு பக்கமும் பட்டுக் கொள்ளாமல் மௌனம் சாதித்து வருகிறார்கள். —ஜனி.

சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்களின் மேற்பார்வையில் ஆதாரக் கல்வித் திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு நடந்து வருவது வேதாரண்யம் கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம். இதன் ஆண்டுவிழா ஏப்ரல் 29ம் தேதி மது விலக்கு மந்திரி ஸ்ரீ பழனிசாமிக் கவுண்டர் தலைமையில் நடந்தது. நிதி மந்திரி ஸ்ரீ சுப்பிரமணியம் விழாவைத் துவக்கி வைத்தார். பார்லிமெண்டரி காரியதரிசி ஸ்ரீ ராஜாராம் தலைமையில் கலைவிழா நடந்தது. அப்பொழுது குருகுல மாணவிகள் "மீரா" என்ற நாடகத்தை நடித்தனர். அந்த நாடகத்தில் நடித்த மாணவிகளை எதிரேயுள்ள படத்தில் காணலாம்.





● பக்தி சிரத்தையுடன் சங்கீத உபாசனையில் ஈடுபட்டிருக்கும் பெரம்பூர் சங்கீத சபையார் மே மீ 15ல ராஜாஜி அவர்களின் தலைமையில் ஸ்ரீ தியாகப் பிரம்ம மகோத்ஸவத்தை ஆரம்பித்தார்கள்.

1. பூரண கும்ப மரியாதைகளுடன் ராஜாஜி சபைக்கு வரவேற்கப்படும் காட்சி.

2. முதல் நாள் உற்சவத்தில் சங்கீத கலாநிதி காரைக்குடி சாம்பசிவய்யர் அவர்கள் தமது சிஷ்யைகளான ஸ்ரீமதி ரங்கநாயகி, குமாரி இராஜேசுவரி இவர்களுடன் வீணைக் கச்சேரி செய்து சபையோரைப் பரவசப் படுத்தினார். குமாரி ராஜேசுவரி காலஞ் சென்ற வீணை சுப்பராமய்யர் அவர்களின் பேத்தி. இந்தச் சின்னஞ் சிறு குழந்தை வாயினால் மெல்லிய இனிய குரலில் அடிக்கடி பாடிக் கொண்டு அபார லாகவத்துடன் வீணை வாத்தியத்தைக் கையாண்டு சபையோரை மகிழ்வித்தாள்.

போட்டோ:- எம். டி. கணேஷ்

# குன்றக்குடி அடிகளாரின் இலங்கை விஜயம்

சில மாதங்களுக்கு முன்பு தமிழ் நாட்டுத் தினப் பத்திரிகைகளில் அதிசயமான செய்தி ஒன்று வெளியாயிற்று. "மடாதிபதி ஒருவர் கையில் மண் வெட்டி எடுத்து வேலை செய்தார்" என்பதுதான் அச் செய்தி.

ருஷியப் பிரசாரப் படமான "The Fall of Berlin" என்னும் படத்தில் தோழர் ஸ்டாலின் கையில் நீளப் பிடியுள்ள மண் வெட்டி ஒன்று பிடித்து அவருடைய அரண்மனைப் பூந்தோட்டத்தில் உடம்பு வளையாமல், அசையாமல், புல் செதுக்கும் காட்சியைக் காட்டுகிறார்கள். இந்தக் காட்சியைப் பார்த்த போது உலகெங்கு முள்ள கம்யூனிஸ்டுகள் பரவச மடைந்தார்கள்.

அதைக் காட்டிலும் அதிகமாகத் தமிழ் மக்களுக்கு "ஒரு மடாதிபதி மண்வெட்டி பிடித்து வேலை செய்தார்" என்னும் செய்தி உள்ளக் கிளர்ச்சியை ஊட்டியது.

மேற்குறிப்பிட்ட மடாதிபதி சிறந்த தமிழறிஞரான குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ அருணாசல தேசிக சுவாமிகள்தான். சைவ சமய குரவர்களில் முதன்மை பெற்றவரான அப்பர் சுவாமிகள் கையில் உழவாரப்படை பிடித்து ஆலயப் பிராகாரங்களில் புல்பூண்டுகளைச் செதுக்கிச் சுத்தம் செய்தார் என்று வரலாறு கூறுகிறது. அப்பர் சுவாமிகள் காட்டிய வழியைப் பின்பற்றியேதான் குன்றக்குடி அடிகளாரும் நம் நாளில் மண்வெட்டி பிடித்துக் கோயில்பிராகாரங்களைச் சுத்தம்செய்து மற்றச் சிவனடியார்களுக்கு வழிகாட்டினார்.

அப்பர் சுவாமிகளின் வரலாற்றிலிருந்து நம் முன்னோர்கள் உடலால் உழைத்துச் செய்யும் தொண்டை எவ்வளவு மேலாகப் பாராட்டினார்கள் என்று அறிகிறோம். அப்பரும் சம்பந்தரும் சோழநாட்டில் பஞ்ச நிவாரணத் தொண்டு செய்ததை மீண்டும் நேயர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறோம். அப்பர், சம்பந்தர் ஆகிய இரு மகான்களும், பஞ்ச நிவாரணத்துக்காகப் பதிகம் பாடி இறைவனிடம் காசு பெற்றார்கள். ஆனால் அப்பருக்குக் கிடைத்த காசுகளை அங்காடி வீதியில் தானியம் விற்றோர் தடை சொல்லாமற் பெற்றுக் கொண்டார்கள். சம்பந்தரின் காசுகளை 'வாசி படாத' செல்லாக் காசுகள் என்று திருப்பிவிட்டார்கள். இதைக் கேள்வியுற்ற சம்பந்தர், 'சிவ பெருமான் நமக்குத் தந்த ஒரு காசு வாசிபட மற்றக் காசுவாசிபடா தொழிவான் காரணம் என்னவென்று சிந்தித்தார். 'அந்தப் பெருவாய்மைத் திருநாவுக்கரசர் தொண்டாற் பெறும் காரம் ஆதலினால்' அவர் காசு செல்லுகிறது; நமது காசு வாசிபட வில்லை என்று அறிந்து கொண்டார். —இவ்விதம் சேக்கிழார் பெருமான் ஐயந்திரிபுக் கிடமின்றி எழுதிவைத்திருக்கிறார்.



இரண்டு பேரும் பதிகம் பாடித்தான் காசு பெற்றார்கள். ஆனால் திருநாவுக்கரசர் பதிகம் பாடி இறைவனைத் துதித்ததோடு நிற்கவில்லை, உடல் உழைத்துத் தொண்டு செய்தார். ஆகையினால் அவருடைய பாடல் அதிகச் சிறப்படைந்தது. சம்பந்தர் இறைவனுக்குப் பாமாலை மட்டும் சூட்டிக்கொண்டிருந்தார். பால பருவத்திலேயே பாடத் தொடங்கி விட்டார் அல்லவா! ஆகையால் இக் காலத்தில் பள்ளிக்கூடங்களில் படிக்கும் பிள்ளைகளைப் போல் சம்பந்தரும் உடலுழைப்புப் பயிற்சி பெறவில்லை. ஆகையால் அவருடைய பாடல்கள் இறைவனுடைய கருத்தில் ஒரு மாற்றுக் குறைவாகவே இருந்தது.

உடலுழைப்புத் தொண்டின் சிறப்பைக் குறிப்பிட்டுக் காட்டும் இந்த அற்புதமான வரலாற்றை எத்தனையோ சிவனடியார்கள் படிக்கிறார்கள். படித்துப் பயன் அடைந்த மகான் நம் காலத்தில் குன்றக்குடி அடிகளார் அவர்கள்.

இதையன்றி, அடிகளார் வேறு பல துறைகளிலும் சிறப்புப் பெற்றவர். தலை சிறந்த தமிழ்ப் புலவர். சைவ சித்தாந்தக் கடலின் கரை கண்டவர். ஆங்கிலத்திலும் நல்ல பயிற்சி உள்ளவர். ஆயிரக்கணக்கான மக்களின் உள்ளங்களைக் கவரக்கூடிய முறையில் செந்தமிழில் சொற்பொழிவாற்றக் கூடியவர். நாத்திகப் பிரசாரக் கூட்டத்தாரின் வாதங்களைத் தவிடு பொடியாக்கி ஆத்திகத்தை நிலை நாட்டி வருகிறவர். இதற்காகவே 'அருள் நெறித்திருக் கூட்டம்' என்னும் அமைப்பை ஏற்படுத்தித் தமிழ் நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்கிறார். அடிகளார் நடந்தும் செல்கிறார்; சில சமயம் விமானத்தில் பறந்தும் செல்கிறார். ஊர் ஊராகத் தெரு தெருவாகச் சென்று பிரசங்க மாரி பொழிந்து வருகிறார்.

ஹரிஜனங்கள் வாழும் சேரிகளுக்குள் சென்று அச் சேரிகளைச் சுத்தப்படுத்தும் பணியும் சில இடங்களில் செய்கிறார். ஹரிஜனக் குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டியும், உணவு பால் அளித்தும் தொண்டு செய்கிறார். திருமுறை வகுப்புகள் நடத்துகிறார். சிறைச்சாலைகளுக்குள் சென்று சமயப் பிரசாரம் செய்கிறார். ஏன்! நம் தமிழ் ஆசிரியர்கள் சிலரைக் கூட நாத்திகத்திலிருந்து ஆத்திகத்துக்குத் திருப்பிச் சமயப் பிரசாரத் துறையில் ஈடுபடுத்தி யிருக்கிறார் என்றால் வேறு என்ன சொல்ல வேண்டும்!

இத்தகைய பெரியார் மே மாதம் இறுதியில் இலங்கைக்கு விஜயம் செய்கிறார் என்னும் செய்தி அங்கு வாழும் தமிழர்களுக் கெல்லாம் பேருவகை அளிக்கும்.

இந்த அரிய சந்தர்ப்பத்தை ஈழநாட்டுத் தமிழன்பர்களும் சமயப் பற்றுள்ளவர்களும் நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறோம். கொழும்பிலும், கண்டியிலும், மட்டக்களப்பிலும், திரிகோணமலையிலும், யாழ்ப்பாணத்திலும் உள்ள தமிழன்பர்கள் போட்டி யிட்டுக்கொண்டு அடிகளாருக்கு மகத்தான வரவேற்பு அளித்து அவருடைய சொற்பொழிவுகளைக் கேட்டுப் பயன் அடைவார்கள் என்று நம்புகிறோம்.

# குருவின் மகள்

மகா பாரதத்தில் எத்தனையோ அருமையான கதைகள் உண்டு. வெகு நுட்பமான மனோபாவங்களை அதி அற்புதமான கதைகளாக வியாஸ பகவான் சித்திரித்திருக்கிறார். அவற்றின் சுவையை நுகர ஒரு மனிதனின் ஆயுட்காலம் போதாது.

அப்படிப்பட்ட கதைகளில் ஒன்று கச-தேவயானியின் கதை.

தேவர்களின் குரு பிரஹஸ்பதி. அவருடைய புதல்வன் கசன், அசுரர்களின் குருவான சுக்கிராச்சாரியாரிடம், மரணத்தை வெல்லும் சஞ்சீவினி வித்தையைக் கற்றுச் செல்ல வருகிறான். முதலில் சுக்கிராச்சாரியாரின் அருமைப் புதல்வியான தேவயானியைச் சந்திக்கிறான். தேவயானி கசனிடம் உள்ளத்தைப் பறிகொடுத்து விடுகிறாள். அவள் உதவியினாலேயே கசன் சுக்கிராச்சாரியாருக்குச் சிஷ்யனாக அமர்கிறான். அசுரர்கள், கசன் வந்திருப்பது தங்கள் நலத்திற்கல்ல என்று அறிந்து அவனை இரண்டு முறை கொன்று விடுகிறார்கள். இரண்டு முறையும் சுக்கிராச்சாரியார் தேவயானியின் வற்புறுத்தலின் பேரில், சஞ்சீவினி மந்திரத்தைப் பிரயோகித்துக் காப்பாற்றி விடுகிறார். மூன்றாம் முறை அசுரர்கள் கசனைக் கொன்று அவன் சாம்பலை மதுவில் கலந்து குருவுக்கே கொடுத்து விடுகிறார்கள். பின்னர் கசனைக் காணவில்லையே என்று தேட நேரும்போது, சுக்கிராச்சாரியார் தமது வயிற்றுக்குள்ளே கசன் இருப்பதை உணர்கிறார். தேவயானியோ, கசனை எப்படியாகிலும் உயிர்ப்பிக்க வேண்டும் என்று மன்றாடுகிறாள். அப்பொழுது குருநாதர், "அம்மா! இப்பொழுது கசனை உயிர்ப்பித்தேனாகில் அவன் என் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வருவான். அதனால் நான் உயிர் துறக்க நேரிடும். உனக்கு நான் வேண்டுமா? கசன் வேண்டுமா?" என்று கேட்கிறார்.

"இது என்ன கேள்வி! எனக்கு நீங்கள் இருவரும்தான் வேண்டும்" என்கிறாள் அசுர குருவின் புதல்வி தேவயானி.

இந்த இக்கட்டான நிலைமையைச் சமாளிக்க ஒரே ஒரு வழிதான் உண்டு. வயிற்றுக்குள்ளிருக்கும் கசனுக்கு முதலில் சஞ்சீவினி வித்தையை உபதேசம் செய்து விட்டால், குருவின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வரும் கசன், மறுபடியும் குருவை உயிர்ப்பிக்கலாம் அல்லவா?

இப்படி, தேவயானியின் உதவியினால் கசன் சஞ்சீவினி வித்தையைக் கற்றுக்கொண்டான். அவன் எந்த நோக்கத்தோடு வந்தானோ அது கைகூடி விட்டது.

இனி, அவன் தேவலோகம் திரும்பிச் செல்ல வேண்டும். தேவயானியிடம், உத்தரவு பெற்றுக்கொள்ள வருகிறான். அப்போது தேவயானி தன்னை மணந்து கொள்ளும்படி வேண்டுகிறாள்.

தேவயானியை மணந்து விட்டால், தேவ காரியம் கெட்டு விடும். தான் இத்தனை நாள் அரும் பாடு பட்டுக் கற்ற சஞ்சீவினி வித்தை தேவர்களுக்குப் பயன்படாது போய் விடும். காதலைவிட தேவ காரியமே முக்கியம். ஆகையால் நெஞ்சை இளகவிடக் கூடாது என்று தீர்மானிக்கிறான் கசன். ஆனால் அவளுக்குத் தக்க சமாதானம் கூற வேண்டுமல்லவா? சொல்லுகிறான்: "தேவயானி! நீ குருவினுடைய புதல்வி. குரு தந்தைக்குச் சமானமானவர். ஆகவே, நீ எனக்குச் சகோதரியாகிறாய். மேலும், நான் உன் தந்தையின் வயிற்றிலிருந்து வெளியானவன். ஆகவே உன் தந்தை எனக்குத் தாயும் ஆனார். நீ சகோதரியானாய்! அதனால் உனக்கும் எனக்கும் கணவன்—மனைவி உறவு ஏற்படுவது அசாத்தியம். நடக்கக் கூடியதன்று."

இதைக் கேட்டுத் தேவயானி கோபமடைகிறாள். இது ஏதோ விதண்டாவாதம் என்று எண்ணுகிறாள். கருமமே கண்ணாகி வந்த கசன், அவள் காதலைத் தியாகம் பண்ணிவிட்டுத் தேவர் உலகம் செல்கிறான்.

* * *

மகா கவி ரவீந்திரநாத் டாகூர், கசன் தேவயானியிடம் விடை பெற்றுச் செல்லும் கட்டத்தைப் பல ரஸங்கள் கொண்ட சம்பாஷணையாக அமைத்திருக்கிறார். இலக்கிய இன்பத்தை நுகர்ந்தவர்களுக்கு அந்தச் சம்பாஷணை வற்றாத தேன் ஊற்றாக விளங்கி வருகிறது. அதில் ஒரு பகுதி:

தேவயானி: இப்பொழுதுதான் நடந்தது போலிருக்கிறது. நீர் முதன் முதலில் இன்னும்

## இலங்கையில் குன்றக்குடி அடிகளார் பிரயாண நிகழ்ச்சி விவரம்

மே மீ 31௳ ஞாயிறு—கொழும்பு திருக்கும்பிட்டி கோவிலில் பிரார்த்தனைக் கூட்டத்தில் சொற்பொழிவு. ஜூன் மீ 1௳ திங்கள்—சைவ மங்கையர் கழகக் கட்டிடத்தில் பேச்சு. 2௳ மாணவர் கூட்டத்திலும் திருக்கேதீசுவர ஆலயத் திருப்பணி சபைக் கூட்டத்திலும் உபந்யாசம். 3௳ கண்டியில் கூட்டம், இலங்கை சர்வகலாசாலைக்கு விஜயம். 4௳ கதிர்காமத்தில் வழிபாடு. 6௳ மட்டக்களப்புத் தமிழ் விழாவில் தலைமை வகித்தல். 8௳ திருகோணமலையில் கூட்டம் — கோவிலில் வழிபாடு. 9௳ திருக்கேதீசுவரத்தில் வழிபாடு. 10௳ யாழ்ப்பாணத்தில் கூட்டம். 11௳ தாய்நாட்டுக்குத் திரும்புதல்.

பால வடிவம் மாருதவராய், இங்கேதான் வந்தீர். அதோ அந்த மூலையில் புன்னகை யின் எழில் கண்களில் தோன்ற நின்றீர்.

**கசன் :** நீ அப்பொழுது மலர் கொய்து நின்ற காட்சி எனக்கும் ஞாபகம் வருகிறது—வெண்ணிற ஆடை தரித்து இளஞ் சூரியனின் கிரணங்கள் பட்டுச் சோபையுடன் விளங் கும் உதய நேரம் போல் தோன்றினய். நான் உன்னை நெருங்கி, 'எனக்கு அநுமதிகொடுத் தால் உனக்கு உதவி செய்யும் பாக்கியத்தைப் பெறுவேன்' என்று சொன்னேன்.

**தேவயானி :**—நான் வியப்புடனே 'நீர் யார்?' என்று கேட்டேன். பிரஹஸ்பதியின் குமா ரன் என்றும், இறந்தவரை உயிர்ப்பிக்கும் வித்தையை என் தந்தையிடம் கற்றுக் கொள்ள வந்திருப்பதாகவும் சொன்னீர்.

**கசன் :**—அசுர குருவான உன் தகப்பனர் என்னைச் சிஷ்யனுக ஏற்க மறுத்துவிடுவாரோ என்றுவெருவாகப் பயந்துகொண்டிருந்தேன்.

**தேவயானி :**—ஆனல் நான் உமக்காகப் பரிந்து வேண்டிக் கொண்ட போது, அவ ரால் மறுக்க முடியவில்லை.

**கசன் :**—என்னிடம் பொறாமை கொண்ட அசுரர்கள் மூன்று தடவை என்னைக் கொன் ருர்கள்; மூன்று தடவையும் உன் தந்தை யைக் கொண்டு என்னை உயிர்ப்பித்தாய், தேவயானி! உன்னிடம் என்னுடைய நன்றி யும் என்றென்றைக்கும் இறவாமலிருக்கும்.

**தேவயானி :**— நன்றியா? — உபகாரங்களை மாத்திரம்தான நினைவு கூருகிறீர். சாயங்கால வேளைகளில் பாடங்கள் முடிந்த பிறகு புதிய தொரு இன்ப உணர்ச்சி உமது இதயத்தில் உண்டாகி உடம்பெல்லாம் பரவியது உண் மையாயிருந்தால் அதை நினைத்துக்கொள் ளும்; நன்றியை நினைக்க வேண்டாம். யாரோ ஒருத்தி உமக்கு அருகே கீதம் இசைத்துக் கொண்டு செல்ல, அந்தப் பாட்டின் பல்லவி உமது பாடங்களுடன் கலந்து சிக்கிக்கொண் டதும், அவள் அணிந்த ஆடையின் சலசலப் புச் சத்தமும் பாடங்களுடனே கலந்து உம் உள்ளத்தில் பாய்ந்ததும் உண்மையானல் அதை யெல்லாம் நீர் சுவர்க்கத்தில் சாவ காசமாயிருக்கும் போது எண்ணிப் பாரும். உபகாரங்களைப் பற்றியா என்னிடம் பேச வருகிறீர்? சௌந்தர்யம், காதல் — இவை யெல்லாம் ஒன்றுமே இல்லையா?

* * *

இவ்வாறு சம்பாஷணை, மேலே மேலே செல்கிறது! கருமமே கண்ணுக இருக்கும் கசன் குருவிடம் பாடங் கேட்பதையும், அவன் கருத்தைக் கவர முயலும் தேவயானி யையும் நமது சித்திரக்காரர் நேர்த்தியாகத் தீட்டி யிருக்கிருர்.

தேவயானியின் இதயம் காதலினல் மலரு கிறது என்பதை அவளுடைய கையில் உள்ள பாதி மலர்ந்த புஷ்பத்தின் மூலம் சித்திரக் காரர் உணர்த்துவதையும் கவனிக்கவேண்டும்.

## விரட்டும் வழி!




"எந்த மந்திரி வந்தாலும் எந்த மந்திரி போனலும் விவசாயிகள் தங்கள் கையை நம்பி உழைத்துத்தான் பஞ்சத்தை விரட்டி அடிக்க வேண்டும்!"



# ஏன் கிப்ஸ் உபயோகிக்கும் குழந்தைகள் அதிருஷ்டமுடையவர்கள் ?



அதிருஷ்டமுடை-
யவர்கள்
ஏனென்றால்

அவர்களுடைய
பெற்றோர்கள் கிப்ஸ்
டென்டிபிரிஸ் வாங்குகிறார்கள் !



அதிருஷ்டமுடை-
யவர்கள்
ஏனென்றால்

அவர்கள் அதன்
சுவையை
அனுபவிக்கிறார்கள் !



அதிருஷ்டமுடையவர்கள்
ஏனென்றால்
கிப்ஸ் டென்டிபிரிஸ்
பற்களை வெண்மை
யாகவும் ஈறுகளை
ஆரோக்கியமாகவும்
இருக்கச்செய்கிறது !



நீலம்,
சிவப்பு,
பச்சை
டப்பிகளில்




## கிப்ஸ் டென்டிபிரிஸ்

**பற்களுக்கு சீரிய குணமளிக்கிறது—குறைந்த செலவில்!**

GD. 33-50 TM

டி. அன்ட் டபிள்யூ. கிப்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது

# நாகராஜனின் கலக்கம்



வேங்கடலட்சுமி

அன்றைய தினம் நாட்டியக் கச்சேரி பிரமாதமாயிருந்தது. காட்சி ஜோடனைகளும், வர்ண விசித்திரமான உடுப்புக்களும் கண்களைக் கவரும் வண்ணம் அமைந்திருந்தன. நாகநகர் நாட்டிய சங்கீதக் கழகம் ஆரம்பித்த பின்பு இம்மாதிரி உயர்தரமான ஒரு அம்சம் நடைபெறவேயில்லையென வந்திருந்தவர் யாவரும் ஒருமுகமான அபிப்பிராயம் கூறினார்கள். சபைக் காரியதரிசி நாகராஜனுக்கு இதில் மிகவும் சந்தோஷம்.

இந்த நாட்டியக் கச்சேரியின் ஏற்பாடுகளுக்காக அவன் ஒரு மாதமாக ஓய்ச்சல் ஒழிவின்றி அலைந்து கொண்டிருந்தான். எப்பொழுதோ சாப்பாடு, எப்பொழுதோ தூக்கம், டிக்கட்டு விற்பனை, நாட்டியத்துக்கான பெரிய கொட்டகையின் ஏற்பாடு, மின்சார விளக்குகள், அரங்க ஜோடனை எல்லாம் அவனே நேரில் நின்று கவனித்தான். ஆகவே கச்சேரியும் அதன் சுற்று வட்டார அமைப்புக்களும் மிகவும் உயர்வாக அமைந்து விட்டன. பிறகு கேட்பானேன்? நாட்டிய ரத்தினம் தாராமதி, கன்னங்குழிய அவனை நோக்கி ஒரு புன்னகையை உதிர்த்து, மைதீட்டிய தன் பெரிய விழிகளை மலர்த்தி அவனிடம் விடை பெற்றுக் கொண்டு காரில் ஏறினாள். நாகராஜன் தன்னையு மறியாமல் போதையில் ஆழ்ந்து விட்டான்.

அவன் நெற்றியில் வியர்வை துளிர்த்தது. கைக்குட்டையால் அதைத் துடைத்துக் கொண்டான். மூன்று மணி நேரம் அரங்கத்தில் நின்று ஆடிய, வடித்து வார்த்து மெருகிட்ட தங்கச் சிலைபோன்ற அவ்விளங் கட்டழகியின் கரிய விழிகளின் மயக்கும் பார்வை, அவனது இருதயத்தில் நிலைத்து விட்டது.

நாகராஜன் வந்தனோபசாரம் கூறிவிட்டு மேடையை விட்டிறங்கினான். நிற்கவுமிடமின்றி அங்கு வந்து கூடியிருந்த ஜனங்கள் கொட்டகையை விட்டு வெளியேறினர். நாகநகர் நாட்டிய சங்கீதக் கழகத்தின் அக்கிராசனரான திவான்பகதூர் சேஷகிரியும் மற்ற அங்கத்தினர்களும், அவனுடைய வேலையையும் நிர்வாகத் திறமையையும் வெகுவாகப் பாராட்டி விட்டு வீட்டுக்குக் கிளம்பினார்கள். தாராமதியின் வண்டு விழிகளையும் குழிக்கும் கன்னங்களையும் பற்றிக் கனவு கண்டபடியே நாகராஜனும் வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

சைக்கிள் மணியின் கணகணவென்ற சப்தம் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள் சியாமளி. கூடத்தில் விளக்குப் பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்தது. திரும்பிப் பார்த்தாள். கடிகாரத்தின் முள் பதினொன்றரையைக் காண்பித்தது. குபீரென்று கண்களில் மல்கிய நீரைத் துடைத்துக் கொண்டு அவசரமாய் எழுந்தாள். கலைந்திருந்த சேலையைச் சரிப்படுத்திக் கொண்டு வேகமாய்ப் போய்க் கதவைத் திறந்தாள்.

சைக்கிளைப் பிடித்தபடியே இருளில் நின்று கொண்டிருந்த நாகராஜன் கையிலிருந்த டார்ச் விளக்கை அவளுடைய முகத்துக்கு எதிராகத் தூக்கிப் பிடித்து "எவ்வளவு நேரமாக நின்று கொண்டிருக்கிறேன்? வரவர ஒரே தூங்கு மூஞ்சியாய்ப் போய் விட்டாய்!" என்று கடுமையாகக் கூறியபடியே உள்ளே நுழைந்தான்.

அவனுக்குப் பின்னால் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்த சியாமளிக்குக் கடச் கடப் பதில் சொல்ல வேண்டும் போலிருந்தது. பகல் பத்து மணிக்கு வீட்டை விட்டுப் போனவன் ஊரையெல்லாம் சுற்றிவிட்டு ராத்திரி பன்னிரண்டு மணிக்கு வீட்டுக்கு வருவானாம். [illegible]வரையில் சியாமளி கொட்டுக்

கொட்டென்று விழித்துக் கொண்டிருந்து உபசாரம் செய்யணுமாம். எப்படியிருக்கிறது நியாயம்? என்றெண்ணியவள் தன்னுடைய ஆத்திரத்தை யெல்லாம் அடக்கிக் கொண்டு, சமையலறைக்குள் நுழைந்தாள். சாப்பாடெல்லாம் அடுப்பின் மீதே வைத்திருந்தும்கூட ஆறி அவலாகப் போயிருந்தது.

சியாமளி தட்டை அலம்பி வைத்துவிட்டுப் பலகையும் ஜலமும் எடுத்து வைத்தாள். பிறகு பரிமாறுவதற்குத் தயாராய் மௌனமாய் நின்றாள். உடுப்புக்களை மாற்றிக் கொண்டு குழாயண்டை போய் முகம் கைகால்கள் கழுவிக் கொண்டு கடுகடுத்த முகத்துடனேயே வந்து தட்டுக்கு அருகில் உட்கார்ந்தான் நாகராஜன்.

சாதம் பரிமாறி விட்டு நிமிர்ந்த மனைவியிடம், "இதை எப்படிச் சாப்பிடுவது? பனிக்கட்டி போலிருக்கிறதே! கொஞ்சம் மோர் விடு. போதும்; குழம்பெல்லாம் எனக்கு வேண்டாம்" என்று சுளித்த முகத்துடன் உத்தரவிட்டான்.

ஆத்திரம் பொங்கியது சியாமளிக்கு. விடுவிடென்று போய் மோர்ப் பாத்திரத்தை யெடுத்துவந்து அவனருகில்வைத்தாள். பிறகு அவனை ஏறெடுத்துக் கூடப் பாராமல், "பாதி ராத்திரி மட்டும் விழித்திருப்பது என்னால் இனிமேல் சாத்தியமில்லை. வெளிக் கதவை ஒரு பூட்டுப் போட்டுப் பூட்டி விட்டுப் போங்கள். உங்களிஷ்டம் போல் வந்து கொள்ளலாம். என்னுடைய தூக்கமும் கெட்டுப் போகாது. உங்களுக்கும் சிரமமில்லை..." என்று படபடப்புடன் கூறிவிட்டுத் தொட்டிலில் அழத் தொடங்கிய குழந்தையைக் கையிலெடுத்து அணைத்தபடியே விடுவிடென்று மாடிக்குப் போய் விட்டாள்.

தூக்கி வாரிப் போட்டது நாகராஜனுக்கு. சியாமளியா இப்படிப் பேசுகிறாள்? அவளை மணந்து அவன் வாழ்க்கை நடத்தத் தொடங்கிய இந்த எட்டு வருஷங்களுக் கிடையில் அவள் அவனிடம் ஒரு நாள்கூட எதிர்த்துப் பேசியதே கிடையாதே! இதென்ன புதிய விசித்திரம்? கோபம் பொங்கியது அவனுக்கு. சட்டென்று பாதிச் சாப்பாட்டில் கையை உதறி விட்டு எழுந்தான். வேகமாய்ப் போய்க் கையை யலம்பி விட்டு ஆத்திரத்துடன் மாடிப்படி யேறினான்.

அறைக்குள் கட்டிலின் மீது குழந்தையைப் பக்கத்தில் அணைத்தபடியே கண்களை மூடிப் படுத்திருந்தாள் சியாமளி.

அறை வாயிற்படியில் நின்றபடியே அவளை நோக்கினான் அவள் கணவன்.

குவிந்த அவளது கண்ணிதழ்களில் பளபளத்த கண்ணீர்த் துளிகள், சாளரத்தின் வழியாக உள்ளே படிந்த நிலவின் ரேகைகளில் நன்றாய்த் தெரிந்தன. நாகராஜனின் நெஞ்சை ஒரு கணம் என்னவோ செய்தது. ஆனால் மறுகிமிஷமே தன் மனசைக் கல்லாக்கிக் கொண்டான். அப்படியே நேராகச்

சென்று வெளி வராந்தாவில் கிடந்த ஒரு பெஞ்சியின் மீது படுக்கையைப் போட்டுப் படுத்துக் கொண்டான்.

இவன் வந்தது தெரிந்தும் தெரியாதது போலவே படுத்திருந்தாள் சியாமளி. ஆறு மாதங்களாக மனசுக்குள்ளேயே வைத்துக் குமுறிக் கொண்டிருந்த துக்கமும் ஆத்திரமும் அன்று அவளுக்கு ஒரேயடியாகப் பொங்கி வந்து விட்டன. இவ்வளவு நாளாகத்தான் ஒன்றும் சொல்லாமற் பணிந்து போனது பிசகென்றும் இனிமேல் அவ்வாறிருக்கப் போவதில்லையென்றும் தன் மனசுக்குள் உறுதியாகத் தீர்மானித்து விட்டாள். தன் கணவனாக வந்து தன்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு பேசினாலொழியத் தான் பேசுவதில்லை யென்றும் திடசங்கல்பம் செய்து கொண்டாள்.

நாகராஜன் மறுநாள் காலை எழுந்து கீழே வருவதற்குள் கூடத்து விசுப்பலகையில் புகையப் புகையக் காப்பி தயாராய் வைக்கப் பட்டிருந்தது.

காப்பியின் மணம் நாசிக்கு ரம்மியமாயிருந்தது. மார்கழி மாதத்துக் காலைக் குளிருக்கு, சுடச் சுடத் தொண்டைக்கு இதமாயிருந்தது. ஆயினும் என்ன? எதிரில் நின்று சிரிக்கச் சிரிக்கப் பேசும் சியாமளி இல்லாமல் அந்தக் காப்பியை அவனால் சுவைக்க முடியவில்லை. ஒரு நினுசாக அதைக் குடித்து விட்டுத் தன்னுடைய அறைக்குள் நுழைந்தான். அன்று வந்த பத்திரிகையைக் கையில் எடுத்துப் பிரித்தான்.

கண்களின் பார்வை பக்கம் பக்கமாய் ஓடிற்றே தவிர அவனுடைய அறிவில் ஒன்றும் ஏறியதாய்த் தெரியவில்லை. சிந்தனைக் கயிறு, ஏதோ இனம் தெரியாத திசையில் நீண்டுகொண்டே போயிற்று. அந்தக் கயிற்றின் ஒரு கோடியில் சியாமளியும் இன்னொரு கோடியில் நாட்டிய ரத்னம் தாராமதியும் நின்று அவனை வம்புக்கு இழுத்தார்கள்.

'ஐயய்ய!......இதெல்லாம் என்ன அவலயோசனை? இன்னொரு பெண்ணைப் பற்றி, என்னுடைய பத்னி யிருக்கையில் நான் நினைப்பதே தவறல்லவா? ஏன் என்னுடைய புத்தி இப்படி கோணல் வழியில் பிரவேசிக்கிறது?' என்று தன்னுடைய எண்ணங்களைத் தானே கட்டுப் படுத்திக் கொள்ள முயன்றான். முடியவில்லை. முன் தினம் இரவு, நாட்டியக் கச்சேரி யெல்லாம் முடிந்து, வீடு போக, மோட்டாரில் ஏறும் தருணம், செப்புச் சிலையொத்த கட்டழகி தாராமதி, தன்னுடைய மயக்கம் தரும் கருவிழிகளால் அவனை நோக்கிய பார்வை அவன் இருதயத்தில் வார்ப்படமென நின்றது. ஆனால் அடுத்த கணமே தன் உரிமைப் பெண் தெய்வமான சியாமளியின், கண்ணீரால் பளபளத்த கருவிழிக் கோணங்கள் அதை மறைத்து மேலெழும்பின. திக்கு முக்காடினான் நாகராஜன்.

சட்டென எழுந்தான். ஆணியில் மாட்டியிருந்த சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டான். கூடத்து வழியாக வாசலை நோக்கி வந்தவன் தொட்டிலண்டை நின்றான்.

குழந்தை இந்து, இன்னும் எழுந்திருக்கவில்லை. தொட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தாள். குனிந்து அவளுடைய சுருண்ட மயிரை ஒதுக்கி விட்டு விட்டு, அவளுடைய சின்னஞ் சிறு கனிவாயில் ஓசையோடு ஒரு முத்தமிட்டு விட்டு வாசலை நோக்கித் திரும்பினான். அப்பொழுது தற்செயலாக அவன் விழிகள் சமையலறைப் பக்கம் நோக்கின. சியாமளி அடுப்பண்டை குனிந்து எதையோ ஊதிக் கொண்டிருந்தாள். சுருண்டெழுந்த புகை அவளுடைய விழிகளில் எரிச்சலுண்டாக்கியது போலும். கரண்டியைக் கீழே வைத்துவிட்டுப் புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். அவைகள் வெறிச்சோடிய பார்வையுடன் தன்னை உற்று நோக்கிக் கொண்டிருந்த கணவனின் பார்வையைச் சந்தித்தன. அசைவற்று ஒரு நிமிஷம் நின்ற நாகராஜன் சட்டென்று கால் போனவழியே நடக்கலானான். அவன் மனம் ஒரு நிலைகொள்ளாமல் தவித்தது.

ஒரு வாரம் இப்படியே சென்றது. வீட்டில் சியாமளி எதுவும் பேசவில்லை. மௌனமாகவே வேலைகள் நடந்து கொண்டிருந்தன. ஆனால் கணவனுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களிலோ, குழந்தை இந்துவின் பராமரிப்பிலோ, அவள் ஒருவிதமான புகாருக்கும் இடமில்லாமல் நடந்து கொண்டாள். ஆகவே நாகராஜனுக்கு என்ன விதத்தில் அவளிடம் பேச்சுக் கொடுப்பதென்று தெரியவில்லை. ஆனால் நடுநடுவே, காரிருளில் சடக்கென்று மலர்ந்து மறையும் மின்னற் கொடி போல் அழகுத் திரளான தாராமதியின் உருவம் அவன் மனத்தில் எழும்பி மறைந்து அவனை நிலை தடுமாறச் செய்தது. பின்னோடு நிழல்போல் தொடர்ந்து வந்த சியாமளியின் ஞாபகமும் அவனைப் பித்தனாக்கி விட்டது. கடற்கரைக்காவது போய் வரலாமென்று சாயங்காலம் வெளியே புறப்பட்டான். சியாமளியை அவன் கூட வரும்படி கேட்கவுமில்லை. அவளும் வருவதாகச் சொல்லவில்லை.

இருள் படரும் சமயம் ஒரு படகின் மறைவில் மணலில் தனியாகப் படுத்துக் கொண்டிருந்தான் நாகராஜன். அலைகளின் ஆரவாரம் தூரத்தே அடங்கி யடங்கி யெழும்பியது அவன் மனத்துக்கு ஒருவிதமான அமைதியைக் கொடுத்தது. கண்களை யிறுக மூடிச் சிந்தனையி லாழ்ந்தான்.

"நாகராஜா!" என்று யாரோ அழைத்த குரல் கேட்டுத் திடுக்கிட்டுக் கண்களை விழித்துப் பார்த்தான்.

"என்னப்பா! இந்தக் காலேஜ் திறப்பு விழா பெரிய தொல்லையாய்ப் போச்சு........." என்று சொல்லியபடியே அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான் நண்பன் பாஸ்கரன்.

"வாஸ்தவம்தான்" என்றான் நாகராஜன்.

"நாளன்றைக்குத் திறப்பு விழா. அதற்கு அந்த ஸினிமா நடிகை தாராமதி யிருக்கிறாளே, அவளுடைய நடனக் கச்சேரி ஏற்பாடு செய்யணுமாம். சமீபத்தில் நம்முடைய கழகத்தில் அவளுடைய கச்சேரியை நீதான் ஏற்பாடு செய்தாயாமே? இந்தத் திறப்புவிழாவுக்கும் அவளுடைய கச்சேரிக்கு நீதான் ஏற்பாடு செய்யணும். கொஞ்சம் என்னுடன் அவளுடைய பங்களா வரையிலும் வருகிறாயா?" என்று பாஸ்கரன் கேட்டது நாகராஜனின் மனசைத் துள்ளிக் குதிக்கச் செய்தது. அந்தக் கணத்தில் அவனுடைய மனம் சியாமளியை அடியோடு மறந்து விட்டது.

"இப்பொழுதே போகலாமா? என்னுடைய மோட்டாரைக் கொண்டு வந்திருக்கிறேன். அதிலேயே போய்விடலாம்" என்று தானும் எழுந்தான் பாஸ்கரன். தாராமதியின் நடனத்தை ஏற்பாடு செய்யத் தன்னுடன் வருவதற்கு நாகராஜன் ஒரு தயக்கமும் சொல்லாமல் ஒத்துக் கொண்டது அவனுக்கு மிகவும் சந்தோஷத்தை யளித்தது. ஆயினும், நண்பன் தன் மனசை மாற்றிக் கொண்டு விடுவானோ என்ற பயத்தில் சாலை யோரமாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மோட்டாரை நோக்கி வேகமாய் நடந்தான் பாஸ்கரன்.



மனைவி:—நல்ல பாக்கு எப்படி பண்ணுறதுன்னு கேட்கிறீங்க? பாக்கை நன்றாய் ஊறப் போட்டு உணர்த்தி. பிறகு நெய்யில் வருத்து எடுத்துக் கொண்டு சாமானைக் கணக்காகக் கலந்து......

கணவன்:— அப்புறம் நான் சொல்கிறேன். அப்படியே ஒரு மூலையில் அதை ஒதுக்கி வைத்து விட்டு, அசோகாவை வாங்கிப் போட்டுக் கொள்கிறது.

பலவித உணர்ச்சிகள் கொந்தளிக்கும் உள்ளத்துடன் அவனைத் தொடர்ந்து நடந்தான் நாகராஜன்.

இரவு மணி பத்தரை. பட படவென்று கதவைத் தட்டும் ஓசை கேட்டுச் சியாமளி எழுந்து வந்து கதவைத் திறந்தாள். வாசலில் நின்று கொண்டிருந்த நாகராஜன் உள்ளே நுழைந்தான். சியாமளி அவனை ஏறெடுத்தும் பாராமல் மீண்டும் போய்ப் படுக்கையில் படுத்து விட்டாள்.

கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டுச் சாப்பிடாமலே மாடியேறினான் நாகராஜன்.

அவன் மனம் பெரும் புயல் வீசியடங்கிய கடல் போல் அமைதியடைந்திருந்தது. சற்று முன்பு நடனராணி தாராமதியின் வீட்டில் நடந்த சம்பவம் அவனுடைய மனசில் கொஞ்ச நாளாகக் குடி கொண்டிருந்த மயக்கத் திரையை விலக்கி அறிவைத் தெளிவாக்கியிருந்தது. அச் சம்பவத்தை நினைக்கவும் அவன் உடல் அவமானத்தினால் குன்றியது. தாராமதியைப் பார்க்கும் உத்தேசத்துடன் இவர்களிருவரும் ஏறிச் சென்ற கார் பங்களா வாசலில் போய் நின்றவுடன் வாசலில் நின்ற கூர்க்கா தர்வான் வண்டி யருகில் வந்து "யாரது?" என்று கேட்டான்.

அதற்குள் வண்டியிலிருந்திறங்கிய நாகராஜன் "அம்மாவைப் பார்க்க வந்திருக்கிறோம்; வீட்டிலிருக்கிறார்களா?" என்றான்.

"வீட்டிலிருக்காங்க; ஆனால், இந்நேரத்தில் ஒருவரையும் பாக்கமாட்டாங்க" என்று அலட்சியமாய்க் கூறினான் கூர்க்கா.

"இதைக் கொண்டுபோய்க் கொடு. என்னை அம்மாவுக்குத் தெரியும்" என்று ஜேபியினின்றும் தன்னுடைய பெயர் அச்சடித்த கார்டை நீட்டினான் நாகராஜன். கட்டாயம் தாராமதி தன்னைக் காண மறுக்கமாட்டாளென உறுதியாய் நம்பினான் அவன்.

"பிரயோஜனமில்லிங்க!" என்று மறுத்த அவனுடைய கையில் கீர்ப்பந்தமாய்க் கார்டைக் கொடுத்து விட்டு "நீ கொண்டுபோய்க் கொடு" என்று கூடவே ஒரு ரூபாய் நாணயத்தையும் வைத்து அழுத்தினான் நாகராஜன்.

மனசுக்குள்ளாக நகைத்தபடியே உள்ளே போன தர்வான், பத்து நிமிஷத்துக்கெல்லாம் திரும்பி வந்து கார்டைக் கொடுத்தான்.

"என்ன சொன்னார்கள்?" என்று அடக்க முடியாத ஆவலுடன் கேட்டான் நாகராஜன்.

"நான்தான் அப்பொழுதே சொன்னேனே! ஆறு மணிக்குப் பிறகு அம்மா யாரையும் பார்க்க மாட்டாங்கன்னுட்டு" என்றான் அவன். பிறகு தொடர்ந்து, "கச்சேரி விஷயமாய்ப் பாக்கணுமின்னு, பெரியம்மா இருக்காங்களே, — இவுங்க பாட்டி — அவங்களை நாளைக்குப் பத்து மணிக்கு வந்து ஆபீஸ் ரூமிலே பாக்கச் சொன்னாங்க" என்று கூறிவிட்டு அங்கிருந்து போய்விட்டான் கூர்க்கா.




பெருத்த ஏமாற்றத்துடன் மோட்டாரில் ஏறிக் கொண்டான் நாகராஜன்.

"என்ன சொன்னனப்பா?" என்று ஆவலுடன் கேட்ட பாஸ்கரனுக்கு, "இனி மேல் இன்று யாரையும் பார்க்க மாட்டாளாம். நாளைக்குப் பத்து மணிக்கு வரச் சொல்லியிருக்கிறாள்" என்று அரைகுறையான ஒரு பொய்யைச் சொல்லி வைத்தான். ஆனால் அவன் மனம் அவமானத்தினால் குன்றியது.

"அப்படியானால் நாளைக்கு வந்து பார்த்துக் கொண்டால் போச்சு" என்று கூறிக் கொண்டே காரைக் கிளப்பினான் பாஸ்கரன்.

* * *

"சியாமளி! இன்று சினிமாவுக்குப் போகலாமா?" என்று காலையில் காப்பி குடிக்கும் பொழுது கேட்டான் நாகராஜன். ஆச்சரியத்துடன் அவனை நோக்கினாள் சியாமளி.

"உங்களுடைய கழகத்துக்குப் போக வேண்டாமா?"

"வேண்டாம், நான் காரியதரிசி பதவியை ராஜினாமாச் செய்து விட்டேன்" என்று சிரித்தான் அவன்.

சியாமளி ஒன்றும் பதில் கூறவில்லை. ஆனால் அவளுடைய மலர்ந்த முகம் நாகராஜனை மன்னித்து விட்டாளெனப் பறை சாற்றியது.

நாகராஜனின் மனமும் இப்பொழுது கலக்கம் நீங்கித் தெளிவு பெற்றது.

# ஏமாந்தவர் யார்?

வத்ஸலா

செல்வரங்கம் பிள்ளை தம் பங்களாவின் காம்பவுண்டுச் சுவரையொட்டி வரிசையாகக் கட்டிவிட்டிருந்த அந்த நான்கு அறைகளில் வசித்து வந்த பிரம்மச்சாரிகளில் தேவராஜனும் ஒருவன். ஆனால் ஒரு விஷயத்தில் மட்டும் மற்றவர்களுக்கும், அவனுக்கும் வித்தியாசம் இருந்தது. காலையில், எழுந்ததும் தங்கள் காரியாலயத்துக்கு நேரமாகிவிடப் போகிறதே என்று அவசரம் அவசரமாகக் காரியங்களை முடித்துக் கொண்டு, அவரவர்கள் தங்கள் காரியாலயங்களை நோக்கி ஓடும்போது, தேவராஜன் மட்டும் நிம்மதியாக உறங்கிக் கொண்டிருப்பான்.

அவன் நான்கு மாதங்களுக்கு முன்பு தான் வேலை செய்து கொண்டிருந்த கம்பெனி முதலாளியை அலட்சியமாக எதிர்த்துக் கொண்டதின் பயனாகத் தன் தகப்பனார் சிரமப்பட்டுச் செய்து வைத்த வேலையை அரை நொடியில் இழக்கும்படி நேர்ந்து விட்டது.

ஆனால், அவன் தகப்பனார் அதைப் பெரிதாக எடுத்துக் கொண்டு அவனைக் கண்டிக்கவில்லை. குடும்பத்துடன் கிராமத்தில் வசித்து வந்த அவர் தமக்குச் செலவுக்கு எவ்வளவு நெருக்கடியான போதிலும் தன் மூத்த பிள்ளைக்கு மட்டும் மாதம் தவறாமல் நூறு ரூபாய் அனுப்பி வைத்தார். தேவராஜன் அதுவே போதாது என்று மூக்கால் அழுதான். தவிர, தகப்பனார் எவ்வளவு வேண்டி எழுதியும், கிராமத்துக்குச் சென்று அவருக்கு உதவியாக இருந்து நிலபுலன்களைக் கவனிக்க மறுத்து விட்டான்.

அன்று காலையில் தேவராஜன் தூக்கத்திலிருந்து விடுபட்டும் படுக்கையை விட்டு எழுந்திருக்க மனமில்லாதவனாகக் கண்களை மூடியபடி பல இன்பக் கனவுகள் கண்டவாறு புரண்டு கொண்டிருந்தான்.

அவன் நண்பர் ஒருவர்—சமீபத்தில் கடற்கரையில் அடிக்கடி சந்திக்க நேரிட்டு அறிமுகமானவர்—இரண்டொரு தினங்களுக்கு முன்பு அவனுக்கு ஒரு நல்ல செய்தியைத் தெரிவித்தார். இருவரும் தங்கள் சொந்த விஷயங்களைப் பரிமாறிக் கொண்டனர். தேவராஜன் தன் சாமர்த்தியமான பேச்சினால் அந்த மனிதரின் நல்ல அபிப்பிராயத்தை ஓரளவு பெற்றிருந்தான். ஆதலால், அவர் அவன் வேலையில்லாமல் சிரமப்படுகிறான் என்று சொல்லவும் மிகவும் அனுதாபப்பட்டார்.

"மிஸ்டர் தேவராஜன்! எங்கள் காரியாலயத்தில் பொறுப்புள்ள உத்தியோகம் ஒன்று காலியாக யிருக்கிறது. அதற்கு ஒரு நம்பிக்கையுள்ள வரை நியமிக்க வேண்டுமென்று எங்கள் முதலாளி சொல்லி இருக்கிறார். நான் அந்த வேலைக்கு உங்களைக் கட்டாயம் சிபாரிசு செய்கிறேன்" என்று சொன்னார்.

தேவராஜன் தன் காதுகளையே நம்ப முடியாதவனாக, "நிஜமாகத் தான் சொல்லுகிறீர்களா?" என்று வியப்புடன் கேட்டான்.

"வாஸ்தவமாகத் தான் சொல்லுகிறேன். முதலாளி மிகவும் நல்லவர். என் வார்த்தையைத் தட்ட மாட்டார். நிச்சயம் உம்மை வேலைக்கு எடுத்துக் கொள்வார். சம்பளம் இருநூறு ரூபாய் கிடைக்கும்!"

"சம்பளம் கிடக்கட்டும், ஸார்! வேலை எப்போது கிடைக்கும்? நான் வேண்டுமானால் நாளை உங்கள் ஆபீஸுக்கு வரட்டுமா?" என்று கேட்டான் தேவராஜன் கெஞ்சும் குரலில்.

"இப்பொழுது வந்து பிரயோசனமில்லை. எங்கள் எஜமானர் ஊரில் இல்லை. கல்கத்தாவில் எங்கள் கம்பெனியின் கிளை ஸ்தாபனம் ஒன்றைத் திறந்து வைக்கப் போய் இருக்கிறார். அவர் ஒரு வாரத்தில் திரும்பி விடுவார். அவர் வந்ததும் கேட்டு நானே வேலையைப் பற்றிய ஒரு முடிவை உமக்கு அறிவிக்கிறேன்" என்று கூறியபடியே இடத்தைவிட்டு எழுந்திருந்த அவர் மீண்டும், "என்னை நம்புங்கள் மிஸ்டர் தேவராஜன்! இந்த வேலை கிடைத்து விட்டதென்றே வைத்துக் கொள்ளுங்கள்!" என்று கூறி விடைபெற்றுக் கொண்டார்.

"இந்த வேலைமட்டும் கிடைத்துவிட்டால் கவலையே இல்லை. அப்புறம் அப்பாவிடம் பணத்தை எதிர்பார்த்து, ஆயிரம் கணக்குகள் ஒப்பிக்க வேண்டாம். நம் இஷ்டப்படி சந்தோஷமாகச் செலவழிக்கலாம்" என்று பலவாறு மனக்கோட்டை கட்டி மகிழ்ந்து



கொண்டிருந்த தேவராஜன், எழுந்திருக்கும் உத்தேசத்துடன் கண்களைத் திறக்கும் சமயம் அருகில் இருமல் சத்தம் கேட்டு மறுபடியும் கண்களை இறுக மூடிக் கொண்டான்.

வந்திருப்பவர் கரூர் வெங்கடாசலம் தான் என்று அறிந்து கொண்ட அவன் உள்ளத்தில் ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. பின்னே இருக்காதா? அவரிடம் வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுக்காமல் 'டிமிக்கி' கொடுத்து வந்தான். ஆகவே தேவராஜனைத் தேடிக் கொண்டு அவர் இன்று நேரிடையாக அவன் வீட்டுக்கே வந்து விட்டாரே!

கட்டிலுக்குச் சற்று தூரத்தில் போடப்பட்டிருந்த நாற்காலியில் அமர்ந்து அவன் எழுந்திருப்பதையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவரை ஓரக் கண்ணைத் திறந்து கவனித்த தேவராஜன் மீண்டும் தூங்குவது போல் பாசாங்கு செய்தான்.

'கரூரார் வியாபார சம்பந்தமாகப் பல அலுவல்களில் ஆழ்ந்திருப்பவராதலால் அதிக நேரம் காத்துக் கொண்டிராமல் போய் விடுவார்' என்று எதிர்பார்த்த தேவராஜனுக்கு பெருத்த ஏமாற்றம்தான் ஏற்பட்டது.

மணி ஒன்பது அடித்தும் அவர் இருந்த இடத்தை விட்டு அசையாமல் கல்லுப் பிள்ளையார் மாதிரி அமர்ந்திருக்கவே தேவராஜனுக்குப் பொறுக்க முடியாத சினம் மூண்டது. ஆத்திரத்தோடு பற்களைக் கடித்த வண்ணம் போர்வையை உதறி விட்டுப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். "எதற்காக இப்படிக் காலையில் வந்து உட்கார்ந்து கொண்டு என் கழுத்தை அறுக்கிறீர்கள்?" என்று எரிந்து விழுந்த அவனைப் பார்த்துப் புன்னகை செய்தார் வெங்கடாசலம்.



"இல்லை, தம்பி! நீ நம்மிடம் இருநூறு ரூபாய் பணம் கைமாத்தாக வாங்கிக்கொண்டு வருஷம் எத்தனை நாளாகிறது? இதுவரை நீயே வந்து கொடுப்பாய் என்று பார்த்தேன். வந்தபாடில்லை. அதனால் நானே நேரில் வரவேண்டியதாகி விட்டது" என்றார்.

"நீங்கள் சொல்லாமலே அதை நான் தெரிந்துகொண்டேன். உங்கள் கடனைத்திருப்பிக் கொடுக்க இப்போது பணம் என்னிடம் இல்லை" என்றான் தேவராஜன்.

"ஒரேயடியாக அப்படிச் சொல்லிவிட்டா, என்ன செய்வது? உன்னால் மொத்தமாகக் கொடுக்க முடியாவிட்டால் மாதம் கொஞ்சம் கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறேன்."

"மாதம் பிறந்தவுடன் எந்தச் சம்பளம் வருகிறது? அதிலிருந்து நான் உங்கள் கடனைக் கொஞ்சமாகவோ, கூடுதலாகவோ கொடுப்பதற்கு?" என்று அலட்சியமாகக் கூறினான் தேவராஜன்.

"சம்பளம் வந்தால்தான் பணமா? உன் தகப்பனார் மாதா மாதம் தவறாமல் பணம் அனுப்புகிறாராமே, அதில் கொடுத்துவிடக் கூடாதா?" என்று கேட்டார்.

இதுவரை அவருடன் வேண்டா வெறுப்பாகப் பேசிவந்த அவன் இப்போது அவர் கூறியதைக் கேட்டதும் உக்ரமூர்த்தியானான்!

"போதும், நிறுத்தும்! நீர் யாரைய்யா எனக்குப் புத்தி சொல்லுவதற்கு? இப்பொழுது என்னிடம் பணம் இல்லை."

சிறிதும் மனிதத் தன்மையற்ற அவன் பேச்சு அவர் மனத்தை மிகவும் புண்படுத்திவிட்டது. "கொடுத்த பணத்தைக் கேட்டால் பணம் இல்லை என்று சொல்லுகிறாய்? இருக்கட்டும். என் மகன் ஊரிலிருந்து வந்திருக்கிறான். நாளைக்கு அவனை அனுப்பி வைக்கிறேன். அவனிடம் உன் வாய் வீச்சு ஒன்றும் பலிக்காது" என்று கூறிவிட்டு வெடுக்கென்று நாற்காலியை விட்டு எழுந்தார் வெங்கடாசலம்.

"உம்ம பிள்ளையில்லை, வேறு யார் வந்தாலும் ஒரு தம்பிடிக் காசு என்னிடமிருந்து வாங்க முடியாது" என்று வீம்பு பேசிய தேவராஜனை நின்று திரும்பிப் பார்த்து விட்டுச் சென்றார் வெங்கடாசலம்.

கண்ணாடியின் முன் நின்று தன் கிராப்பை அழகாக வாரி விடுவதில் ஈடுபட்டிருந்த தேவராஜனுக்கு முதல் நாள் கரூர் வெங்கடாசலத்திற்கும், தனக்கும் நடந்த வாக்குவாதம் ஞாபகத்துக்கு வந்தது. "அந்தக் கிழம் இன்று தன் மகனை அனுப்புவதாகப் பயமுறுத்தியதே. ஒருவேளை அவன் வந்தாலும் வரலாம். அதற்குள் நாம் வெளியே போய்விட வேண்டும்" என்று நினைத்த அதே சமயம் கண்ணாடியில் மற்றும் ஒரு புது முகம் தெரியவே திரும்பிப் பார்த்தான்.

கிஜார் ஜேபியில் கைவிட்ட வண்ணம் அவன் அறையின் வாயிற்படியருகே நின்று கொண்டிருந்தான் ஒரு புது இளைஞன்.

கரூர் வெங்கடாலத்தைப் போன்ற அவனுடைய ஒடிசலான உருவத்தையும், நெற்றியில் துலங்கிய நேற்று நாமத்தையும் பார்த்துவிட்டு, அவர் ஊரிலிருந்து வந்திருப்பதாகச் சொன்ன அவருடைய பிள்ளையாக இருக்குமோ என்று சந்தேகப்பட்டான் தேவராஜன். அந்த இளைஞனை, "நீங்கள் யார்? என்ன வேண்டும்" என்று அதட்டலாகக் கேட்டான்.

"நான் வெங்கடாசலம் அவர்களின் பிள்ளை. தேவராஜனைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறேன். நீங்கள்தானே அவர்?" என்று கேட்டான் விறைப்பாக வந்தவன்.

தேவராஜனின் சந்தேகம் தீர்ந்தது. அதே சமயம் அவன் மூளையும் மின்னல் வேகத்தில் வேலை செய்தது. மறு கணம் தன்னைச் சமாளித்துக் கொண்டவனாக, "நான் தேவராஜனுடைய நண்பன் ரகு. நேற்றைய தினம் திடீரென்று அவனுடைய தகப்பனாருக்கு அபாயம் என்று கிராமத்திலிருந்து தந்தி வந்தது. அதற்காக ஓடியிருக்கிறான். பாவம் ரயிலுக்குப் பணமில்லாமல் விழித்தான். நான்தான் கொடுத்து அனுப்பினேன்" என்று ஒரே போடாகப் போட்டான்.

அவன் பேச்சைக் கேட்டு வந்தவன் ஒரு கணம் தயங்கி நின்றான். "அப்படியானால் ஊருக்குச் சென்றிருக்கும் அவர் தன் தகப்பனாருக்கு உடம்பு குணமான பிறகுதான் திரும்பி வருவார் என்று சொல்லுங்கள்" என்று ஏமாற்றத்தோடு வினவியபடியே புறப்பட்டான். அவனை வழியனுப்ப வாயிற்படி வரை வந்து நின்றுகொண்டு, "ஆமாம்! தேவராஜன் வரக் குறைந்தது ஒரு மாதமாவது பிடிக்கும்" என்று கூறியவன் பக்கத்து அறையில் நின்று கொண்டிருந்த சந்தானத்தைக் கண்டதும் ஒரு கணம் திடுக்கிட்டான்.

ஆனால் சந்தானம் உதட்டில் கேலிப் புன்னகையொன்றை நெளிய விட்டுக் கொண்டு மௌனமாக நின்றிருந்தானே தவிர அவன் பயந்தபடி வந்தவனிடம் ஒன்றும் குட்டை உடைக்கவில்லை. ஆகவே, தேவராஜன் கருராரின் புத்திரனை ஏமாற்றி அனுப்பிவிட்ட தன் சாமர்த்தியத்தை எண்ணிப் பெருமிதம் அடைந்தவனாக உள்ளே சென்றான்.

அந்த இளைஞன் வந்து விட்டுப் போன பிறகு தேவராஜன் சுமார் ஒரு வாரம் வரை வெளியில் எங்கும் போகவில்லை. அதற்குக் காரணம் தப்பித் தவறிக் கரூர் வெங்கடாசலத்தின் கண்ணில் பட்டு விடப் போகிறோமே என்பது மட்டுமல்ல. அவனுக்கு இரண்டு மூன்று தினங்களாக உடம்பும் கொஞ்சம் அசௌகரியமாக யிருந்தது.

தன் அறையினுள் நாற்காலியில் அமர்ந்து சிகரெட் ஒன்றைப் புகைத்தபடி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த தேவராஜன் மல்யுத்த வீரனைப் போல் நல்ல ஆகிருதியுடன் கூடிய ஒரு ஆள், எங்கோ வெளியில் சென்று விட்டு வந்து கொண்டிருந்த சந்தானத்தை நிறுத்தி என்னமோ விசாரிப்பதையும், அதற்கு அவன் தன் அறையைச் சுட்டிக் காட்டுவதையும் கண்டான்.

கையில் புகைந்து கொண்டிருந்த சிகரெட்டைக் கீழே யெறிந்து விட்டு எழுந்திருந்த அவன் தன் அருகே வந்த புதியவனை நோக்கி "வாங்கோ, ஸார்! யார் நீங்கள்?" என்று விசாரித்தான்.

"உங்க வரவேற்புகளெல்லாம் இடக்கட்டும் ஐயா! அன்றைக்கு என் தகப்பனார் பணம் கேட்க வந்தாரானால் ஒரேயடியாகத் துள்ளிக் குதித்து அவரை அவமரியாதையாகப் பேசி அனுப்பினீராமே! மறுநாளே வந்து விசாரிக்கணும் என்று நினைத்தேன். வேலைத் தொந்தரவினால் முடியாமல் போச்சு" என்று ஆவேசம் வந்தவனைப் போல் படப் படப்பாகப் பொரிந்து கொட்டினான். வந்தவனின் எதிர்பாராத தாக்குதலைக் கண்டு அயர்ந்து விட்டான் தேவராஜன்.

"ஆமாம்! நீங்கள்தான் கரூர் வெங்கடாசலத்தின் மகன் என்றால், அன்றைக்கு வந்த நோஞ்சல் வாலிபன் யார்?" என்று திகைப்போடு அவன் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லியது அப்போது தபால்காரன் அவனிடம் கொண்டு கொடுத்த கடிதம்.

"அன்புள்ள தேவராஜன்,

ஒரு வாரத்துக்கு முன்பு உம்மிடம் சொல்லியபடி எங்கள் எஜமானர் கல்கத்தாவிலிருந்து வந்ததும் நான் அவரிடம் அந்த வேலைக்கு உம்மைப் பற்றிச் சிபார்சு செய்தேன். அதிர்ஷ்டவசமாக அதற்கு அவர் ஒப்புக் கொண்டதுடன் உன்னையே நேரில் அழைத்து வரும்படியும் கூறினார். எங்கள் கல்கத்தாக் கிளை ஸ்தாபனத்தின் பொறுப்பை ஏற்றுக் கொள்ளப்பட்ட நான் அன்றிரவே கல்கத்தா புறப்படும்படி நேர்ந்து விட்டது. நான் போவதற்குள் உன்னை எங்கள் முதலாளிக்கு அறிமுகம் செய்து வைத்து விடலாம் என்ற உத்தேசத்துடன், என் பிள்ளை வேதரத்தினத்தை உம்மை அழைத்துவர அனுப்பினேன். ஆனால், நீ உன் தகப்பனாரின் பொருட்டு ஊருக்குச் சென்றிருப்பதாகவும், திரும்பிவர ஒரு மாதம் பிடிக்கும் என்று உன் நண்பன் ரகு கூறினனும். எஜமானரோ. அந்தக் காலி ஸ்தானத்துக்கு வேறு ஆளை நியமிக்க அவசரப்பட்டார். முடிவில் காலேஜில் படித்துக் கொண்டிருந்த என் மகன் வேதரத்தினத்துக்கே அந்த உத்தியோகத்தை வாங்கிக் கொடுத்து விட்டேன். நாளைக்கே படிப்பு முடிந்து விட்டாலும் இந்த மாதிரி நல்ல வேலை கிடைக்கும் என்பது என்ன நிச்சயம்! மொத்தத்தில் உனக்கு அதிர்ஷ்டமில்லை. அவ்வளவுதான். நான் சென்னை வர ஒரு வருஷம் பிடிக்கும்.

ஏ. எஸ். வெங்கடாசலம்"

என்று எழுதியிருந்த அக் கடிதத்தைக் கண்டதும் தேவராஜன், 'ஐயோ! அன்று வந்தது 'பிரஸாத்' கம்பெனி மானேஜர் வெங்கடாசலத்தின் புத்திரன் என்று தெரியாமல் ஏமாந்து போய் விட்டேனே. அநியாயமாக இருநூறு ரூபாய் வேலை போய்விட்டதே!" என்று வாய் விட்டு அலறினான் தேவராஜன். மற்ற இருவரும் விஷயம் ஒன்றும் புரியாதவர்களாய்த் திகைத்து நின்றனர்.

# கிளாக்ஸோ குழந்தை குதூகலக் குழந்தை



குழந்தைகள் ஸோக்ஸோவைச் சாப்பிட்டு புஷ்டியாகவும் நன்ருகவும் வளர்கின்றன — நிலையான வளர்ச்சிக்கு அதுதான் அவைகளுக்குத் தேவை. ஸோக்ஸோ மிகப் பரிசுத்தமான பால் ஆகாரம் ... உஷ்ணப் பிரதேசங்களில் உபயோகிப்பதன்பொருட்டு பிரத்யேகமாகத் தயாரிக்கப்பெற்றது. ஸோக்ஸோ கைபடாதது. கட்டி, ரத்தசோகை முதலிய நோய்களிலிருந்து காப்பாற்றுவதன்பொருட்டு விடமின் 'டி' யும் இரும்பும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.



**Glaxo**

### கிளாக்ஸோ பரிபூரண குழந்தை ஆகாரம்

குழந்தை பிறந்த ஆருவது மாதத்திலிருந்து அதற்கு முதல் கெட்டி—உணவாக பாரெக்ஸைக் கொடுக்க ஆரம்பிக்கலாம். பாலும் சர்க்கரையும் சேர்ந்த பாரெக்ஸ் திருப்தியாயிருப்பதுடன் சுலபமாக ஜீரணமாகிறது. பாரெக்ஸ் இப்போது இந்தியாவில் விற்கப்படுகிறது.

கிளாக்ஸோ லேபரட்டரீஸ் (இந்தியா) லிட்., பம்பாய் . கல்கத்தா . மதராஸ்.

# உத்தம தம்பதிகள்

சரஸன்





"பவானி! நான் டில்லிக்குப் போய் வர வேண்டும். திரும்பிவர ஒரு வாரம் பிடிக்கும்" என்றார் ஹரிஹரன்.

"என்ன! டில்லிக்கா! எதற்காக!" என்று வியப்புடன் கேட்டாள் பவானி.

"என் கம்பெனி முதலாளி ஒரு அவசரக் காரியமாய் டில்லிக்குப் போகிறார். உதவிக்காக என்னையும் அழைத்துப் போகிறார். நம்மால் என்னமோ செலவு செய்து கொண்டு போக முடியாது. இந்தச் சந்தர்ப்பத்தையாவது பயன்படுத்திக் கொள்ளலாமல்லவா!" என்றார் ஹரிஹரன்.

பவானிக்கும் ஆனந்தம்தான். தன் கணவன் டில்லிக்குப் போய் வந்த வரலாற்றை நாலு பேருக்குச் சொல்லிப் பெருமைப் படலாமல்லவா! தவிர, இன்னொரு தனி சபலமும் இருந்தது அவளுக்கு 'டில்லி' என்ற பெயரைக் கேட்டதும். அவளுடைய பால்யத் தோழி அநுராதா டில்லியில்தான் இருந்தாள். அவள் கணவன் நாகநாதனுக்கு அங்கு ஒரு பிரபலமான கம்பெனியில் பெரிய வேலை. அறுநூறு ரூபாய் சம்பளம். டில்லிக்குப் போகும் தன் கணவனை, அப்படியே அநுராதா தம்பதிகளையும் பார்த்து விட்டு வரச் சொல்லலாமே என்ற எண்ணம். அதை வாய்விட்டும் சொல்லிவிட்டாள் தன் கணவனிடம்.

"பவானி! உன் சபலம் எனக்குத் தெரியும். ஆனால் அது நடக்கிற காரியம் இல்லை. நம் நிலைமையையும், நாகநாதன் நிலைமையையும் ஒப்பிட்டு நீ புரிந்து கொள்ளவில்லை. பால்ய நண்பன் என்ற முறையில் அவனைப் பார்த்துவிட்டு வரத்தான் போகிறேன். ஆனால் அந்தப் பிரஸ்தாபத்தை மட்டும் எடுக்க மாட்டேன்" என்றார் ஹரிஹரன்.

"சரி, உங்கள் இஷ்டம்" என்று கூறிவிட்டு உள்ளே சென்றாள் பவானி.

ஹரிஹரன் டில்லிக்குச் சென்றார். பவானி தன் கணவனின் டில்லி பயணத்தைப் பற்றிப் பலவாறு கற்பனை செய்தாள். பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு நடந்த சம்பவங்கள் தொடர்ச்சியாக, அவள் மனத்திரையிலே நிழலாடின.

*     *     *

அப்போது ஹரிஹரனும் நாகநாதனும் சென்னையில் ஒரே வீட்டில் குடியிருந்தனர். இருவரும் மிக்க அந்நியோன்னியமாய்ப் பழகி வந்தனர். இருவருடைய மனைவிமாரான முறையே பவானியும் அநுராதாவும் தங்கள் கணவன்மார்களுடைய நட்பைக் காட்டிலும் ஒருபடி அதிகமான நட்புரிமையுடன் நடந்து கொண்டனர். பார்ப்பவர்களுக்கு, அவ்விரு தம்பதிகளும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே தோன்றினார்கள்.

நாகநாதனுக்கும் ஹரிஹரனுக்கும் வெவ்வேறு கம்பெனிகளில் வேலை. நாகநாதனுக்கு அப்போது எழுபது ரூபாயும், ஹரிஹரனுக்கு ஐம்பது ரூபாயும் சம்பளம். நாகநாதனுக்குச் சம்பளத்தைத் தவிர, நிலபுலங்களின் மூலம் வருமானம் வரும். ஹரிஹரனோ தான் பெறும் சம்பளத்தின் மூலம் தான் தன் குடும்பத்தை நடத்தியாக வேண்டும். அடிக்கடி அவன் வீட்டில் பண்டங்கள் தட்டு ஏற்படும். அப்போதெல்லாம் நாகநாதன் குடும்பம் தான் ஹரிஹரன் குடும்பத்திற்குப் பெரிதும் உதவி புரிந்தது.

"ஹரிஹரன்! நீங்கள் எதற்கும் சங்கோசப் படக்கூடாது. என்னை உங்கள் குடும்பத்தில் ஒரு நபராய்ப் பாவிக்க வேண்டும். என்ன வேணுமானாலும் கேளுங்கள்" என்பார் நாகநாதன்.

"பவானி! நீ இம்மாதிரி சங்கோசப்பட்டால் எனக்குக் கெட்ட கோபம் வரும். நான் வேறு, நீ வேறு!" என்று பவானியை அன்புடன் கடிந்து கொள்ளுவாள் அநுராதாவும்.

இப்படியாக, பரஸ்பர அன்பும் ஆதரவும் கலந்து இரு குடும்பங்களும் ஒரு குடும்பமாக நடந்து வந்தன. நாகநாதனுக்குப் பத்து வயதில் ஒரு பையன் உண்டு, பாநு என்று. ஹரிஹரனுக்குச் சங்கரி என்று ஒரு பெண். வயது ஆறு இருக்கும். இவ்விரு குழந்தைகளும் தங்கள் பெற்றோரையும் தூக்கி யடித்தார்கள் நட்புப் பாராட்டுதலிலே. பள்ளிக்குச் செல்லும்போதும் சரி, சாப்பிடும் போதும் சரி, விளையாடும்போதும் சரி, ஏன்! அழும்போதுகூடச் சேர்ந்தே அழுவார்கள். குழந்தைகள் இவ்வளவு அன்னியோன்னிய பாவத்துடன் நடந்து கொள்வதைக் கண்ணுற்ற பெற்றோரின் உள்ளம் பெருமிதம் கொண்டது. ஒரு நாள் ஹரிஹரன் வேடிக்கையாக, "மிஸ்டர், நாகநாதன்! இவர்களுடைய ஸ்நேகத்தைப் பார்த்தால், வாழ்க்கை முழுவதும் இவர்களைப் பிரிக்க முடியாது போலிருக்கிறதே! என்ன அன்பு! என்ன அன்னியோன்னியம்!" என்றார்.

அதைக் கேட்ட நாகநாதன் புன்முறுவலுடன் "ஆம்! எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. ஆண்டவன் இச்சை அப்படியே இருக்கட்டும்!" என்று மகிழ்ந்து கூறினார்.

கணவன்மார்கள் பேசிக் கொள்வதைக் கேட்ட மனைவிமார்களும் மனம் குளிர்ந்தனர்.

"பகவான் அருளால் அப்படியே நடக்கட்டும். எனக்குப் பரம திருப்தி!" என்றாள் அநுராதா.

"நாங்கள் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!" என்றாள் பவானி. அவள் சொல்லிலே, தங்களைப் பற்றிய தாழ்வு மனப்பான்மை இலேசாய்த் தொனித்ததைக் கவனித்த அநுராதா, "பவானி! உன்னைவிட நான் எந்த வகையிலும் உயர்த்தியில்லை. இருவரும் சமம் என்று வைத்துக்கொள்; தெரிகிறதா!" என்று உரிமையுடன் மடக்கினாள்.



இப்படியாக, பாநுவுக்கும் சங்கரிக்கும் பால்யப் பருவத்திலேயே நிச்சயதார்த்தம் செய்யப்பட்டது. நாகநாதன் தன் பிள்ளை பாநுவைப் பார்த்து, "நீ யாரையடா கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாய்!" என்று கேட்பார். "சங்கரியைத்தான்!" என்று பளிச்சென்று விடை கிடைக்கும் அவனிடமிருந்து. அதேபோலத்தான் சங்கரியைக் கேட்டாலும் பதில் கிடைக்கும்.

இவ்வாறிருக்கையில் ஒரு நாள் நாகநாதன் ஒரு அணுகுண்டைத் தூக்கிப் போட்டார். டில்லியில் உள்ள தங்கள் தலைமை ஆபீஸுக்குத் தன்னை மாற்றி யிருப்பதாயும், சம்பளம் இருநூறு என்றும் தெரிவித்தார். அநுராதா துள்ளிக் குதித்தாள். டில்லியில் வேலை யென்றால் சாமான்யமா! ஆனால் அடுத்தாற்போலவே ஓர் துயரமும் ஏற்பட்டது, தன் பிரிய சகி பவானியைப் பிரிய நேரிடுகிறதே என்று. பவானியும் ஹரிஹரனும் ரொம்பவும் இடிந்து போனார்கள், இந்தப் பிரியமான தம்பதிகள் தங்களை விட்டுப் பிரியப் போகிறார்களே என்று. குழந்தைகளின் மனநிலையை விவரிக்க இயலாது. எல்லோருடைய மனமும் சஞ்சலப்படும் வகையில் இரு குடும்பங்களும் பிரிய மனமின்றிப் பிரிந்தன.

ஹரிஹரன் தம்பதிகளுக்கு வீடே வெறிச்சோடி விட்டது. குழந்தை சங்கரியின் உள்ளம் எதையோ பறி கொடுத்து விட்டது போலத் தோன்றியது. வழக்கமாய் அவள் கூப்பிடுவதுபோல, "பாநு" என்று கூப்பிட்டு, ஏமாற்றமடைவதைக் காணப் பவானிக்கு அழுகையே வந்துவிடும்.

ஒரு நாள் ஹரிஹரன், தன் மனைவியிடம் "நாம் ஒன்று நினைத்தோம். தெய்வம் வேறொன்று நினைத்துவிட்டது! எல்லாம் ரயில் பிரயாணம் போலத்தான்" என்றார்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. வருகிற அதிர்ஷ்டத்தை யார் உதறித் தள்ளுவார்கள்! அதனால் அநுராதாவின் தீர்மானம் மாறிவிட்டது. நீங்கள் பாருங்கள்!" என்றாள் நம்பிக்கையுடன் பவானி.

"பைத்தியமே! விஷயம் தெரியுமா! இப்போது நாகநாதனுக்கு நானூறு ரூபாய்ச் சம்பளம். எனக்கு! அதில் நாலில் ஒன்று. பொருத்தமா? யோசித்துப் பார். நான் சொல்வதைக் கேள். நம் சங்கரிக்கு வேறு வரன் தேட வேண்டியதுதான்!" என்றார் ஹரிஹரன்.

பவானி விடவில்லை. "இருக்கட்டும். அநுராதா சொன்ன சொல் பிறழ்பவளல்ல. அந்தஸ்து அவளுடைய வார்த்தையை மாற்றி விடாது. எனக்குப் பூரணமான நம்பிக்கை இருக்கிறது" என்றாள்.

"பவானி! உன் நம்பிக்கைக்கு அர்த்தமேயில்லை. வியர்த்தந்தான்!" என்றார் சலிப்புடன் ஹரிஹரன்.

இந்தப் பேச்சு இப்போது அடிபடக் காரணம், சங்கரி பதினாறு வயதுக் கன்னிகையாகிக் கல்யாணத்துக்கு நின்று கொண்டிருந்ததுதான்.

"சரி! எனக்காகவாவது உங்கள் நண்பருக்கு ஒரு காகிதம் எழுதுங்களேன்!" என்றாள் பவானி.

வேண்டா வெறுப்புடன் ஹரிஹரன் கடிதம் எழுதினார். ஆனால் பதில் இல்லை.

"விலாசம் சரியாய்க் குறிப்பிட்டிருக்க மாட்டீர்கள். மறுபடியும் எழுதுங்கள்" என்றாள் பவானி. அதற்கும் பதில் இல்லை.

"பார்த்தாயா, பவானி! பதில்கூடப் போடவில்லை அவர்கள். விஷயம் புரிந்து விட்டதா இப்போது!" என்றார் ஹரிஹரன் குத்தலாக.

இப்படியிருக்கையில், ஒரு நாள் யாரோ டில்லியிலிருந்து வந்த ஒருவர் மூலம் நாகநாதன் தன் பையனுக்குக் கல்யாணம் செய்யத் தீர்மானித்திருப்பதாயும், சீக்கிரம் நடைபெறுமென்றும் ஹரிஹரன் கேள்விப்பட்டார்.

இதைக் கேட்டபோது பவானி இடி விழுந்து போனாள். கொஞ்சம் கொஞ்சமாய் அவளுக்கும் நம்பிக்கை தகர்வது போலிருந்தது. "ஹூம்! வாக்கு கொடுத்து வைத்தது அவ்வளவுதான்" என்று பெருமூச்சு விட்டாள். அதை அடுத்துக் கணவனிடம், "சரி! நீங்கள் வெளியே வரன் பாருங்கள்" என்றும் சொன்னாள்.

ஹரிஹரனும் சில வரன்களைப் பார்த்தார். ஒன்றும் சரிப்பட்டு வரவில்லை. அவர் கையில் உள்ள தொகை வெகு சொற்பம். அதற்கேற்ப வரன் தேடுவதென்றால் அத்தனை லகுவாயில்லை.

இந்த நிலையில்தான், திடீரென்று எதிர்பாராத வகையில் அவருக்கு டில்லிப்பிரயாணம் கிடைத்தது.

ஆதியில் நம்பிக்கை வைத்து, இடையில் அதை இழந்து, வேறு இடத்தில் வரன் தேடச் செய்த பவானிக்கு, மீண்டும் அந்த நம்பிக்கை துளிர்விடத் தொடங்கியது, தன் கணவனின் டில்லிப் பயணம் காரணமாக. பலபல எண்ணங்கள் அவள் மனத்திலே தோன்றி மறைந்தன. இவ்விதம் இருக்கையில், கணவன் டில்லிக்குச் சென்ற மறு வாரம் ஒரு கடிதம் கிடைத்தது அவளுக்கு:

"நான் வந்த வேலை முடியவில்லை. இன்னும் ஒரு வாரம் இங்கு தங்கவேண்டியிருக்கிறது. நண்பன் நாகநாதனைக் காணச் சென்றேன். அவர் குடும்பத்துடன் ஒரு மாத லீவில் சென்னைக்குச் சென்று விட்டதாயும், பையனுக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகிக் கொண்டிருப்பதாயும் கேள்விப்பட்டேன். இப்போதாவது விஷயம் உனக்கு விளங்கியிருக்கும் என்று நினைக்கிறேன்.

ஹரிஹரன்."

மீண்டும் துளிர்விட்ட நம்பிக்கை கருகிவிட்டது. ஆ! தன் கணவன் சொன்னது எத்தனை உண்மை! தன் நம்பிக்கை எத்தனை அர்த்தமற்றது! பணமும் பதவியும்தான் நம் சமூகத்திலே இன்னும் பிரதேசாதிகாரம் செலுத்துகின்றன என்பதை இதுவரை உணராத தன் முட்டாள்தனத்தை என்னவென்று சொல்வது! — இவ்விதமாய் எண்ணிப் புழுங்கினாள் பவானி.

"அம்மா! வாயேன், சீக்கிரம்!" என்று படபடப்புடன் சங்கரி கூப்பிட்ட குரல் கேட்டுச் சமையலறையிலிருந்து வெளியே வந்தாள் பவானி. வாசலில் ஒரு டாக்ஸி நின்றது. அதிலிருந்து இறங்கியவர்களைப் பார்த்ததும், ஒரு கணம் அயர்ந்துவிட்டாள் பவானி. ஆம்! அநுராதா, பாலு, நாகநாதன் மூவரும் இறங்கினார்கள்.

சமாளித்துக் கொண்ட பவானி, முகத்திலே நல்ல பாவங்களை வரவழைத்துக் கொண்டு, அநுராதாவைப் பார்த்து வரவேற்றாள்.

"பவானி! சௌக்கியமா!" என்று அன்பு ததும்பக் கேட்டாள் அநுராதா. குசலம் ஆனதும் பல விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள் இருவரும். பேச்சின் இடையே தன் கணவர் ஆபீஸ் காரியமாக டில்லி போயிருக்கும் விஷயத்தையும் குறிப்பிட்டாள் பவானி.

"அடாடா! நாங்கள் இந்தச் சமயம் பார்த்து அங்கு இல்லாமற் போனோமே!" என்று வருத்தம் தெரிவித்தாள் அநுராதா.

"அவர்கூட எழுதியிருந்தார், உங்களைத் தேடிக் கொண்டு போனதாயும், நீங்கள் சென்னைக்குப் புறப்பட்டு வந்திருப்பதாய்க் கேள்விப் பட்டதாகவும்" என்றாள் பவானி.

கல்யாணப் பேச்சைப் பற்றி எடுக்கலாமா வேண்டாமா என்று ஒரு கணம் யோசித்த பவானி, 'எடுத்துத்தான் பார்ப்போமே!' என்று எண்ணி, "ஆமாம், அநுராதா! பாலுவுக்குக் கல்யாணம் ஏதோ நிச்சயம் ஆகியிருப்பதாய்க் கேள்விப்பட்டேனே! எந்த இடம்!" என்று கேட்டாள். விருப்பமில்லாத கேள்விதான் இது.

"ஆமாம். ஆனால் நிச்சயம் இப்போது ஆனதல்ல. பன்னிரண்டு வருஷத்திற்கு முன்பே ஆகிவிட்டதே!" என்று கூறி அர்த்தபுஷ்டியுடன் பார்த்தாள் பவானியை அநுராதா. அதைத் தொடர்ந்து, "என்ன! சம்பந்தியம்மா! ஒன்றும் தெரியாது போலக் கேட்கிறீர்களே! பாலுவுக்குச் சங்கரியைக் கொடுப்பதாய், நாம் ஏகோபித்துத் தீர்மானித்து விட்ட பிறகு, வேறு இடத்தில் பார்ப்பதா! நல்ல வேடிக்கை!" என்றாள் உரிமையுடனும் தீர்மானத்துடனும்.

பவானி பிரமித்துப் போனாள். "வாஸ்தவமாகவா சொல்கிறாய், அநுராதா!" என்று கேட்டவாறு அவள் கைகளைப் பற்றினாள்.

"பவானி! உனக்குச் சந்தேகமா! இதோ பார்! கல்யாணத்தை முடித்துக்கொண்டு, என் நாட்டுப் பெண் சங்கரியையும் உடன் அழைத்துப் போய் விடவேண்டும் என்ற தீர்மானத்துடன்தான் ஒரு மாதம் லீவு எடுத்துக் கொண்டு வந்திருக்கிறோம். உன் கணவர் போட்ட கடிதங்கள் எல்லாம் கிடைத்தன. பதில் கடிதம் போட்டுக் கொண்டிருப்பதை விடக் கல்யாண காரியத்தை முடித்து விட நேரிலேயே வந்து விடலாம் என்று எண்ணித்தான் பேசாமல் இருந்தோம்" என்று கூறிய அநுராதா பவானிக்குத் தெய்வம் போலவே தோன்றினாள். பணமும் பவிஷும் கிடைத்தும், மனம் மாறாமல், தனக்கு அந்த நாளில் கொடுத்த வாக்கை நிறைவேற்றி வைப்பதில் அசைக்க முடியாத உறுதிகொண்டுள்ள அநுராதாவை எப்படிப் புகழ்வது என்ன புகழ்வது என்றே தோன்றவில்லை பவானிக்கு.

"அநுராதா! உங்களை நாங்கள் சந்தேகித்து விட்டோம். மன்னித்து விடுங்கள்" என்று இருவரையும் நன்றியுடன் நோக்கினாள் பவானி.

"நாகநாதன்! நீங்கள் இருவரும் உத்தம தம்பதிகள்!" என்ற குரல் கேட்டு, எல்லாரும் திரும்பினார்கள். அப்போது அங்கே ஹரிஹரன் நன்றி புணர்ச்சியுடனும் கண்களில் ஆனந்தப் பெருக்குடனும் நின்று கொண்டிருந்தார். இத்தனை நாழிகை உள்ளே நடந்த பேச்சுகளை அவர் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறார்.

அதே சமயம் சமையலறை ஜன்னல் வழியாக இரு விழிகள் கூடத்திலே இருந்த பாலுவின் கண்களுடன் நயன பாஷையில் என்ன என்னவோ இன்ப சல்லாபங்கள் செய்து கொண்டிருந்தன!

# நீங்கள் இன்று உங்கள் பற்களை

# மக்ளீன் செய்தீர்களா?



"சாப்பாட்டுக்குப்பிறகு நான் வழக்கமாக மக்ளீன்ஸ் சென்ற பத்து வருஷ காலமாக உபயோகித்து வருகிறேன். இப்படித்தவறாமல் உங்கள் பற்பசையை நான் உபயோகித்து வந்ததால் என்பற்களைப் பற்றிப் பெருமைப்படும் பேறு கிடைத்திருக்கிறது என்பது உண்மை!"

அவளது வெற்றிப்புன்னகையைப் பார்க்கும்போது அவள் மக்ளீன் செய்திருக்கிறாள் என்பதை உணர்ந்துகொள்ளலாம். மக்ளீன் பெராக்ஸைட் பற்பசை பற்களின் தேய்வைத்தடுத்து, வாயில் ஊறும் அபாயகரமான உமிழ் நீர்களை அழிப்பதோடல்லாமல், ஈறுகளை பலப்படுத்தி சுவாசத்தை நறுமணமுள்ளதாக்கி, பற்களை வெண்மையாக இருக்கச் செய்கிறது என்பதை அவள் அறிவாள்—இவ்வளவும் ஒரே சமயத்தில் நடைபெறுகிறது.

நீங்கள் கூட மக்ளீன் பெராக்ஸைட் பற்பசையை பிரதி தினமும் இருமுறை உபயோகிப்பதால் அந்தவகைய மனோகரப் புன்னகையைப்பெறமுடியும்.

இப்போது பெரிய அளவிலும், சிக்கனமான மாபெரும் அளவிலும் கிடைக்கிறது.




**பற்களை அதிக வெண்மை யாக்குகிறது**

வர்த்தக விபரங்களுக்கு:-

ஜே. எல். மார்னிஸ், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிட்.,
தபால் பெட்டி 6537, பம்பாய் 20, தபால் பெட்டி 887, கல்கத்தா
தபால் பெட்டி 1370, மதராஸ்.

HTY-23-TAM




# லிப்டன்

## டீ கெர்ல்
## டஸ்ட்
## டீ



சிறந்த ஸ்டிராங் டீ
தருகிறது.

---

# சௌகரியமே குழந்தைக்கு திருப்தி




........அதனால்தான் விவேகமுள்ள தாய்மார்கள் தங்கள் குழந்தையின் தளிர்மேனியை அரிச்சலன்றிப் பாது காக்க கால்கேட் போரேட்டட் பேபி பவுடரை உபயோகிக்கிறார்கள். மிக மெல்லிய மேனிக்கும் இதம் அளிப்ப தற்காக விஞ்ஞான முறையில் தயாரிக் கப்பெற்றது ... புண்படுத்தும் உஷ் ணம் தாக்காமல் தடுக்கிறது; குழந்தை நாள் முழுதும் ஜிலுஜிலுவென்று சௌகரியமாய் இருக்க உதவுகிறது. இதன் மெல்லிய நறுமணம் உங்களை யும் குழந்தையையும் கவர்ந்துவிடும்.

# கால்கேட்

போரேட்டட்
## பேபி பவுடர்

பணம் மிச்சம் — ஜயண்ட் சைஸை வாங்குங்கள்




"வள்ளி கணவன் பேரை
வழிப்போக்கர் சொன்னாலுமே
உள்ளம் குழையுதடி — கிளியே
ஊனும் உருகுதடி!"

என்ற கிளிக் கண்ணியைக் கொண்டு வந்து கொடுத்த மாணவன், 'க்' என்னும் மெய்யெழுத்தைத் தெளிவு படுத்திக் கொள்ள விரும்பி, அது 'வள்ளி கணவனா' அல்லது 'வள்ளிக் கணவனா' என்று சந்தேகம் கேட்டான். அன்றைய வகுப்பில் வேற்றுமை உருபும் அது தொக்கி நிற்கிற இடங்களும் பற்றிய பாடம்.

தமிழ்ப் பண்டிதர் தருமலிங்கம் மாணவனுக்குப் பதில் சொல்லவில்லை. இடத்திலே போய் உட்காரும்படி சொல்லிவிட்டு மனக் குதிரையின் வேகத்தை அடக்க முடியாமல் நினைவுலகிலே வட்டம் சுற்றினார்.

2

சரித்திர காலத்துப் பெண்ணரசியாக இருந்தால் அவளுடைய பெயரை வைத்துத்தான் வள்ளியூர் கிராமமே நிர்மாணம் ஆயிற்று என்று ஆராய்ச்சியாளர் முடிவு கட்டக் கூடும். ஆனால் நம்முடைய வள்ளியோ இருபதாம் நூற்றாண்டுக் கன்னி; ஆனாலும் ஜாதகம் பொய்த்தா போய் விடும்! இந்த வள்ளி ஒருத்தி பிறக்கப் போகிறாள் என்பதற்காகவே அந்தக் கிராமம் 'வள்ளியூர்' என்ற பெயரைத் தனக்குச் சூட்டிக் கொண்டு காத்திருந்தது என்று தருமலிங்கம் பல முறை எண்ணி வியந்ததுண்டு. உண்மையில் வள்ளியூர் கிராமத்துக்கு இதயம் என்று ஒன்று இருந்தால், அந்த இதயத்தின் ராணி வள்ளிதான் என்று சொல்ல வேண்டும்.

வள்ளியூர் கடலை முத்துத் தேவரின் மகள் என்று சொன்னால் யாருக்கும் தெரியாது. "தாழம்பூ வள்ளி" என்று சொன்னால்தான் தெரியும். இன்றைக்கும், இந்த ஐந்து வயதிலும், அவளுடைய கொண்டையிலே தாழம்பூ இருந்து கொண்டு வள்ளியூர்ப் பிரதேசத்தில் மட்டுமில்லை, கடல் கடந்த கொழும்புச் சீமை வரை அவளுடைய புகழின் மணத்தை அள்ளி வீசிக் கொண்டிருந்தது.

கொழும்புச் சீமை வரை என்றால் அது வீண் பேச்சு இல்லை. கொழும்பு நகரத்துக்கும் அவளுக்கும் ஒரு தொந்தம் இருந்தது என்ற விஷயம் அந்தக் கிராமத்தில் பலருக்கும் தெரியும். ஆனால் அதன் விவரம் மட்டும் ஒருவருக்கும் சரியாகத் தெரியாது.

சிலர் அவளுக்குக் கல்யாணம் ஆகியிருக்கிறது என்றும் அவள் புருஷன் கொழும்பில் இருக்கிறான் என்றும் சொன்னார்கள். வேறு சிலர் அவள் கழுத்தில் ஒரு நூல்ச் சரடு கூட இல்லாததால் அவள் கணவன் வெகு வெகு காலைக்கு முன்பே காலமாகிவிட்டான் என்று பேசிக் கொண்டார்கள். இன்னும் சிலரோ, வள்ளிக்கு ஒரு மன அதிர்ச்சி ஏற்பட்டு அது காரணமாக அறிவிருந்தும் ஒரு பித்துக் கொளி போல இருக்கிறாள் என்று சொன்னார்கள். தமிழ்ப் பண்டிதர் தருமலிங்கமோ என்றால், அவளைப் பார்க்கும் போதெல்லாம் ஔவைப் பிராட்டியைத்தான் நினைத்துக் கொள்வார்.

அந்தக் காலத்தில், அதாவது சுமார் நாற்பது வருஷங்களுக்கு முன்பெல்லாம், கடலை முத்துத் தேவருக்கு வள்ளியூர் கிராமப் பள்ளிக்கூடத்தில் 'வாட்ச்மன்' என்று ஆங்கிலப் பட்டம் பெற்ற காவலாளி உத்தியோகம். பகல் முழுதும் உறங்க முயற்சிப்பார். இரவு முழுதும் உறங்காமல் இருக்க முயற்சிப்பார். இந்த இரண்டு முயற்சிகளிலுமே அவருக்கு வெற்றிதான். ஆனால் ஒன்று. பகல் முயற்சிக்கு வெற்றி இரவிலும், இரவு முயற்சிக்கு வெற்றி பகலிலும் சித்திக்கும்!

அல்லும் பகலும் இவ்விதம் உழைத்து வந்த தேவருக்கு, 'ஒன்னே ஒன்னு, கண்ணே கண்ணு' என்று ஒரே மகள், அந்தத் தாயில்லாப் பெண் வள்ளி!

கண்களை இமை காப்பதுபோல் என்று உவமை சொல்வார்களே, அந்த முறையிலே, ‘வாட்ச்மன்’ கடலை முத்துத் தேவர் தம்முடைய கண்மணி வள்ளியையும் கண்காணித்து வந்தார். அவளுக்குக் கல்யாண வயது வந்ததும் சரியான கணவன் எங்கிருக்கிறான் என்று கண்ணும் கவனமுமாய்ப் பார்த்து வந்தார்.

கடலை முத்துத் தேவருக்கு இந்தக் கலி காலத்தின் ‘பண மகாத்மியம்’ நன்றாகத் தெரியும். “சேராதன உளவோ திருச் சேர்ந்தார்க்கு” என்ற பாடலைத் தமிழ்ப் பண்டிதர் கரும் பலகையிலே எழுதிப் போட்டிருந்ததை ஒரு நாள் இரவு பார்த்துவிட்டு, உடனே அதை அவர் மனப் பாடம் பண்ணிக் கொண்டார். அந்தப் பாடல் இந்த அகில உலகத்தையுமே அவருக்குக் கண் திறந்து காட்டியது மாதிரி ஒரு விழிப்பைக் கொடுத்தது.

வள்ளிக்குக் கணவனாக வருகிறவன் ‘நாலு காசு’ உள்ளவனாக இருக்க வேண்டும் என்று தேவர் கண்ணாக இருந்தார். இதையே திரும்பத் திரும்ப வள்ளியிடம் சொல்வார். வாய்ப் பேச்சின் எழிலைக் கண்டு மயங்கி விடக் கூடாது, பணம் என்ற ஒன்றினால் எல்லாமே சாதனை ஆகிறது என்றெல்லாம் மேற்கோளுடன் எடுத்துக் கூறுவார். மெய்யாகவே தம்முடைய மகளை நல்ல நிலையில் வைத்துப் பார்க்க வேண்டும் என்று அவருக்கு ஆசை. ஆனால் பணம் உள்ளவன் இவரிடம் வந்து சம்பந்தம் செய்து கொள்வானா? வள்ளி அழகாகத்தான் இருந்தாள். சந்தேகமே யில்லை. நின்றெரியும் தீபச் சுடர் போல ஒரு வனப்பு. “பச்சரிசி மாம்பழம்” பழுத்து வரும் போது அதில் ஒரு கவர்ச்சிகரமான செக்கர் நிறம் படருமே, அதுபோல ஒரு குங்குமச் செந்நிறம் அவளுடைய கன்னங்களில் ஊடாடியது. இதெல்லாம் கவிஞர்கள் தங்கள் கவிதையிலே வர்ணிக்கலாம். ஆனால் அவளைப் பெண்கொள்கிறவன் அந்த வள்ளியூர் கிராமத்தில் இந்தக் காவிய எழிலைக் கண் திறந்து பார்க்க வேண்டுமே! அதை நினைத்தால் தேவருக்குக் கண் கலங்கியது. ஒரு நாள், பாவம், இந்த ஏக்கத்திலேயே கண்ணை மூடி விட்டார்.

ஆமாம்; கடலை முத்துத் தேவரின் மரணம் ஒரு எதிர்பாராத அதிர்ச்சியாகவே இருந்தது. முந்திய இரவு பள்ளிக்கூடத்துக்குப் போனவர் மறுநாள் வீடு திரும்பாமல் இந்த உலகத்தை விட்டே போய் விட்டார் என்றால் யாரால் நம்ப முடியும்? அவருடைய சடலத்தைப் பார்த்தவர்களுக்குக் கூடத் தங்கள் கண்களை நம்ப முடியவில்லை. காரணம், முகத்தில் எள்ளளவு விகாரம் இல்லை. ஏதோ பாடலை முணு முணுத்தவாறு கண்களை மூடியது போல் இருந்தது அந்த முகம்.

வள்ளியின் துயரத்துக்கு ஒரு அளவே இல்லை. பருவம் என்ற கண்ணற்ற வனாந்தரத்தில் பூத்துக் குலுங்கி நின்றாள் அந்த வள்ளிக் கொடி, தாழம்பூவும் கொண்டையுமாக.

அதே சமயம், தேவர் வீட்டுத் தோட்டத்தில் வள்ளியைப் போன்றே செல்லமாக வளர்ந்த கறிவேப்பிலைக் கன்று ஒன்று இருந்தது. அது இப்பொழுது ‘தளதள’ வென்று பருவமாகிக் கம்மென்று வாசனை வீசிக்கொண்டிருந்தது. அதைக் கண்டு, வள்ளி தன்னுடைய ஜீவனத்துக்கு ஒரு வழி கண்டு பிடித்து விட்டாள்!

“கறிவேப்பிலை வாங்கலையா கறிவேப்பிலே எஎஎ......” என்று வள்ளியூர் கிராமத்தில் அக்கிரகாரக் கோடியில் ஒரு மோகனக் குரல் கேட்கும். உடனே பெண்டுகள் எல்லாம் அரிசியும் களரும் கையில் ஏந்தி வாசற்கடையில் வந்து நின்று “ஏ, வள்ளி!” என்று கூப்பிடுவார்கள். அந்த ஊரில் வள்ளியின் கறிவேப்பிலைக்கு ஒரு தனியான மணம் இருந்தது. ஆனால் அவளுடைய திருமணம்?

## 3

“ஏ, தாழம் பூ!” என்று பிள்ளையார் கோவில் கிணற்றடியிலிருந்து யாரோ கூப்பிட்டார்கள். திரும்பிப் பார்த்தாள் வள்ளி.

அரையிலே சாய வேட்டியும், தலையில் மேலப்பாளையம் துண்டை அலட்சியமாக ஒரு சுற்றுச் சுற்றிவிட்ட தலைப்பாகையும், மார்பகலத்தை ஊடுருவிக் காட்டும் வெள்ளை மஸ்லின் சட்டையுமாக ஒரு இருபத்தைந்து வயதுச் சண்டியன் நின்று கொண்டிருந்தான்.



அவனைப் பார்த்தும் பாராதது போலத் தலையைக் குனிந்து கொண்டு மேலே நடக்க ஆரம்பித்தாள் வள்ளி!

"ஏ புள்ளே! உன்னியேத்தானே! கூப்பிட்டா என்னமோ ரொம்பக் கிராக்கி நடை நடக்கியே!" என்றான் மிடுக்கோடு அந்த விடலை! வள்ளி நின்றாள். ஆனால் பேசவில்லை.

"தாழம்பூ எப்படியம்மா குடிக்கியாம்?" என்று குரலில் கொஞ்சம் இளக்கம் கொடுத்தான் அந்தக் கட்டுமஸ்தான காளை!

"இது தாழம்பூ இல்லையப்பா, கறிவேப்பிலை. அரிசிக்குத்தான் கொடுக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே மேலே அடியெடுத்து வைத்தாள் வள்ளி. இதுவரை நின்று வளைவுச் சுவரின் மேல் குந்தியிருந்தவன் இப்பொழுது சட்டென்று தாவி அவளுக்கு எதிரில் வந்து நின்று கொண்டான்!

"ஏம்மா, கறிவேப்பிலைக் கொழுந்து! காசன்னா என்ன கசக்குதோ? இறக்கம்மா கொஞ்சம் கூடையை!" என்று சொல்லியவாறு வள்ளியின் இடுப்பிலிருந்து தானே அந்தக் கூடையைச் செங்குத்தாகத் தூக்கிக் கீழே வைத்தான். வள்ளிக்கு இந்தப் புதிய அநுபவம் மனசையும் உடம்பையும் என்னவோ செய்தது. அவனோ இதற்குள் ஒரு கறிவேப்பிலையை எடுத்து வாசனை பார்த்தான்!

"என்ன புள்ளே இது! இந்தக் கறிவேப்பிலை தாழம்பூ வாசனை அடிக்குது!" என்று குறும்புத் தனமாகச் சொல்லிக் கொண்டே வள்ளியின் கொண்டையிலிருந்த தாழம்பூவை ஒருதரம் ஏற இறங்கப் பார்த்தான். அப்பொழுது வள்ளிக்கு ஏற்பட்டது கோபமில்லை. ஆத்திரமில்லை. சிரிப்பும் இல்லை. பின் என்னதான் அது?

4



கொழும்பு ஐந்தாம் குறுக்குத் தெரு கானா மூனா சேயன்னா விலாசத்தில் 'நைட் வாட்ச்மன்' ஆறுமுகத் தேவன். மூர்த்தி சிறிதென்றாலும் கீர்த்தி பெரிது என்கிற கணக்கில் வயதில் இளைஞனேயானாலும், பெரிய பெரிய 'கோப்பன்'களையும் புரட்டி எடுத்து விடக் கூடிய சாயவேட்டிச் சிங்கன்! இப்பொழுது ஒரு மாத விடுமுறையில் தனது ஜன்ம பூமியான வள்ளியூருக்கு வந்திருக்கிறான்; இல்லை, விஜயம் செய்திருக்கிறான்! இந்த ஆனைப்பட்ட ஆறுமுகத்தின் முன்பு வள்ளி எதிர்ப்பட்டு விட்டாள்! பிறகு சொல்ல வேண்டுமா? அன்றிலிருந்து இந்த ஆறுமுகத் தேவனும் வேலன் வேடன் விருத்தன் என்று பல உருவங்களில் அவளை வளைய வளைய வர ஆரம்பித்து விட்டான்!

கடலை முத்துத் தேவரின் மகனுக்கு அதிகமாக வார்த்தை வளர்ப்பதில் நம்பிக்கை கிடையாது. ஒரு நாள் சொன்னான்:

"நாலு காசு சம்பாதிச்சுக்கிட்டு இந்த வள்ளியூர் மண்ணிலே வந்து மிதி. இதே பிள்ளையார் கோவில் முன்னாலே மேளந் தட்டிப் புடுவோம். என்னமோ பெரிசாக் காசன்னாக் கசக்குதோன்னு அன்னிக்குக் கேட்டியே!"

ஆறுமுகத் தேவன் விடுமுறைக்கு வந்தவன் மறுபடி கொழும்புக்குப் புறப்படும்பொழுது ஒரு தீர்மானத்தோடுதான் கப்பல் ஏறினான். திரும்பினால் நாலு காசை அந்தச் சாயவேட்டியிலே கட்டிக் கொண்டு திரும்புவது; இல்லையென்றால் அந்தப் பெரிய கடல் இருக்கவே இருக்கிறது என்று கச்சை கட்டிக் கொண்டுதான் கப்பல் ஏறினான்.

5

மனக் குதிரையிலேறி, வள்ளியின் வாழ்க்கை நினைவுகளிலே சென்ற தமிழ்ப் பண்டிதர் தருமலிங்கம் இந்த இடத்தில் பெருமூச்சு விட்டுக் கொண்டார். காரணம், கப்பலேறிச் சென்ற ஆறுமுகம் பிறகு திரும்பிவரவே இல்லை.

வாழ்க்கை என்ற கெருடான செய்யுளை எத்தனையோ தடவைகள் நமது ஆசிரியர் அலசிட முயன்றதுண்டு. ஆனால் ஒவ்வொரு தடவையும் 'தளை தட்டுகிறதே' என்று உட்கார்ந்து விடுவார். அதிலும் வள்ளியின் வாழ்க்கை அவர் பயின்றுள்ள அத்தனை இலக்கண விதிகளுக்கும் அடைபடாத புதுமைச் செய்யுளாக இருந்தது.

கன்னி வள்ளிக்கு இப்பொழுது வயது ஐம்பது. குழி விழுந்த கண்கள். கன்னத்தில் சுருக்கங்கள். நெற்றியிலே கோடுகள். தாழம்பூச் சூடியிருந்தாலும் அந்தக் கேசம் பிச்சிப்பூவாக வெளிறியிருந்தது. ஆனாலுங் கூட அவளுடைய உள்ளத்தில் மட்டும் ஒரு மாறாத பசுமை, ஒரு தளராத நம்பிக்கை, காய்ந்துபோன கறிவேப்பிலைக்குள் ஒரு விவரிக்க முடியாத வாசனை இருப்பதுபோல.

தருமலிங்கம் எத்தனையோ தடவை வள்ளியைக் கூப்பிட்டுப் பேசியிருக்கிறார். அவளுடைய



"ஆபீஸில் உள்ள எல்லாவற்றையும் இன்ஷ்யூர் செய்து விட்டீர்கள். சந்தோஷம். அந்தப் பெரிய கடிகாரம் இருக்கிறதே அதை மட்டும் ஏன் இன்ஷ்யூர் செய்யவில்லை?"

"அதுவா? அதைப்பற்றி எனக்குத் துளிக் கூடக் கவலை இல்லை. ஆபீஸில் வேலை செய்பவர்கள் அத்தனை பேர்களும் அந்தக் கடிகாரத்தின் மேலேயே சதா கண்ணும் கருத்துமா யிருக்கிறார்கள்!"

"புருஷனை"ப் பற்றிக் கூட விசாரித்திருக்கிறார். அப்பொழுதெல்லாம் அவள் ஒரே பதிலைத்தான் சொல்லுவாள்.

"நாலு காசு சம்பாதிக்கப் போயிருக்காரு. திரும்பி இந்த பிள்ளையார் கோவிலுக்கு வருவாரு!"

இப்படி அவள் சொல்லும்போது அவநம்பிக்கை என்பதே சற்றும் இல்லாத உறுதி அவளுடைய குரலிலே தொனிக்கும்! அது ஒரு குழந்தையின் பேதைமையை நினைவூட்டும். உண்மையில் அது பேதைமையா அல்லது வைராக்கியத்தில் ஏற்படும் பிடிவாதமா அல்லது கபடமற்ற மனத்தின் அந்தரங்க சபலமா? இல்லை, அவளுடைய புத்தியிலேயே ஒரு வகையான கோளாறு ஏற்பட்டு விட்டதோ?—தருமலிங்கம் பன்னிப் பன்னி யோசிப்பார். ஆனால் தன்னுடைய நித்தியப்படியான காரியங்களில் வள்ளி சற்றும் பிசகாமல் நடந்து கொள்கிறாளே! கறிவேப்பிலை வியாபாரத்திலேதான் ஒரு சிறு இணுக்கு விட்டுக் கொடுத்து விடுகிறாளா? கிடையாது! புத்தி யெல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. அப்படியானால்?

யோசித்துக் கொண்டே யிருந்த தருமலிங்கத்தின் மனக்கண் முன்பு கொழும்பு நகரம் தெரிந்தது. அந்தப் பெரிய நகரத்தில் ஒரு பெரிய வீதி தெரிந்தது. அந்த வீதியில் ஒரு பெரிய கடைக்கு முன்னால் சாய வேட்டி கட்டிய வீரன் ஒருவன் 'நாலு காசு சம்பாதிக்க வேண்டும்' என்ற ஒரே தவ யோகத்தில் இரவும் பகலும் விழித்த கண் மூடாமல் ஒற்றைக் காலில் நிற்பது போன்ற ஒரு காட்சி தெரிந்தது. மறு கணம், 'ஆண்களாவது இத்தனை தூரம் ஒருமனப்பட்டு நிற்பதாவது' என்று எண்ணியவராய் மனப் பலகையில் தோன்றிய அந்தச் சித்திரத்தை அழித்து உதறுகிறதுபோல, 'டஸ்டரை' எடுத்து வேகமாக உதறினார். 'என்ன பொடி போட்டாளோடி கிளியே' என்ற கண்ணியை வாய்க்குள்ளே சொல்லிக் கொண்டே ஓடுகிற மனக்குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தார். அப்பொழுது அவருடைய சிந்தனையைக் கலைப்பது போல், தெரு வீதியிலே குரல் கேட்டது: "கறிவேப்பிலை வாங்கலையோ, கறிவேப்பிலே ஏ ஏ ஏ ......"! அந்த 'லே' யில் விழுந்த இன்னிசை அளபெடை பண்டிதர் அவர்களைப் பூரண நினைவுடன் பூமியின் மேலே தமது வகுப்பு அறையிலே கொண்டு வந்து நிறுத்தியது.

விழித்து எழுந்தவரைப் போல, "அது வள்ளிக் கணவன் இல்லை; வள்ளி கணவன் தான்" என்று தொக்கி நின்ற மெய்யைப் பையன்களுக்கு விளக்கினார் அவர்!

இந்த வள்ளி திருமணத்துக்கு இந்த வள்ளியூர் விநாயகர் ஏன் இன்னும் உதவி செய்யாமல் இருக்கிறார் என்பது தமிழ்ப்பண்டிதர் தருமலிங்கம் அவர்களுக்கும் ஒரு 'தொக்கி நிற்கும் மெய்'யாகவே நாளது தேதி வரை இருந்து வருகிறது!

## அவன் குறை!

பள்ளிக்கூடத்தில் சயன்ஸ் பாடம் நடந்து கொண்டிருந்தது. சயன்ஸ் வாத்தியார் பஞ்சேந்திரியங்களின் அமைப்பைப் பற்றி விளக்கிக் கொண்டிருந்தார் பாடத்தை முடித்ததும் ராமுவைப் பார்த்து, "உனக்குக் காதுகள் இல்லை யென்று வைத்துக்கொள். அப்போது உனக்கேற்பட்ட குறை என்ன?" என்று கேட்டார்.

ராமு எழுந்திருந்து, "ஸார்! என்னைப் பொறுத்தவரையில் காதுகள் இல்லாவிட்டால் பொருள்களை யெல்லாம் பார்க்க முடியாது" என்றான்.

வாத்தியாருக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்துவிட்டது. "ஏண்டா, மடையா! இவ்வளவு நேரம் பாடம் சொல்லிக் கொடுத்து என்ன பயன்? காது இல்லாவிட்டால் ஒலியை யல்லவா கேட்க முடியாது?" என்றார்.

"ஸார்! காதுகள் இல்லாவிட்டால் என்னால் கண்ணாடியை மாட்டிக் கொள்ள முடியாது. கண்ணாடி இல்லாவிட்டால் எனக்குச் சுத்தமாகக் கண் தெரியாது. அதனால்தான் அப்படிச் சொன்னேன்!" என்று கூறினான் ராமு.

அதைக் கேட்டு அனைவரும் கொல்லெனச் சிரித்தார்கள். —பி. எஸ்.



எல்லாவித பல்வலிகளுக்கும்

பல் வெண்மை தரும்.....

ஈர்களுக்கு வலு தரும்

உபயோகியுங்கள்

## குரங்கு மார்க்
## கருப்பு பல்பொடி

(REGD)

வாசத்திற்கு மணம் தரும்.

எங்கும் கிடைக்கும்

3 விதமான சைசுகள்



**NOGI & CO.,**
**87, CHINA BAZAAR Rd., MADRAS-1**

ஸ்டாக்கிஸ்டுகள்: எம். வெங்கடேசம் & கம்பெனி, ஷாப், சேலம்

---

இவை இல்லாமலா
### கல்யாணம்?

## டி.எஸ்.ஆர்

- பன்னீர்
- சந்தனம்
- வாசனைப்பாக்கு
- வாசனைச் சுண்ணாம்பு

தென்னிந்தியாவில் எவ்வித விசேஷத்துக்கும் ஒரு சோபையையும், குஷியையும் அளிக்க ஜனங்கள் டி. எஸ். ஆர். தயாரிப்புகளையே நாடுகிறார்கள். அவை 1909 லிருந்து பிரசித்தி பெற்றவை.



## டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.

சென்னை நகரத்திற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸிஸ், 37, ஜானி ஜான்கான் ரோடு, ராயப்பேட்டை, மதராஸ். கோயமுத்தூர், பாலக்காடு, நீலகிரிக்கு, சேலம் ஏஜண்டுகள்: B. பாலபட்டாபி செட்டியார், (1938-ல் ஸ்தாபிக்கப்பட்டது), கோயமுத்தூர். பம்பாய்க்கு ஏஜண்டுகள்: சர்மயா ஸ்டோர்ஸ், மாதுங்கா (G. I. P.)

---

3 வாசனைக் கலாரத்னங்கள்

## கம் கம் ஜவாஜ் * கம்பால் * கமகர் அகர்பத்திகள்.

**டி.எல். சுகந்தாலயா,**
**வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2**

## மிகக் குறைந்த நேரத்தில்

(100 மீட்டர் ஓட்டம்)

அவனுடைய வெற்றிக்குக் காரணம் திடமான பயிற்சியே. அதுபோலவே அவன் வெற்றிக்குக் காரணமாயிருந்ததில் முக்கியமானது அவனுடைய உணவு உண்மையாகவே இந்த வெற்றிக்கு வேண்டிய அளவு ஊக்கமும் பலமும் அவனுக்குக் கொடுத்தது அவனது உணவுதான். அவனுடைய உணவில் எப்பொழுதும் அதிக பலம் இருந்தது.

**அவனுடைய உணவு சமைக்கப்பட்டிருந்தது**




# துஷார்
## வனஸ்பதியில்

இரட்டிப்பாக சுத்தப்படுத்தி கை படாமல் செய்யப்பட்ட வனஸ்பதி ஆரோக்யமான முறையில் பாக் செய்யப்பட்டது.

**துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், கர்னூல்.**




மாயா

**வா**சலில் வந்து நின்ற வண்டியைப் பார்த்ததுமே கமலத்தின் வைராக்கிய மனம் சற்றே நெகிழ்ந்துவிட்டது. சொர்ணம், குடியைக் காலி செய்து கொண்டு தன்னைப் பிரிந்து போகிறாள் என்ற நினைவு, அதன் பலாபலன்களை ஆராயுமாறு அவள் மனத்தைத் தூண்டி விட்டது.

வீட்டைக் காலி செய்து போகுமளவுக்குச் சொர்ணத்துக்கு அசௌகரியம் ஏதும் கமலத்தின் வீட்டில் கிடையாது. சொர்ணம் இருந்து வந்த பொழுதும் கமலத்திற்குச் சௌகரியக் குறைவு என்றும் சொல்வதற்கில்லை. இவ்வளவு காலமாக ஒருவருக்கொருவர் அத்தனை அன்னியோன்யமாக இருந்து விட்டதால் இந்தப் பிரிவில் கமலத்தைவிடச் சொர்ணமே அதிகம் கலங்குவாள் என்பதும் கமலத்திற்குத் தெரியும். இருந்தும் அவளைக் 'காலி செய்ய வேண்டாம்' என்று சொல்லி வீட்டிலேயே வைத்துக் கொள்ளும் மனப் பக்குவம் ஏனோ கமலத்திற்கு ஏற்படவில்லை. வீட்டைக் காலி செய்து, குடித்தனத்தைக் கலைத்துக் கொண்டு போகும்படி சொர்ணத்திற்குச் சில நிர்பந்தங்கள் ஏற்பட்டதென்னவோ உண்மைதான். ஆனால் கமலம் மட்டும் மனம் வைத்திருந்தால், அந்த நிர்ப்பந்தங்களையெல்லாம் அலட்சியம் செய்து விட்டுச் சொர்ணத்தைத் தன் வீட்டிலேயே குடித்தனம் நடத்த விட்டிருக்கலாம்.

பத்துப் பதினைந்து தினங்களாகவே சொர்ணம் பிரிந்து போகப் போகும் விவரம் கமலத்திற்குத் தெரியும். இதுவரை இல்லாத ஆதங்கம் எப்படித் திடீரென்று வாசலில் நின்ற வண்டியைப் பார்த்ததும் மூண்டுவிட்டதென்பதுதான் கமலத்திற்கு அதிசயமாயிருந்தது!

அன்றொரு நாள் எத்தனை ஆதுரத்துடன் சொர்ணத்தைத் தன் வீட்டில் குடியிருந்து வரும்படி கூறிக் கமலம் அழைத்தாள்! இன்று எப்படி மனம் துணிந்து, சொர்ணம் பிரிந்து போவதைத் தடுக்க மனமில்லாமல் விட்டேற்றியாக இருக்கிறாள்! இது சிந்தனைக்குரிய விஷயந்தான்.

அந்த நாட்கள் கமலத்தின் மனக் கண் முன் சிறுகச் சிறுகப் பெரிதாக விரிந்தன.

* * *

**உ**ண்டு களித்து உல்லாசமாக வாழ எல்லா வித வசதியும் பெற்றவள் கமலம். சொக்கத்தில் ஒரு அழகான வீடு. அன்புடைய கணவன். கழுத்து நிறைய நகைகள். வகை வகையான ஆடையணிகள். இவை யனைத்தும் பரம்பரை வழியே வந்து அவள் அனுபவிக்க ஏற்பட்டவை. எல்லாவிதத்திலும் குறைவின்றியிருக்கும் ராஜாவுக்குப் பிள்ளையில்லாத ஒரே குறை மட்டும் இருந்ததாகப் பழங் கதைகள் சொல்லுமே, அதே குறைதான் கமலத்திற்கும் இருந்தது. அவள் வம்சத்தை விளங்க வைக்க, ஒரு குழந்தை கூட அவளுக்குப் பிறக்கவில்லை. இருபது வருடத்திற்கு மேற்பட்ட தாம்பத்தியத்தில் அவள் வேண்டாத தெய்வமில்லை. செய்யாத உபாசனைகள் கிடையாது. அத்தனைக்குப் பின்னும் அவள் தாய்மைப் பேற்றைப் பெறவில்லை. நம்பிக்கை சிறிது சிறிதாகத் தேய்ந்து, 'இனி மேல் பிள்ளை பிறப்பது சாத்தியமில்லை' என்ற தீர்மானத்துக்கு வரச்செய்தது. ஆயினும் சிற்சில சமயம் 'ஒருவேளை பிறந்தாலும் பிறக்கலாம்' என்ற நப்பாசை சிறிதளவு அவளது உள்ளத்தில் ஒட்டிக் கொண்டுதானிருந்தது.

சுக வாழ்வுக்கான வசதிகள் அனைத்தும் பெற்றிருந்தும், அவற்றை முழுச் சுவையுடன் அனுபவிக்கும் பாக்கியமின்றி, ஏதோ ஒரு சூனியத்தை நினைந்து நினைந்து நாளெல்லாம் உருகினாள் கமலம். அத்தனை பெரிய வீட்டில் மூன்றும் குரல் ஒன்று ஒலித்து விட்டால் வாழ்க்கையே சொர்க்கமாக மாறிவிடாதா என்று கமலம் ஏங்கிப் போனாள். அவள் நப்பாசை நிராசையாகப் போகும் தருணத்தில்தான் சொர்ணம் அவளுக்கு அறிமுகமானாள். இருவரின் நட்பும் கோயிலில் ஆரம்பமாகியது. நாற்பதாம் வயதை எட்டிக் கொண்டிருக்கும் கமலம் இருபது நிரம்பாத பெண் சொர்ணத்துடன் இணைவது எல்லோருக்கும் ஒரு புதிரா யிருந்தது. வயதுக்குத் தகுந்த சிநேகமில்லையென்பது ஒருபுறமிருக்க, வாழ்க்கைத் தரத்திலும் கமலம் சொர்ணம் இருவரும், உச்சாணிக் கொம்பும் அடிமரமுமாக இருந்தார்கள்.

சொர்ணத்தின் கணவன் ஒரு பண்ணை முதலாளியிடம் 'கார் டிரைவர்' வேலையிலிருந்தான். சொற்ப சம்பளமான இருபத்தைந்து ரூபாயை விள்ளாமல் விரியாமல் சொர்ணத்திடம் கொடுத்து விடுவான். மாதத்தில் பெரும்பாலான நாட்களும் அவன் சாப்பாடு முதலாளி வீட்டிலும், வெளியூர்களிலுமாக முடிந்து விடும். அவன் தன் வீட்டில்

சாப்பிடுவது விசேஷ தினங்களில்தான். ஆகவே, சொர்ணமும் மூன்று வயதுக் குழந்தை ரத்னாவும் சொற்ப வருமானத்தைக் கொண்டு சிக்கனமாகக் குடும்பம் நடத்தி வந்தனர். காதில் ஒரு மட்ட வெள்ளைத் தோடும் கழுத்தில் மாங்கல்யச் சரடும் தவிர அவள் நகையென்று ஏதும் அணியவில்லை. ஆடை விஷயத்தில் அவள் காட்டியிருந்த அக்கறை அவள் தோற்றத்தைப் பன்மடங்கு அழகுபடுத்திக் காண்பித்து] விடும். அப்பழுக்கில்லாது அவள் ஆடையுடுத்தும் பக்குவம் ஆஸ்பத்திரி 'நர்ஸ்' களைத்தான் யாருக்கும் நினைவூட்டும்.

இதுவரை எவரிடமும் ஒட்டுதலாயிருந்து பழகாத கமலத்திற்கு, சொர்ணத்தின் பேரில் ஒரு தனி கவர்ச்சி விழுந்து விட்டது. சொர்ணம், தான் குடியிருந்து வந்த இடத்தில் அளவு மீறி அசௌகரியங்கள் இருப்பதைச் சொல்லி, வேறு ஜாகை பார்க்க வேண்டுமென்று கூறியபொழுது, கமலம் தன் வீட்டிலேயே சொர்ணம் விரும்பினால் குடியிருந்து வரலாம் என்று யோசனை கூறினாள். கமலத்தின் யோசனையை மகிழ்ச்சியோடு சொர்ணம் ஏற்றுக் கொண்டாள். எதிலும் சுத்தமாக யிருப்பதை விரும்பும் சொர்ணம், கமலத்தின் அழகான வீட்டையும், பாங்கான சூழ்நிலையையும் பெரிதும் விரும்பினாள். ஒருவருக்கொருவர் பேச்சுத் துணையாக இருந்து வந்ததால், கமலம் வாரிசில்லாத குறையையும், சொர்ணம் தனக்கு வாழ்க்கை வசதிகள் வளமாக அமையாத குறையையும் மறந்து விடலாம் என்று நினைத்தனர்.

இப்படியே ஒரு வருடம் கொடியில் கழிந்தாற் போல் கழிந்தது. ஆனால் அந்த வருடம் அவர்களிருவரின் வாழ்வில் தெளித்து விட்ட மாறுதல் களோ அனந்தம்!

கமலத்துடன் கடைகளுக்கும் சினிமாவுக்கும் போய் விட்டுத் திரும்பி வரும்பொழுது சொர்ணத்தின் எளிய மனம் படாத பாடுபட்டு விடும். கமலம் வாங்கிக் குவிக்கும் துணிமணிகளையும் நகைகளையும் பார்த்துத் தனக்குள்ளே பொருமித் தீர்க்க அவளுக்குப் பொழுது போதவில்லை! இருவரும் சேர்ந்தே சினிமாவுக்குச் சென்றாலும், கமலத்துடன் உயர்ந்த வகுப்புக்குச் செல்ல முடியாமல் தரை டிக்கெட் வாங்கவேண்டியிருக்கிறதே என்று புழுங்குவாள் சொர்ணம்.

வீட்டிற்குத் திரும்பி வரும் வரையில் தான் அவள் தவிப்பு நீடிக்கும். வீட்டை அடைந்ததும் அருமைக் குழந்தையும் அன்புக் கணவனும் அவள் ஏக்கத்தை மாற்றும் அருமருந்தாகி விடுவர். கமலத்தின் வேதனையோ வீட்டை அடைந்ததும் தான் தொடங்கும்.

நிலா பெய்யும் நீண்ட இரவுகளில் சொர்ணமும் அவள் கணவனும், குழந்தை ரத்னாவுக்கு இல்லாத விளையாட்டெல்லாம் காட்டி அவளைத் தூண்டிப் பேசச் செய்து, மூவரும், சிரிப்பும் கொம்மாளமுமாக நேரம் போக்குவதை அருகிலிருந்து பார்த்துப் பார்த்துக் கமலம் மிகவும் மன வேதனைப் படுவாள்.

கலகலப்பாக இருந்த இருவரின் உறவு நிலையில் சொர்ணத்தின் ஆற்றாமையும் கமலத்தின் அருமையும் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தத் தொடங்கின.

மயிலாடக் கண்ட வான்கோழி 'பொல்லாச் சிறகு' விரித்தாடியதுபோல் கமலத்துடன் எல்லா விஷயங்களிலும் நடை பயில முயன்றதில் சொர்ணம், தன் சிக்கன வழிகளை மறந்து, செலவழித்துப் பழகி, கடன்பட்ட நிலைக்கு வந்துவிட்டாள். நகைகளில்லாத குறைதீரத் தங்கம் தோய்த்த நகைகளை வாங்கி அணிந்து கொண்டாள். கமலம் பட்டுப் புடவை வாங்கியபொழுது சொர்ணம் அதேபோல் நார்பட்டுப் புடவையாவது வாங்கி விடுவாள். தன் பெயரே சொர்ணமென்றும் தன் குழந்தைக்கு ரத்னாவென்றும் பெயரிட்டிருப்பதால் நகைகள் தேவையில்லையென்று ஒருகாலத்தில் பெருமையடித்த சொர்ணம் நகை, புடவை வாங்கிக் குவிக்கும் பித்து தலைக்கேறி நின்றதில் கடனாளியானாள். இந்த லட்சணத்தில் அவள் கணவனின் முதலாளி காரை விற்று விட்டதால் தற்பொழுதைக்கு அவன் வேலையும் இழந்தான். வாழ்க்கைச் செலவுகள் பெருகிப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டு, வருமானமுமின்றிக் கடன்படும் நிலைமை வந்தபொழுதும் கமலத்தின் எதிரே தன் கண்ணியத்தை இழக்க மனமில்லாதவளாய், வாடகையை மட்டும் சொர்ணம் தவறாமல் கொடுத்து விடுவாள்.

இத்தனை நாளாக 'தொடக் கூடாது' என்று சிறுகச் சிறுக சேர்த்து வைத்த பணமெல்லாம் கரைந்து, கடனும் பெருகி வரவே, குடித்தனத்தைக் கலைத்துக் கொண்டு சிறிது நாள் பிறந்தகம் போயிருந்தால், பின் தன் கணவனுக்கு வேலை கிடைத்தவுடன் வரலாம் என்ற முடிவு ஒன்றுதான் அப்பொழுது சொர்ணத்திற்குப் பிடிபட்டது.

இந்த முடிவைக் கமலத்திடம் பிரஸ்தாபித்த பொழுது சொர்ணம் சிறிதாவது அனுதாபத்தை அவளிடமிருந்து எதிர்பார்த்தாள். ஆனால் அவள் செய்த முடிவே சரியானதென்று ஊர்ஜிதம் செய்யும் வகையில் கமலம் பேசியது சொர்ணத்திற்கு மிகவும் மனக் கஷ்டத்தை உண்டாக்கியது. ஏதோ வழியில் போகிறவள் என்றிராமல் தாயும் மகளும் போல், அத்தனை ஒட்டுதலாயிருந்து விட்டு, இப்படி நிர்ப்பந்தப்படும் பொழுது தன் பணத்தைக் கொண்டு உதவா விட்டாலும் ஆறுதலாக இரண்டு வார்த்தைகளாவது உதிர்க்காமல் அவள் வெளியேறுவதை விரும்புவது போலக் கமலம் பேசியது சொர்ணத்திற்குச் சிறிதும் பொறுக்கவில்லை. ஆகவே, தான் சொன்னபடி



கடைக்காரர்:—உங்களுக்கு என்ன ஸார். வேண்டும்? சொம்ப நேரமாக நிற்கிறீர்களே!

வந்தவர்:—ஒரு கல்யாணத்துக்குப் பரிசுப் பொருள் வேண்டும். என்ன வாங்கலாம் என்று யோசிக்கிறேன்.

கடைக்காரர்:—அடாடா! அப்பொழுதே என்னிடம் சொல்லியிருக்கப் படாதா? இந்தாருங்கள். இந்தப் படத்தை வாங்கிக் கொண்டு போங்கள்! ''புயலின் சின்னம்'' என்னும் இந்தப் படம் புது மணத் தம்பதிகளுக்கு நல்ல பரிசு!

கிளம்புவதாகத் நிர்மாணித்து ஊருக்குப் புறப்பட உடனடியாக வண்டியும் வரவழைத்து விட்டாள்.

• • •

**வ**ண்டியில் ஒவ்வொரு சாமானாக ஏற்றப்படுவதைத் தூரத்திலிருந்து பார்த்தபடி கமலம் நின்றாள். தன் வீட்டிலிருந்து ஒவ்வொரு பொருளும் அகற்றப்படுவதையும், அவையிருந்த இடம் சூன்யமாவதையும் அவள் பார்த்தாள். அவள் எண்ணங்கள் இருவிதங்களில் உருண்டன.

“நாளை முதல் இந்த வீடு வெறிச்சோடிவிடும். வீட்டின் கலகலப்பு மறைந்து விடும். அழகான குழந்தையின் அற்புதமான பேச்சு இனி முழங்காது. பழைய அமைதி – மரண அமைதிதான் மிஞ்சும். அதற்கு வழி செய்வதா!

இவள் யார்! நான் யார்! இவள் படும் கஷ்டங்களுக்கு நான் ஏன் ஈடு கொடுக்க வேண்டும்! யாரைக் கொண்டு யார் பிறந்தோம்! எல்லாம் ரயில் சிநேகம்தானே!

அவளும் நீயும் எத்தனை ஒற்றுமையாயிருந்தீர்கள்! முன்பின் தெரியாதவர் பலர் உங்களிருவரையும் ‘தாயும் மகளும்’ என்றுகூட நினைத்ததுண்டு அல்லவா! தன் சக்தியையும் மீறி நீ இழுத்த இழுப்பிற்கெல்லாம் அவளும் வளைய வந்தாளே! உன்னைப் பார்த்து, பெரும் போக்காக இருக்கத் தலைப்பட்டதால் தானே அவள் இந்த நிலைக்கு வந்தாள்! அவள் சந்தோஷத்தைக் கண்டு அசூயைப் பட்டாய். அவள் கஷ்டப்படும்பொழுது அவளுக்கு உதவாத உன் பணம் இருந்து என்ன லாபம்! குழந்தை யில்லாத நீ அவள் குழந்தையிடம் ஒட்டுதலாயிருக்கக் கூடாதா! உனக்குக் கல்யாணமான புதிதில் இரண்டு மாதகாலம் ஸ்நானம் செய்யாமலிருந்து பின் கோனாறில் முடித்ததே, அப்படிக்கின்றி அப்பொழுதே நீ ஒன்றைப் பெற்றிருந்தால், அதற்கு இப்பொழுது சொர்ணத்தின் வயது ஆகியிருக்குமே! சொர்ணத்தைப் பார்த்துக் குரோதப் பட்டாயே! கணவன், மனைவி, பெண், பிள்ளை இந்த உறவெல்லாம் போலத்தானே அண்டை அயலார்களும்! ஊர்க் குழந்தைகளை உன் குழந்தைகளாக நேசித்து விட்டால் உனக்கு என்ன நஷ்டம் வந்து விடும்!”

கமலத்தின் மனம் சிறிதே கரைந்தாலும் அகங்காரம் நீடித்தது. எனவே, அவளால் தான் கொண்ட உறுதியிலிருந்து நழுவ முடியவில்லை.

எல்லா சாமான்களும் வண்டியில் ஏற்றப்பட்டு விட்டன. ஒன்றிரண்டு தட்டு முட்டுச் சாமான்களே பாக்கி யிருந்தன.

தான் வைத்து வணங்கி வந்த கிருஷ்ணன் படத்தைக் கையிலெடுத்துக் கொண்டு கமலத்தருகில் வந்து விடை பெற்றாள் சொர்ணம்.

“மாமி! நான் உங்களுக்கு ரொம்பக் கடமைப் பட்டிருக்கிறேன். இப்போது என்னமோ தொடர்ந்து போதாத காலம். இந்த லட்சணத்திலே நான் ஸ்நானம் பண்ணி ஐம்பது நாளுக்கு மேல் ஆகிறது. எனக்கு இருக்கிற ஒரு குழந்தை போதாதா! எனக்கு என்னமோ ஒரே குழப்பமாக இருக்கிறது. ஆனால் காலம் இப்படியே போய் விடாது. நிலைமை திருந்தினால் உங்கள் வீட்டுக்கே வந்து சேருவேன்.”

சொர்ணம் சொல்லிவந்த ஒவ்வொரு சொல்லும், ஏனோ தெரியவில்லை, கமலத்தின் இதயத்தை அப்படியே ஊடுருவித் துளைப்பது போலிருந்தது.

இருபது வருஷங்களாகத் தன் எண்ணமெல்லாம் குழந்தைக்காக, கனவிலும் நினைவிலும் குழந்தை வேண்டித் தவித்துத் தவம் கிடந்து மன்றாடியும் தன்னால் அடைய முடியாத தாய்மைப் பேறு, வேண்டாத இடத்தில், விரும்பாத சூழ் நிலையில் மலர இருப்பதை எண்ணி எண்ணிப் பார்த்தாள் கமலம். விதியின் விசித்திரம் அவள் வாயை அடைத்து விட்டது! சொர்ணம் கைகளிலேந்தி யிருந்த படத்திலிருந்த கிருஷ்ணன் அவளையே பார்த்துப் பேசுவது போன்று பிரமை தட்டியது.

"எத்தனை நோன்புகள் நோற்றாலும், எத்தனை பிரார்த்தனைகள் செலுத்தினாலும் குழந்தை பிறந்து விடுமா! கருணை மழையாகப் பொழியாத உள்ளத்தில் தாய்மைக்கு இடமில்லை. குரோதமும் அகம்பாவமும் உள்ளவரிடத்தில் இரக்கமே வடிவான தாய்மை எப்படி உருவாகும்! அடுத்த கணம் பள்ளத்தை நோக்கிப் பாய்ந்தோடும் நீர்போல, கமலத்தின் மனம் புதுவழியில் திரும்பியது.

"சொர்ணம்! நீ போகவேண்டாம். நிஜமாகச் சொல்கிறேன். நீ என்னை விட்டுப் போக வேண்டாம். இன்று முதல் நீ, எனக்குப் பிறந்த பெண் போல. ஒரு குழந்தைக்காக நான் தவித்த தவிப்பு எனக்கல்லவா தெரியும்! இனிமேல் நீ வேறு, நான் வேறு இல்லை. நான் சொல்கிறதைக் கேளு" என்று சொர்ணத்தின் கைகளைப் பிடித்துக் கொண்டு அழாக் குறையாகச் சொன்னாள்.

நிலைமை பிடிபடாத சொர்ணம் பேச்சு நிலை கடந்தவளாய் ஸ்தம்பித்து நின்று விட்டாள்.

"உனக்கு வேண்டியது பணம் தானே! அதை நான் தந்து விடுகிறேன். சாமான்களை யெல்லாம் வண்டியை விட்டு இறக்கச் சொல்!" என்று தாயன்பு தொனிக்கக் கட்டளை யிட்டாள் கமலம்.

பேரன் பிறக்கப் போகும் மகிழ்ச்சி, பிள்ளை பிறக்கவில்லையே என்ற பழங் கவலையையும் அழித்து விட்டாற்போல கமலத்தின் முகத்தில் புதுக் களையுடன் துலங்கியது.

# படித்துப் பாருங்கள்!

## பஞ்சாயத்து ஆட்சிமுறை

ஊர் நலம் பேணி உழைக்கும் திறனுள்ளோரை, மக்கள் தங்களுக்குள்ளேயே தேர்ந்தெடுத்து ஆட்சிப் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைக்கும் முறை தமிழ் நாட்டில் நெடுங் காலத்துக்கு முன் வழங்கி வந்த முறை. இப் பழங் கால முறைக்கு மறுமலர்ச்சி ஊட்டும் விதத்தில் பிற்காலத்தில் பஞ்சாயத்து ஆட்சி முறை வந்தது.

ஒவ்வொரு கிராமமும் எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் அடைவதற்குரிய திட்டங்களை வகுத்து நிறைவேற்ற, மக்களின் கடமைகளை உணர்த்த, அவர்களுடைய உரிமைகளைப் பாதுகாக்க, ஊராட்சி முறை இன்றியமையாதது.

1950-ம் ஆண்டு நமது சென்னை சட்ட சபையில் கிராமப் பஞ்சாயத்துச் சட்டம் நிறைவேற்றப் பட்டது. அந்தச் சட்டத்தின் திட்டங்களும் நுட்பங்களும் தெளிவாகவும் விரிவாகவும் இந் நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன.

எழுதியவர்: மூசிறி எம். எம். கிருஷ்ணசாமி, பி.ஏ., பி. எல்., கிடைக்குமிடம்: டி. ஏ. முத்து அண் சன்ஸ், 104, திருவேங்கடசாமி ரோடு, ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்; விலை ரூ. 7-8-0.

## ஆரோக்கிய சக்தி

"சுவரை வைத்துக் கொண்டுதானே சித்திரம் எழுத வேண்டும்" என்பதுபோல் மனித வாழ்க்கையைச் சிறப்புடன் நடத்துவதற்கு ஆரோக்கியமான உடல் வேண்டும் அல்லவா! அந்த ஆரோக்கியத்தை யாருக்கும் எளிதில் அளிக்கவல்லவை யோகாசனங்களே என்று நம் முன்னோர் கண்டனர். இன்று பலரும் யோகாசனப் பயிற்சியில் ஈடுபட்டு வருகிறார்கள். கும்பகோணத்தில் பதஞ்சலி யோகாசன நிலையம் என்று ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தி யோகாசனப் பிரசாரம் செய்து வருகிறார்கள். அந்த நிலையத்தைச் சேர்ந்த பி. ஷண்முகம் அவர்கள், யோகாசனங்கள் செய்ய வேண்டிய முறைகளைப் பற்றியும், அதன் பலா பலன்களைப் பற்றியும் மிக நன்றாக இந்தப் புத்தகத்தில் விளக்கியிருக்கிறார். இதில் சுமார் 40 யோகாசனப் படங்கள் இருக்கின்றன.

கிடைக்குமிடம்: ஸ்ரீ பதஞ்சலி யோகாசன நிலையம், கும்பகோணம். விலை ரூ. 2.

## கல்வி நிலை

அறிவு, நூல், கல்வி, கவி, கவிஞன் ஆகிய ஐந்து பொருள்கள் பற்றிய விரிவான கட்டுரைத் தொகுதியாகும் இந்நூல். தமிழ், தெலுங்கு, வடமொழி, ஆங்கிலம் ஆகிய பல மொழிகளிலிருந்தும் ஆசிரியர் மேற்கோள்களை அள்ளித் தெளித்து, விஷயத்தை விளக்கிச் சொல்லும் முறை படிப்பவர்களைத் திகைத்துத் திணறச் செய்கிறது! தமிழில் விஷயம் செறிந்த கட்டுரைப் புஸ்தகங்கள் அதிகமாக இல்லையே என்று கூறுபவர்களின் குறையை இந்நூல் பெரிதும் நீக்கிவிடுகிறது!

ஆசிரியர்: கவிராச பண்டிதர் செகவீர பாண்டியன், பிரசுரம்; திருவள்ளுவர் நிலையம், 127, மேல மாசி வீதி, மதுரை; விலை: ரூ 2.

## முருகன் தோத்திரப் பாடல்

பழனி சுவாமிமலை, கதிர்காமம், திருச் செங்கோடு, திருப்போரூர், குமரகோட்டம், திருத்தணிகை முதலிய முருகன் திருக்கோயில் கொண்டுள்ள தலங்களில் பக்தர்கள் மனமுருகிப் பாடிய பாடல்கள் இந் நூலில் அடங்கியிருக்கின்றன.

தொகுத்தவர்: ஆ. சுப்பிரமணிய நாயகர், குயப்பேட்டை, பெரம்பூர் பாரக்ஸ், சென்னை—12 விலை: அணா 6.

## இன்பத் தேன்

மாற்றுத் தாய்மார்களில் நல்லவர்களும் உண்டு, என்று எடுத்துக் காட்டி எழுத விரும்பினால் அது கொஞ்சம் சிரமம்தான். கொடுமை புரியும் மாற்றுத் தாய், இரக்கமற்ற இரண்டாந் தாரம், இவர்கள்தான் நமக்கு அதிகமாக அறிமுகப் படுத்தப் பட்டு வந்திருக்கிறார்கள். ஏழைமை காரணமாக, இரண்டாந்தாரமாக ஒருவனைக் கைப் பிடிக்கும் ஒரு பெண் பலவிதத்திலும் சமூகத்தை எதிர்த்து நீந்த வேண்டியிருக்கிறது. சமூகத்தின் சந்தேகப் பார்வையிலிருந்து தப்பி, ஒரு 'சிற்றன்னை' மூத்தாள் குழந்தைகளின் அன்பையும், கணவனது அன்பையும் எப்படிப்பெற்றாள் என்பதை இந்தக் கதை நன்றாய்க் கூறுகிறது.

எழுதியவர்: அநுத்தமா; பிரசுரம்: அமுத நிலையம்; சென்னை—18; விலை: ரூ. 1-4-0.

# ரூ. 17'8 தான் ஒரு சிறந்த 'கோடக்' காமிரா!

சொந்தமாக படம்பிடிக்கும் பெருமிதம் அடையுங்கள்—சுலபமாகவும் குறைந்த செலவிலும்! இச்சிறப்பான 'கோடக்' மாடல்களைக் கொண்டு, நீங்கள் பொத்தானை அழுத்தி, குமிழை திருப்பவேண்டியதுதான். உங்கள் கோடக் வியாபாரியே உங்களுக்கு பிலிமைக் கூட மாட்டிக்கொடுப்பார். எனினும் இவ்வெல்லா காமிராக்களும், நீங்கள் நண்பர்களிடம் பெருமையுடன் காட்டக்கூடிய சிறப்பு வாய்ந்த படங்கள் எடுப்பவைகளாகும்.






நல்ல படங்கள் எடுப்பது மிக சுலபமே!

**'பிரௌனி' 127 காமிரா**

ஆறடி அருகிலுள்ள உருவத்தையும் சரி, வானளாவிய தூரத்திலிருக்கும் காட்சியையும் சரி, தெளிவாக, தத்ரூபமாகப் படம்பிடிக்கவல்லது.—எதையும் மாற்றிச் சரிப்படுத்தவேண்டிய அவசியமில்லை. 'கோடக்' 127 பிலிம் ஒவ்வொரு சுருளிலும் 1⅝" × 2½" அளவில் 8 ஸ்னேப்புகள் எடுக்கலாம்.

விலை ரூ. 17/8-

**பேபி 'பிரௌனி' ஸ்பெஷல் காமிரா**

உள்ளங்கையிலேயே எடுத்துச் செல்லும்படி அவ்வளவு அடக்கமான காமிரா. 'கோடக்' 127 பிலிம் ஒவ்வொரு சுருளிலும் 1⅝" × 2½" அளவில் 8 படங்கள் எடுக்கலாம்.

விலை ரூ. 16/-

**ஸிக்ஸ்-20 'பிரௌனி' காமிராக்கள்**



**மாடல் C:** நோக்கரவுதரும் சிறுகருவி ஒன்றுமில்லை. குழப்பமுமில்லை. பத்தடி தூரம் அல்லது அதற்கு அப்பாலுள்ள எந்த உருவத்தையும் படமெடுக்கலாம். 'கோடக்' 620 பிலிம் ஒவ்வொரு சுருளிலும் சாதாரண 2¼" × 3¼" அளவில் 8 ஸ்னேப்புகள். விலை ரூ. 24/-

**மாடல் D:** மாடல் Cயைப்போன்றது—ஆனால் 3½ அடி அருகிலிருந்து போர்ட்ரேட்டுகள் எடுக்க க்ளோஸ்-அப் லென்ஸ் அமையப்பெற்றது.

விலை ரூ. 29/-

**மாடல் E:** க்ளோஸ்-அப் லென்ஸ் அமைந்திருப்பதோடு மேகங்களுடன்கூடிய வானக்காட்சியை அழகாக படம்பிடிக்க மஞ்சள் பில்டரும் உடையது.

விலை ரூ. 34/-

8-BC கான்வாஸ் கேஸ்—C.D. E மாடல்களுக்கு. விலை ரூ. 3/-

3-ML தோல் கேஸ்—C.D. E மாடல்களுக்கு. விலை ரூ. 6/-

**இவ்விலைகளில் விற்பனைவரி சேராது**

**உங்கள் ஆல்பத்தை அலங்கரிக்க சிறந்த ஸ்னேப்புகள்**

குடும்பத்தினர், கட்டிடங்கள், நிலப்பரப்புக் காட்சிகள் எல்லாம் தெள்ளத்தெளிவாக பெரிதாக்கத் தகுந்தவகையில் படம் எடுக்கலாம்.

**உபயோகிக்க மிக எளிதானது**

லென்ஸ் துவாரங்களோ ஷட்டர் வேகங்களோ சரிசெய்யத்தேவையில்லை. நேராக காமிராவைப் பிடித்து ஷட்டர் பொத்தானை அழுத்தவேண்டியதே.

**வெளிச்சக்குறைவின் தொந்தரவில்லை**

மாடல் Eயுடன் மலிவான ப்ளாஷ் பல்புகளின் உதவியினால் வீட்டினுள்ளும் இரவு வேளையிலும் ஸ்னேப்புகளும், இதர மாடல்களுடன் "ஒப்பன்-ப்ளாஷ்" உபயோகித்து குழந்தைகளின் விளையாட்டுகள், உத்ஸவங்களின் படங்களும் எடுக்கலாம்.

இன்றே உங்கள் **கோடக்** வியாபாரியைப் பாருங்கள்

கோடக் லிட். (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது)
பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்




ஞாயிற்றுக் கிழமை; காரியாலயத்துக்கு விடுமுறை நாள். சாவகாசமாகப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தேன்.

அப்போது என் காரியாலய நண்பர் கிருஷ்ணன் வந்தார். பத்திரிகையில் கண்ட ஒரு செய்தியை அவரிடம் சொல்லாமல், என்னால் இருக்க முடியவில்லை.

"இதோ பாருங்கள், இதை" என்று அவரிடம் பத்திரிகையைக் கொடுத்தேன். நான் காட்டிய செய்தியைப் படித்ததும் அவர் தமக்குள்ளே சிரித்துக் கொண்டார்.

அந்தச் செய்தி இதுதான்:

"*தபாலில் தாமதம்! தன் பிரயாணத்துக்கு ஏழு வருஷங்கள் எடுத்துக் கொண்ட தபால் கார்டு! 7-1-46ல் எழுதிய கார்டு விலாசதாரிடம் 12-1-53ல் சேர்ந்திருக்கிறது. தாமதத்துக்குக் காரணம் தெரியவில்லையாம்.*"

கிருஷ்ணன் பத்திரிகையைக் கீழே வைத்து விட்டு என்னைப் பார்த்தார்.

"பார்த்தீர்களா! இப்படி தாமதமாக வந்தால், எப்படியாகிறது? கார்டில் முக்கியமான விஷயங்கள் இருந்து, என்ன கஷ்ட நஷ்டங்கள் நேர்ந்ததோ?" என்று அவரிடம் என் அபிப்பிராயத்தைத் தெரிவித்தேன்.

"அப்படிச் சொல்லாதீர்கள், இதனால் நன்மை விளைந்திருக்கும் என்று ஏன் நாம் எண்ணக் கூடாது?"

"தபால் தாமதப்பட்டு வந்ததினால் நன்மை கூட ஏற்படுமா?"

"எனக்கு நன்மை ஏற்பட்டிருக்கிறது. எனக்கும் இப்படி ஒரு கடிதம் ஐந்து வருஷங்கள் கழித்து வந்தது."

"அப்படியா, சொல்லுங்கள் உங்கள் அனுபவத்தை!"

"சொல்லத்தான் போகிறேன். இதுவரை யாரிடமும் சொன்னதில்லை. எங்கள் தாம்பத்திய வாழ்க்கையைப் பாதித்த விஷயம் அது" இந்தப் பீடிகையுடன் நண்பர் கிருஷ்ணன் தம்முடைய அனுபவத்தைச் சொன்னார்.

* * *

1940ம் வருஷம் ஜூன் மாதம் பதினைந்தாம் தேதி எனக்குக் கல்யாணம் நடந்தது. நளினி எனக்கு மனைவியாகக் கிடைத்தாள்.

அவள் ஏழை வீட்டுப் பெண். பெற்றோர்களுக்கு மூன்று பெண்களில் முதல் பெண். அவளுக்கு வரன் தேடுவதற்குள் அவள் தந்தை ராமசாமி திண்டாடிப் போய் விட்டார். படாத பாடு எல்லாம் பட்டு விட்டார். முயற்சியில் வெற்றி கிடைக்காது போகவே, நளினியை வாத்தியார் வேலைக்குப் படிக்க வைத்தார். படிப்பு முடிந்து வாத்தியார் வேலையிலும் அமர்ந்தாள் அவள். அவள் வாழ்க்கையின் இரண்டு வருஷங்கள் இப்படியாகக் கழிந்து விட்டன.

ஒருசமயம் நான் ராமசாமியின் ஊருக்கு ஆபீஸ் வேலையாகப் போக நேர்ந்தது. இந்த வேலையில், அங்கு ராமசாமி சம்பந்தப் பட்டிருந்ததால், அவர் பரிச்சயம் எனக்கு நிறைய ஏற்பட்டது. தம் வீட்டிலேயே, நான் என் வேலை முடிந்து திரும்பும் வரை, சாப்பிடும் படி வற்புறுத்தினார். தட்ட முடியாமல் ஏற்றுக் கொண்டேன்.

அப்படிப் போன போதுதான், நளினியைப் பற்றி நான் அறிய முடிந்தது. அவள் அழகும் தோற்றமும் என்னைக் கவர்ந்தது. அத்துடன் ராமசாமியின் ஏழ்மை நிலையையும் அறிந்து கொள்ள முடிந்தது.

நான் நளினியைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

ஒருநாள் ராமசாமி "உங்கள் வழியில் என் மகள் நளினிக்கு ஒருவரன் இருந்தால் சொல்லுங்கள்" என்றார். மகளின் கல்யாணத்தைப் பற்றிய கவலை அவர் வார்த்தையில் நன்றாகத் தொனித்தது.

"நான் ஒருவன் இருக்கிறேன். உங்களுக்கும், உங்கள் மகளுக்கும் பிடிக்கிறதா என்று சொல்லுங்கள். எனக்குப் பெண் பிடித்து விட்டது" என்றேன் சிரித்துக் கொண்டே.

அதன் பின் எல்லாம் துரிதமாக நடந்தன. எனக்கும் நளினிக்கும் ஒரு சுபயோக சுப முகூர்த்தத்தில் விவாகம் நடந்தேறியது.

எங்கள் இல்லற வாழ்க்கை இன்ப மயமாகவே யிருந்தது. நளினி குடித்தனப் பொறுப்பு மிக்கவள்; சாமர்த்தியசாலி. கட்டு செட்டு என்றால், மற்றப் பெண்கள் அவளிடம் பாடம் கற்றுக் கொள்ள வேண்டும்.

நாலு காசு என்னுடைய சொற்ப வருமானத்திலும் மீத்து வைக்க முடிந்தது. என் தந்தை இறந்த போது ஒரு ஏக்கர் நிலமும், ஆயிரம் ரூபாய் கடனும் எனக்கு வைத்து விட்டுப் போனார். ஐந்து வருஷங்களுக்குள் இந்தக் கடனைக் கொடுத்து நிலத்தை மீட்க முடிந்தது. நளினியின் சாமர்த்தியமும், குடும்ப நிர்வாகத் திறனும் இல்லாவிட்டால் என்னால் இதைச் செய்ய முடிந்திருக்காது.

பகவான் புத்திரச் செல்வத்திற்கும் குறைவு வைக்கவில்லை. முதலில் ஒரு ஆண் குழந்தை. அடுத்தது ஒரு பெண்.

ஐந்து வருஷத் தாம்பத்திய வாழ்வில் நான் அடைந்த பலன்கள் இவை. நளினி என்னை வாழ்விக்க வந்தவளாகவே எனக்குத் தோன்றினாள்; தோன்றி வருகிறாள்.

அப்பொழுதுதான் பாருங்கள், எனக்கு ஒரு கடிதம் வந்தது. கடிதம் 1940-ம் வருஷம் ஜூலை மாதம் ஒன்றாம் தேதியிட்டு எழுதப்பட்டிருந்தது. ஏதோ காரணத்தினால் அக் கடிதம் தாமதமாக வந்து சேர்ந்திருந்தது.

ஊர்பேர் தெரியாத யாரோ ஒரு "உண்மை விளம்பி" எழுதியிருந்தான்.

நளினியின் குணத்தில் மாசு கற்பித்து எழுதியிருந்தான் அந்த மேதாவி. அவள் நடத்தை பிசகினவளாம். சுவாமிநாதன் என்னும் ஒரு வாலிபன் அவளைக் காதலித்து வந்தானாம். இருவரும் சகஜமாகப் பழகினார்களாம். கடைசியில் அவன் அவளைக் கைவிட்டுப் போய் விட்டானாம்.

அத்தகையவளை நான் மணந்து கொண்டதற்காக எனக்கு அனுதாபம் தெரிவித்திருந்தான் அந்த உண்மை விளம்பி.

இந்தக் கடிதம்தான் 1945-ம் வருஷம் செப்டம்பர் மாதம் என் கையில் கிடைத்தது, ஐந்து வருஷங்களுக்குப் பிறகு.

'உண்மை விளம்பி'யின் கடிதத்தை உண்மை என்று கொள்ள என் மனசு மறுத்தது. "என் அருமை நளினி அப்படி ஒரு நாளும் இருந்திருக்க மாட்டாள். சேச்சே! என்னிடம் உயிரையே வைத்து, அன்பு செலுத்தும் நளினியை எவனோ ஒருவன் எழுதி யிருக்கிறான் என்று சந்தேகிப்பதா?" என்று நான் அந்தக் கடிதத்திலிருந்த விஷயத்தை லட்சியம் செய்யவில்லை.

நளினியைச் சந்தேகிக்கவோ, உண்மை எது, பொய் எது என்று விசாரிக்கவோ நான் முயற்சி செய்யவு மில்லை.

ஒரு நாள் நளினி என் அருகில் வந்த போது, அவள் கையில் அக்கடிதமிருந்தது.

"அடடா! உன் கையில் இந்தக் கடிதம் எப்படிக் கிடைத்தது?" என்று அவளைப் பார்த்துக் கேட்டேன்.

"இன்றைக்குச் சலவைக்குத் துணி எடுத்துப் போட்டபோது கிடைத்தது" என்றாள்.

## எங்கே அவன் ?



"அதைக்கிழித் தெறிய இருந்தேன். மறந்து விட்டேன்" என்றேன். என் மறதியை நினைந்து என்னை மனதிற்குள்ளேயே நிந்தித்துக் கொண்டேன்.

"நான் இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் நல்லதாகப் போச்சு!" என்று சொன்னாள் நளினி.

"ஏன் அப்படி சொல்லுகிறாய், நளினி?" என்று அடங்கா ஆவலுடன் அவளைக் கேட்டேன்.

"அது தவறு என்று எண்ணவில்லை. அப்பாவும் சொல்லவில்லை. இப்போதாவது அவசியம் ஏற்பட்டிருக்கிறது பாருங்கள்" என்று அவள் கடிதத்தில் கண்டதற்கு விளக்கம் சொல்ல வந்தாள்.

"நளினி! உன்னை நான் சந்தேகிக்கவில்லை. உன் கதையே எனக்கு வேண்டாம்" என்றேன்.

"எனக்கு அதைப் பற்றிச் சொல்லா விட்டால் நிம்மதி ஏற்படாது" என்று அவள் எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னாள்.



தென் இந்திய எழுத்தாளர் சங்கத்தின் பொதுக் காரியதரிசியும், ஹிந்துப் பத்திரிகையின் உதவி ஆசிரியருமான ஸ்ரீ வி. கே. நரசிம்மன் அவர்கள் சென்ற 13-ல் லண்டனில் நடந்த அகில உலக பத்திரிகையாளர் சங்கத்தில் கலந்து கொண்டு "இந்தியப் பத்திரிகைகளுக்கு ஏற்ற முறையில் அயல் நாட்டுச் செய்திகளைக் கொடுக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். அங்கிருந்தபடியே வியன்னா நகரத்துக்குச் சென்று அங்கு நடக்கப் போகும் அகில உலக வர்த்தகச் சங்கத்தின் வருஷாந்திர மகாநாட்டிலும் கலந்து கொள்ளப் போகிறார்.

* * *

நளினி வாத்தியார் வேலையில் இருந்தபோது, ரெவினியு இன்ஸ்பெக்டராக சுவாமிநாதன் அந்த ஊருக்கு மாற்றலாகி வந்தான். அவள் அழகு அவனைக் கவர்ந்தது. அவள் தந்தை ராமசாமியிடம் அவளை மணந்து கொள்வதாகச் சொன்னான். ராமசாமி அவன் வார்த்தைகளை நம்பினார். தன் பெற்றோர்களின் சம்மதத்துடன் நளினியை மணந்து கொள்வதாக அவன் சொல்லியிருந்தான். வாத்தியாராக வெளியே தெருவே போக வேண்டியிருந்த அவள், அவனிடம் சகஜமாகப் பழகி வந்தாள். ஆனால் சுவாமிநாதன் வேறு பணக்கார இடத்தில் பெண் கிடைத்ததும் இந்த ஏழை அழகியை மணக்க முடியாது என்று சொல்லி விட்டான்.

* * *

"இதுதான் நடந்தது. மற்றபடி என் குணத்தில் குற்றம் நிறைந்திருந்தால், அன்றே உயிரை விட்டிருப்பேன். என்னை நம்புகிறீர்களா, இல்லையா" என்று நளினி கேட்டாள். அவள் கண்கள் கலங்கி விட்டன.

"அசடே! ஏன் அழுகிறாய்? உன்னை நான் சந்தேகிக்கவில்லை. அப்படிச் செய்தால் மகா பாவம். அவன் கிடக்கிறான் உண்மை விளம்பி!" என்று அவள் கையிலிருந்த கடிதத்தைச் சுக்குநூறாகக் கிழித்தெறிந்தேன். கடிதம் தாமதித்து வந்ததை அவளுக்குச் சொன்னேன். அவள் அதிசயித்தாள்.

"எங்கள் ஊரில் ஒரு அசடு இருந்தது. அதன் மூக்கையும், முகத்தையும் முழியையும், பார்க்கச் சகிக்காது. ஒரே விகாரம். அதை நான் மணக்கவில்லை என்ற கோபம். உண்மை விளம்பியாக மாறியிருக்கு" என்றாள் அவள். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, எனக்கு நளினி முன்னிலும் மேம்பட்டவளாகத் தோன்றினாள். எங்கள் இன்ப வாழ்வில், எந்தக் காரணத்திற்காகவும் கசப்பு ஏறியதில்லை. நாளடைவில் இந்த ஊருக்கு மாற்றலாகி வந்தேன். உங்கள் அரிய நட்பும் கிடைத்தது" என்று கிருஷ்ணசாமி சொல்லி முடித்தார்.

* * *

"அது சரி, நன்மை எப்படி ஏற்பட்டது? நீங்கள் சொல்லவில்லையே!" என்றேன் நான்.

"அதையும் உங்களுக்குத் தெளிவாகச் சொல்லி விடுகிறேன். இந்தக் கடிதம் எழுதிய இரண்டு மூன்று நாட்களில் என்னிடம் கிடைத்திருந்தால் என்ன நடந்திருக்கும் தெரியுமா?...கல்யாணம் ஆன புதுசில், இளமை முறுக்கில், வாழ்வின் அனுபவம் பிடிபடாத அந்த நாளில், நல்லது கெட்டது எதையும் அறியும் பக்குவமில்லாத நான், 'உண்மை விளம்பி'யின் கடிதத்தில் கண்டிருந்ததை உண்மையென்றே எண்ணியிருப்பேன். மறு யோசனையின்றி, கேள்வி முறையின்றி, நளினியை விரட்டி யடித்திருப்பேன். ஒரு பெண்ணின் வாழ்வு குட்டிச் சுவராகப் போயிருக்கும். என் வாழ்வும் மோசமாகயிருந்திருக்கும். இப்பொழுது அப்படி நடக்கவில்லை, பார்த்தீர்களா?" என்றார் நண்பர்.

"அதுவும் சரிதான். ஐந்து ஆண்டுகளோ பத்து ஆண்டுகளோ கழித்து இது மாதிரி கடிதம் தாமதித்து வந்தாலும், அல்லது புதிதாக எழுதி வந்தாலும், உங்களைப் போன்ற மனத்தெளிவு பிறருக்கு வராது என்றுதான் என்னால் நினைக்க முடிகிறது" என்றேன் நான். பிறகு சிறிது நேரத்துக்குப் பிறகு அவர் விடை பெற்றுக்கொண்டார்.

# ‘எங்களுக்கு ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் காப்பியே போதுமானது!’

“காப்பி விலை அதிகமாக இருக்கும்பொழுது சிறந்த காப்பியை வாங்குவதே நல்லது. ஆகையால் தான் நான் சிகப்பு லேபிள் காப்பியை வாங்குகிறேன். அது கலப்படமற்றது. அதிகமான டம்ளர் காப்பியை அளிக்கிறது. அந்த விலையில் அதைவிட உயர்ந்த காப்பியை வாங்கவே முடியாது!”






சிகப்பு லேபிள் சுத்தமான காப்பியின் நறுமணம் கெடாதிருப்பதற்காக அது காற்றுப்படாமல் பாக்கிங் செய்யப்படுகிறது. 1, 3, மேலும் 7 ராத்தல் டின்களில் கிடைக்கிறது. இன்றே ஒரு டின் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பியை வாங்குங்கள்.

**Stanes**

## சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி

STC 3510

**தி யுனைடெட் காப்பி ஸப்ளை கம்பெனி லிட்.**
**கோயம்புத்தூர், தென் இந்தியா**

திருவனந்தபுரத்திற்கு ஏஜண்டுகள் :
மிஸ்டர் ஜி. ஆர். ஹரிஹரன்,
செந்திட்டை சாலை

மதுரைக்கு ஏஜண்டுகள் :
தி ஸ்டேன்ஸ் காபி & ஜெனரல் ஏஜன்ஸி,
60, மேல கோபுர வீதி

# கமலம்மாளின் கருணை

ஹர்ஷன்

"நான் இவ்வளவு விவரமாகச் சொல்லி விட்டேன். நீங்கள் இன்னமும் தொந்தரவு செய்வது நன்றாக இல்லை. இன்றைக்கே செய்து முடிக்கப்பட வேண்டிய காரியங்கள் ஏகப்பட்டது இருக்கின்றன. நான் வரட்டுமா!" என்று சொல்லிக் கொண்டே எழுந்திருந்தான் சந்தானம்.

கிழவர் அப்போதும் விடுவதாக இல்லை. "தாங்கள் அப்படிச் சொல்லக் கூடாது. விட்டில் இந்தப் பக்கம் திரும்பினால் கஷ்டம், அந்தப் பக்கம் திரும்பினால் சங்கடம் என்று ரொம்பவும் சிரமமாக இருக்கிறது. தங்களால் முடியக்கூடிய உபகாரம் என்பதற்காகத்தான் நான் தங்களிடம் இவ்வளவு கெஞ்சுகிறேன்."

பொறுமை இழந்த நிலையில் சீறி விழுந்தான் சந்தானம் "என்னால் முடியக்கூடிய காரியங்களை எல்லாம் செய்து கொண்டே வந்தால் முடிவு என்பது ஏது சுவாமி! உங்களைக் கெஞ்சிக் கேட்டாலும் பலன் இல்லை. மிஞ்சினாலும் பலன் இல்லை என்கிறீரே!" என்றான் அவன்.

கிழவரின் கண்களில் நீர் துளிர்த்தது. அதைப் பிறர் பார்த்துவிடக் கூடாதே என்பதற்காக அவர் எவ்வளவு முயன்றும் முடியவில்லை. ஆனால், சந்தானம் அப்போது இருந்த நிலையில் அவனால் கிழவரின் கண்ணீரை உணர முடியவில்லை.

இதற்குள் அவன் தாயார் கமலம்மாள் அவனைக் கூப்பிட்டாள். அவனும் உள்ளே நுழைந்தான். "சந்தானம். அவரைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. உனக்குப் பிடிக்கிறதோ இல்லையோ அவ்வளவு நிர்த்தாட்சண்யமாகப் பதில் சொல்லாதேன்! இரண்டு நாட்கள் கழித்து வாருங்கள், யோசித்துச் சொல்கிறேன் என்று சொல்லி வையேன்" என்றாள் அவள்.

தாயின் இந்தக் குறுக்கீடு அவனுக்குப் பிடிக்கவில்லை. "அம்மா! இது ரொம்பப் பெரிய விஷயம். இதில் யார் தலையிடுவதும் எனக்குப் பிடித்தமில்லை. அதிலும் என் சுபாவம் தெரிந்த நீ குறுக்கிடுவது பிடிக்கவே இல்லை" என்றான்.

ஆனால், கமலம்மாள் விடுவதாக இல்லை. "உனக்கு அறிவு தெரிந்த நாளாய் நான் உன் விஷயங்களில் தலையிட்டதே இல்லை. ஆனால், இந்தத் தடவை நீ என்னை மன்னித்துவிடு. என் மனதில் ஏதோ ஒன்று நாம் இவருக்கு உதவி செய்துதான் ஆக வேண்டும் என்று சொல்கிறது. முதலில் அவரைச் சுமுகமாக அனுப்பி விட்டு வா" என்று கெஞ்சினாள்.

அவள் சொல்வதில் இருந்த உண்மையைச் சந்தானத்தால் உணர முடிந்தது. என்றாலும் தான் முழு மனதோடு அவள் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து விடவில்லை என்பதை அறிவுறுத்தும் தோரணையில் அவன் ஆழ்ந்த பெருமூச்சொன்றை வெளியிட்டபடி கூடத்தை நோக்கி நடந்தான்.

இவ்வளவையும் அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்த சந்தானத்தின் மனைவி கல்யாணி, கமலம்மாளின் அசாதாரணமான அந்தக் குறுக்கீட்டின் காரணம் விளங்காமல் விழித்தாள்.

* * *

இன்றைக்கு வேண்டுமானால் அவள் மகன் சந்தானம் பெரியதொரு காரியத்தை நிர்வகிக்கும் வகையில் பெரிய மனிதனாகி விட்டான். ஆனால் அவன் பிறப்பதற்கு முன்பும் அவன் பிறந்த வீட்டில் வளர்ந்தபோதும் அவள் பரம ஏழை.

அவள் தந்தை சாதாரணமான குமாஸ்தா; அதிலும், தாலூக்கா ஆபீஸ் குமாஸ்தா. எனவே வறுமை அதன் முழு ஆதிக்கத்தையும் அங்கே செலுத்திக் கொண்டிருந்தது. சந்தான சம்பத்தும் நிரம்ப இருந்தது. கல்யாணத்துக்குக் காத்துக் கொண்டு இரண்டு பெண்கள், தாய்ப் பாலுக்கு ஒன்றும், பசும் பாலுக்கு ஒன்றுமாக இரண்டு குழந்தைகள். புள்ளிக்கு உதவாத பள்ளிக் கணக்கைப் படிக்கும் அடிப்படையில் செலவுக்கு அடி கோலும் பையன் என ஐந்து குழந்தைகள் இருந்தன.

அரை குறையாக நீந்தத் தெரிந்தவன் போல அவள் தந்தை சிவராமனும் வாழ்க்கைக் கடலில் தத்தளித்து முன்னேறிக் கொண்டிருந்தார்.

அவர் மனைவி சிவகாமு, ஆடை அணிகள் இல்லாத குறையை நிவர்த்தி செய்யும் வகையில் பொறுமையை அணிகலமாகப் பெற்றிருந்தாள். சமயம் வாய்த்தபோதெல்லாம் அவள் தன் கணவனிடம் "பணம் இல்லை என்ற காரணத்தைச் சொல்லிக்கொண்டு பெண்ணுக்குக் கல்யாணம் செய்யாமல் இருக்கக் கூடாது. கடனோ, உடனோ வாங்கிச் சரிக்கட்டத்தான் பார்க்க வேண்டும். கமலாவுக்கு ஒரு வரன் பாருங்கள்" என்று நச்சரிக்கத் துவங்கி விட்டாள்.



டாக்டர் (இளமையைத் தரும் சிகிச்சை செய்து கொண்டே):—இந்த ஆப்பரேஷன் முடிந்தவுடனே பாருங்கள்! உங்களுக்குப் பால்யம் திரும்பிவிடப் போகிறது! கொஞ்சம் அமைதியாயிருங்கள். வலி தெரியவே தெரியாது!

சிகிச்சை செய்து கொள்பவர்:—எனக்குப் பால்யம் நன்றாய்த் திரும்பி விட்டது. நான் ஆப்பரேஷன் வலியைப் பொருட்படுத்தவில்லை. எனக்குப் பள்ளிக்கூடத்துக்கு நேரம் ஆகிவிட்டதே! உபாத்தியாயர் திட்டுவாரே என்றுதான் அவசரப்படுகிறேன்!



1930-ம் ஆண்டு நம் முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் தலைமையில் வேதாரண்யத்தில் நடந்த சரித்திரப் பிரசித்தி பெற்ற உப்பு சத்தியாக்கிரகத்தின்போது, சத்தியாக்கிரகிகள் முகாம் இருந்த இடத்தின் ஞாபகார்த்தமாக வேதாரண்யம் பஞ்சாயத்துப் போர்டார் சுமார் ஆறாயிரம் ரூபாய் செலவில் ஒரு பூங்கா அமைத்தார்கள். அதற்கு 'ராஜாஜி பூங்கா' என்று நாமகரணம் சூட்டி ஏப்ரல் மாதம் 28-ந் தேதி நிதி மந்திரி ஸ்ரீ சுப்பிரமணியம் அவர்களைக் கொண்டு அந்த ஞாபகார்த்தப் பூங்காவின் திறப்பு விழாவை நடத்தினார்கள். மேற்படி விழாவில் கலந்து கொண்ட பிரமுகர்களை மேலே படத்தில் காணலாம்.

---

சிவராமனும் வரன் வேட்டையில் இறங்கினார். மூலை முடுக்குகளில் எல்லாம் சல்லடையிட்டுத் தேடினார். அவருடைய பொக்கிஷத்தின் தன்மையை அறிந்த யாரும் பெயருக்காகக்கூட கமலத்தைப் பார்க்கத் துணியவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் தான் உள்ளூரிலேயே ஒரு பள்ளிக் கூடத்தில் வாத்தியார் வேலை ஒன்று காலியாயிற்று. பொழுது போகாமல் வீட்டில் சங்கடப்படுவானேன் என்று கமலா அந்த வேலையை ஒப்புக் கொள்வதென தீர்மானித்தாள்.

தாய்க்கும், தகப்பனுக்கும் இருந்த தயக்கத்தைப் போக்கி, அவர்கள் சம்மதத்தைப் பெற அவள் நிரம்பவும் சிரமப்பட வேண்டி இருந்தது. கடைசியாக, "எனக்கென்று ஒருவன் ஏற்பட்டு விட்டால் பிறகு நான் இப்படி எல்லாம் செய்ய முடியப் போகிறதா அம்மா! சொற்பப் பணமாயிருந்தாலும் நான் சம்பாதிக்கும் பணத்தை அப்படியே சேர்த்து வைத்தால் இரண்டாயிரம் கடன் வாங்க வேண்டிய சமயத்தில் ஆயிரம் ரூபாய் வாங்கிவிட்டுப் போகிறோம். எனக்கும் நிம்மதியாக இருக்குமே!" என்று கெஞ்சினாள் அவள்.

சரியாக ஒன்பதே மாதங்கள்தான் அவள் வேலை செய்தாள். ஆனால், இந்த நாட்களில் அவளுக்கு ஏற்பட்ட அநுபவமும், மனச்சாந்தியும் அமோகம். காலையில் எழுந்தால் பொழுது மறையும் வரை அவள் ஓய்வின்றி உழைக்க வேண்டி இருந்தது என்றாலும், சிறு குழந்தைகளின் கபடமற்ற முகமும், அந்தரங்கத்தோடு கிளம்பும் அன்பு நிரம்பிய புன்னகையும் அவளுக்கு அலாதி ஆனந்தத்தைக் கொடுத்து வந்தது

ஒருநாள் பள்ளிக்கூடத்திலிருந்து அப்போது தான் திரும்பி யிருந்த கமலா உடைகளை மாற்றிக் கொண்டிருந்தாள். வழக்கத்துக்கு விரோதமாக அவள் தந்தை வீடு திரும்பி யிருந்தார்.

பரபரப்பு அடையும் வயதை அவர் தாண்டி விட்டிருந்தாலும் இதயத்தை மீறிக் கிளம்பும் உவகையைக் கட்டுப்படுத்த முடியாமல் "சிவகாமு உன் பெண்ணுக்குக் கடைசியில் நல்ல காலம் வந்து விட்டது. அடுத்த வெள்ளிக்கிழமை யன்று ஒரு பையன் அவளைப் பார்க்க வருகிறான். அவன் அப்பா பெரிய மிராசுதார். பையனுக்கு என்னவோ பெண் படித்தவளாகவும் இருக்க வேண்டுமாம். கூடவே அடக்க ஒடுக்கம் நிறைந்த ஏழைப் பெண்ணாகவும் வேண்டுமாம்" என்று சொன்னார்.

சிவகாமுவுக்கு இந்தச் செய்தி கொஞ்சம் ஆறுதலாக இருந்தாலும் இடம் பெரிய இடம் என்று கேட்டபோது அதில் நம்பிக்கை இருக்கவில்லை. "என்னதான் அவர்கள் குறைத்துக் கேட்டாலும் அவர்கள் கேட்கும் அளவுக்கு நம்மால் செய்ய முடியப் போவதில்லை. அந்தச் சமயம் அவர்களுக்கு என்னவோ அது ரொம்பவும் குறைவானதாகத் தோன்றும். பார்ப்போம்" என்றாள் அவள்.

"நீ சுத்த அசடு. அவர்களுக்குச் சீரோ, செனத்தியோ எதுவும் வேண்டாமாம். கல்யாணச் செலவை மட்டும் பார்த்துக் கொண்டால் போதுமாம்" என்றார் சிவராமன்.

சிவகாமு பதிலே பேசவில்லை. 'இன்னும் உம் என்று ஒரு வார்த்தை சொல்லவில்லை. அதற்குள் இவ்வளவு சந்தோஷப்பட்டு விடுகிறீரே' என்று வியந்து போனாள் அவள்.

அவர்கள் எதிர்பார்த்த அந்த வெள்ளிக்கிழமையும் வந்து சேர்ந்தது. கமலா காரியாலயத்துக்கு லீவு போட்டுவிட்டுத் தன்னைப் பார்க்க வரும் பையனுக்காக ஆயத்தம் செய்து கொண்டாள்.

ரவா சொஜ்ஜியும், பஜ்ஜியும் தட்டில் மறைந்து கொண்டிருக்க, பெண்ணைப் பார்க்கும் படலம் நடந்தது. எல்லோரையும் போல அவர்களும் "நாங்கள் ஊருக்குப் போய் எழுதுகிறோம்" என்று சொன்னபோது சிவகாமியின் முகம் தொங்கிப் போயிற்று.

சிவராமன் அவளைக் கேலி செய்தார். "உனக் கென்ன! இன்றைக்கே உன் பெண்ணின் கழுத்தில் தாலியைக் கட்டிவிடக் கூடாதா என்று பார்ப்பாய்! ஆனால், அவர்கள் ஒரு தரத்துக்கு இரண்டு தரம் யோசிக்காமல் முடியுமா!"

சிவகாமியம்மாள் எதை விரும்பவில்லையோ அது நடந்து விட்டது. மூன்றும் நாள் சிவராமனின் பெயருக்கு வந்திருந்த அந்தக் கடிதம் அந்தச் செய்தியைத் தாங்கி வந்தது.

"உங்கள் பெண் வேலைக்குப் போகிறாளாமே! எங்களுக்குப் படித்தவளும், நாகரீகமானவளும் ஆன பெண் தேவைதான். அவள் ஏழையாக இருந்தாலும் எங்களுக்குச் சந்தோஷமே. ஆனால் பெண் வேலைக்குப் போவதை எங்களால் பொறுக்க முடியாது. எவ்வளவு சிரமப்பட்டாலும் பழைய காலைய பழக்க வழக்கங்களை மீறுவது எங்களுக்குக் கொஞ்சமும் பிடிக்காது. மன்னித்து விடுங்கள்" என்று எழுதியிருந்தது.

கிடைக்காத பொருளுக்காக மனிதன் ஏங்குவதே இல்லை. ஆனால், சாதாரண பொருள்கூட கிடைக்கக் கூடியது, கிடைத்து விடும் என்ற நம்பிக்கை அவனுக்கு ஏற்பட்டு அது கைநழுவிப் போகுமானால் அவனால் தாங்க முடியாது.

கமலாவின் இதயத்தில் ஈரம் வறண்டது. "வேண்டாம், எங்களுக்குப் பிடிக்கவில்லை" என்று ஒரே வார்த்தையில் சொல்லி விடுவதுதானே! "வேலைக்குப் போகிறேன். மமதை இருக்கும், பெரியவர்களுக்கு அடங்க மாட்டேன் என்றெல்லாம் சொல்லுவானேன்!" என்றாள் அவள்.

நாட்களின் போக்கில் அவள் ஒருவன் கையைப் பிடித்தாள். அந்த மனிதன் தன் நம்பிக்கையும் தளரா உழைப்பும் உள்ளவன். அவனுக்கு எல்லா உதவியையும் செய்து வந்தாள் கமலா. அவன் வாழ்க்கை சீர்பட்டது. அவள் காலடி வைத்த வேளை அவன் பதவி உயர்ந்து செல்வமும் வளர்ந்தது. அவளுக்குச் சந்தானம் பிறப்பதற்கும், அவன் தன் தந்தையின் காரியாலயத்திற்கு உரிமையாளனாக ஆவதற்கும் சரியாக இருந்தது.

* * *

இதெல்லாம் பழைய கதை. காலதேவனின் அசுர விளையாட்டில் கமலாவின் கணவன் பரமபதம் எய்தியதும், சந்தானம் வளர்ந்து தந்தையின் வியாபாரத்தைக் கவனிக்கத் துவங்கியதும், கல்யாணி அவனுக்கு மனைவியாக வாய்த்ததும்கூட அவனுடைய விளையாட்டுகளில் ஒரு பங்குதான்.

சின்ன வயதில் சங்கடப் பட்டவர், பிற்பகுதியில் அவதிப்படுவதில்லை. கமலாவுக்கும் அப்படித்தான். தாயின் அருமை தெரிந்த மகன், தான் பெற்றெடுத்த மகனைத் தனக்கு உரிமையாக்கினவள் என்ற வகையில் அவளைப் பேணும் நாட்டுப் பெண் கல்யாணி தன் மாமியாரிடம் அடக்க ஒடுக்கமாக நடந்து கொண்டாள்.

* * *

இரண்டு நாட்களுக்குப் பிறகு.

சந்தானம், அவன் நண்பர் ஒருவர் அளித்த விருந்தொன்றில் கலந்து கொள்வதற்காக மனைவியோடு போயிருந்தான். கமலம்மாள் தன்னைத் தனியாக வீட்டில் இருந்தாள்.

வாயிற்கதவு தட்டப்படும் ஓசை கேட்டுக் கதவைத் திறந்த அவள் திடுக்கிட்டுப் பின் வாங்கினாள். கிழவரும் அவளைக் கண்டு திகைத்தார். தன்னைச் சுதாரித்துக் கொள்ள அவர் எவ்வளவோ முயன்றும் அவரையும் மீறி அவர் வாய் "நீயா... நீங்களா!" என்று குழறிற்று.

எதுவும் தோன்றாத நிலையில் பரபரவென்று உள்ளே நுழைந்தாள் அவள். கிழவரும் பின் தொடர்ந்து கூடத்தில் இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டார்.

தானாகவே தன்னைக் கிழவருக்கு அறிமுகம் செய்து கொண்டாள் கமலம்மாள். "சந்தானம், என் பிள்ளைதான். தெய்வம் எனக்கு வேறு இடத்தில் முடிச்சுப் போட்டிருந்தது. நீங்கள் மறந்து விட்டீர்கள். அது போகட்டும். சந்தானத்திடம் உங்களுக்கு என்ன வேலை! அதை என்னிடம் சொல்ல விரும்பினால் சொல்லுங்கள். இல்லாவிட்டால் வேண்டாம்" என்று இழுத்தாற் போலக் கேட்டாள்.

கிழவருக்கு முதலில் சற்றுக் குழப்பமாக இருந்தது. மெல்ல மெல்ல அவர், தம்முடைய அனுபவங்களைச் சொல்லத் துவங்கினார்.

"மண்டைக் கர்வம் கொண்டவர் யாரும் முன்னுக்கு வருவதில்லை. என் விஷயத்திலும் இது மெய்யாகப் போய்விட்டது. பெரிய மிராசுதார் என்ற பெயரே தவிர வானம் பொய்த்து, என் தந்தையின் புத்தியும் சற்று பொய்த்துப் போகவே நாங்கள் அன்னக்காவடிகளாகி விட்டோம். என்



"ஏன், ஸார்! நீங்கள் சாப்பிட்டவுடன் அரோகாவும் வெற்றிலையும் போடும் வழக்கம் உண்டோ?"

"அவரை அப்படிக் கேட்காதீர்கள்! முதலில் நீங்கள் வேளா வேளைக்குச் சாப்பிடும் வழக்கம் உண்டா என்று கேளுங்கள்!"



ஸ்ரீமதி பால ஸரஸ்வதியின் பரதநாட்டியப் பள்ளிக்கூடத் திறப்பு விழாவில் நாட்டியம் ஆடி அபிநயம் பிடித்த அவருடைய சிஷ்யை குமாரி உமா—"ஹிந்து" காரியாலயத்தைச் சேர்ந்த ஸ்ரீ வி. வி. சாஸ்திரியின் செல்வப் புதல்வி.

மனைவி சுலோ நல்லவள் தான். ஆனால் சந்தர்ப்பமும் சூழ்நிலையும் எங்களுக்கு நல்லதாக இல்லை.

"படித்தவன் என்ற அடிப்படையில் என்னால் உத்தியோகம் பார்க்க முடிந்தது. கிடைத்த வரும்படியைக் கொண்டு நன்றாகச் சாப்பிட வகை இருந்தது. ஆனால், வரவைக் கொண்டு செலவைச் சரிக்கட்ட முடிந்ததே தவிர உண்பதற்கு இல்லாத குறை. பற்றாக்குறைக்கு, வயதாகி விட்ட காரணத்தால் இன்று நான் 'பென்ஷன்' தாரர்களில் ஒருவனாகி விட்டேன். கிடைக்கும் பதினைந்து ரூபாய் எந்த மூலைக்குப் போதும்!"

கிழவர் சற்று நிறுத்தினார். அளவுக்கு மீறிய துக்கத்தால் அவர் கண்கள் கலங்குவதைக் கமலம்மாள் நன்றாக உணர்ந்தாள்.

கிழவர் மறுபடியும் ஆரம்பித்தார்.

"எனக்கு இரண்டு குழந்தைகள். இரண்டும் பெண்கள். மூத்தவளைக் கல்யாணம் என்று ஒன்று நடந்தால் போதும் என்ற நோக்கத்தோடு ஒருவனுக்கு மணம் செய்து கொடுத்தேன்.

"என் இரண்டாவது பெண் கௌசல்யா அழகி தான். போன மாதத்தோடு அவளுக்குப் பதினெட்டு வயது பூர்த்தியாயிற்று. சிரமத்தோடு சிரமமாக அவளைப் பத்தாவது வகுப்பு வரை படிக்க வைத்து விட்டேன். கல்யாணம் நடக்கிற வரை அவள் வேலைக்கு அமர்ந்து நாலு காசு கொண்டு வந்தால் எனக்கு உதவியாக இருக்கும்.

"ஆனால், நாம் விரும்புகிறபடி எல்லாம் நடந்தால் பிறகு உலகத்தில் கஷ்டம் தான் ஏது! என் பெண்ணுக்கு அவ்வளவு சுலபத்தில் வேலை கிட்டுமா!

"உங்கள் மகன் காரியாலயத்தில் ஒரு வேலை காலியாக இருக்கிறதாம். அதற்காகத்தான் நான் அவரைக் கெஞ்சுகிறேன். பெண்களை வேலைக்கு வைத்துக் கொண்டால், காரியாலய வேலைகள் பூராவும் கெட்டு விடுமாம்......"

கமலம்மாளின் அடிவயிற்றிலிருந்து நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது. 'உலக வாழ்க்கை நாடகத்தை நிகழ்த்தது தான். எந்தக் காரணத்துக்காக அவர் என்னை மறுத்தாரோ அதே காரணத்துக்காகப் பிறரைக் கெஞ்சும் நிலைமை ஏற்பட்டு விட்டதே!' என்று வியந்தாள் அவள்.

"நீங்கள் தான் கொஞ்சம் உங்கள் மகனுக்குச் சொல்லுங்களேன். என்னிடம் உங்களுக்குக் கோபம், ஆத்திரம் இரண்டும் இருக்கலாம். அவைகளை மறந்து என்னை மன்னித்து விடுங்கள்."

தலையை நிமிர்த்திக் கிழவரைப் பார்த்தாள் கமலம்மாள். காலம் இழைத்திருந்த முதுமைக் கீற்றுக்களோடு, வறுமை வகுத்து விட்டிருந்த வடுக்களையும் கண்டபோது அவளுக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது.

சற்று நேரத்துக்குப் பிறகு கிழவர் திரும்பினார். அன்றைய இரவு தூக்கம் பிடிக்காமல் படுக்கையில் புரண்டு புரண்டு தவித்த கமலம்மாளின் மனதில் ஒரு விதத் தீர்மானம் குடிகொண்டது.

* * *

மறுநாள் காலை. சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி தினப் பத்திரிகை ஒன்றைப் புரட்டிக் கொண்டிருந்தான் சந்தானம். கமலம்மாள் மெள்ள அவனை நெருங்கிப் பேச்சுக் கொடுத்தாள்.

"உன்னிடம் வேலை தேடி வந்தாரே ஒரு கிழவர். அவர் பெண் கௌசல்யாவை நீ பார்த்திருக்கிறாயா!"

"பார்த்திருக்கிறேன். ஏன், உன் மகனுக்கு இரண்டாவது கல்யாணம் செய்யப் போகிறாயா?"

மகனின் இந்த இடைவெட்டுக்கு அவள் பதில் சொல்லவில்லை.

"கல்யாணியின் அப்பா நாம் சொன்னால் கேட்பார் இல்லையா! அவள் தம்பிக்குக் கௌசல்யாவை மணம் செய்து முடித்தால் நன்றாக இருக்கும்!"

விழிகளைச் சற்று உயர்த்தித் தாழ்த்தினான் சந்தானம். "உனக்கு அந்தக் கிழவரிடம் என்ன அவ்வளவு அக்கறை!"

"சின்ன வயதில் அவர் என் வாழ்க்கையில் குறுக்கிட்டார். என்னுடைய பிற்கால வாழ்க்கையையே அவர் மாற்றி விடுவார் என்று நினைத்துக் கொண்டிருந்த சமயம், அவர் மனம் மாறி விட்டது. நன்றாக வாழ்ந்த அவர் இப்போது சங்கடப்படுகிறார். அவரைக் கைகொடுத்துத் தூக்கி விடுவது நம் கடமை."

* * *

கௌசல்யா கொடுத்து வைத்தவள். அவளுக்கும், கல்யாணியின் தம்பிக்கும் நல்ல சுப முகூர்த்தம் ஒன்றில் மணம் நடந்தது.

கல்யாணம் எல்லாம் முடிந்த பிறகு கமலம்மாளுக்குத் தன் நன்றியைத் தெரிவித்தார் கிழவர். "என்னிடம் கோபம் கொண்டு விரட்டியடிப்பீர்கள் என்று நினைத்தேன். மாறாகத் தாங்கள் நான் எதிர்பாராத வகையில் உதவி செய்து விட்டீர்கள். நான் என்றென்றைக்கும் உங்களுக்குக் கடமைப் பட்டவன்."

கமலம்மாள் குறுக்கிட்டாள்: "கடமையாவது, மண்ணாவது. வாழ்க்கையில் ஒவ்வொருவரும், கஷ்டத்தையோ, சுகத்தையோ அவர்களாக அனுபவித்துப் பார்த்தால் தவிர உணர முடிவதில்லை. சூழ்நிலையும் சந்தர்ப்பங்களும்தான் எல்லாவற்றுக்கும் காரணம்!" என்றாள்.

# நண்பரின் கடிதம்

டி. ஜி. எஸ்.

ராகவனுக்குத் திடீரென்று பங்களூருக்கு மாற்றல் உத்தரவு வந்து விட்டது. அவன் புறப்படுவதற்கு முதல் நாள் ஞாயிற்றுக் கிழமையாயிருந்ததால் அன்று காலை என்னைத் தன் வீட்டுப் பக்கம் வரச் சொல்லியிருந்தான். நான் போன சமயம் அவன் வீடு ஏகக் களேபரமாயிருந்தது. மூலைக்கு மூலை சாமான்கள் இரைந்து கிடந்தன.

"டேய் சீனு! என்னிடம் இருக்கும் காப்பி டின், பாட்டில்கள் எல்லாம் வேணுமானால் எடுத்துக் கொண்டு போ; எனக்கு அதெல்லாம் அவசியமில்லை" என்றான்.

"அதெல்லாம் கிடக்கட்டும். உன் 'ஈஸி சேரை' என்ன செய்யப் போகிறாய்? அதை எனக்கு விலைக்குக் கொடுத்து விடேன்" என்றேன், நான் அவன் அமர்ந்திருந்த ஈஸி சேரை நோட்டம் விட்டபடி.

"அதுவா... அது வந்து..." என்று சற்றுத் தயங்கிய அவன், "அதை என் கூடவே எடுத்துப் போகலாமென்று நினைத்திருந்தேன். உனக்கு வேண்டுமானால் கொடுக்கத் தயார். ஆனால் கிரயம் ஐந்து ரூபாயாகும்" என்றான் புன்னகையுடன்.

ஐந்து ரூபாய்க்கு அவ்வளவு நல்ல ஈஸிசேர் கிடைப்பது கொள்ளை மலிவுதான் என்று எனக்குப் பட்டது.

அன்று மாலையே பணத்தைக் கொண்டு வந்து கொடுத்து அதை என் வீட்டுக்கு எடுத்துப் போனேன். இரவு சாப்பாட்டிற்கப்புறம் அந்த ஈஸிசேரில் அமர்ந்து ஓய்வு எடுத்துக் கொண்டபோது 'ரத்ன சிம்மாசனத்தில்' அமர்ந்திருப்பது போன்ற பெருமை ஏற்பட்டது உள்ளத்தில்.

ஒரு வாரம் சென்றது.

அடுத்த தெருவில் குடியிருந்த ஈசுவரன் என்னைத் தேடிக் கொண்டு வந்தார். அவருக்கும் எனக்கும் அதிகமான பரிச்சயமில்லாததால் அவர் என்னைத் தேடி வந்ததின் காரணம் அறியாமல் வியந்தபடியே, "எங்கே இவ்வளவு தூரம்?" என்று கேட்டேன்.

"ராகவன் மாற்றலாகிப் போன போது ஈஸிசேரை உங்களிடம் கொடுத்துப் போனாரா?" என்று கேட்டார்.

"இனாமாகக் கொடுக்கவில்லை; ஐந்து ரூபாய் விலைக்குத்தான் கொடுத்தார்" என்றேன் நான்.

அவருக்கும், ஈஸிசேருக்கும் என்ன சம்பந்தமிருக்கும் என்று யோசித்தறிவதற்குள் முற்பட்டது என் உள்ளம்.

அதற்குள் அவரே "ராகவன் என் வீட்டுப் போர்ஷனில் குடியிருந்தது உங்களுக்குத் தெரியும். அப்போது என் வீட்டிலிருந்து உபயோகத்திற்காக அந்த ஈஸிசேரை வாங்கிக் கொண்டார். என் வீட்டைக் காலி செய்து கொண்டு கிளம்பியபோது அது தம்மிடமே கொஞ்ச நாள் இருக்கட்டுமென்றும் தனக்கு மாற்றலானால் திருப்பிக் கொடுத்து விடுவதாகவும் சொன்னார். அவருக்குத் திடீரென மாற்றலான விஷயம் வெளியூர் போயிருந்த எனக்கு நேற்றுத்தான் தெரிந்தது. ஈஸிசேரை நீங்கள் எடுத்துப் போனதாகத் தகவல் கிடைத்தது......" என்றார்.

எனக்குக் கோபம் துக்கமெல்லாம் சேர்ந்து வந்தது. அதை அடக்கிக் கொண்டு, "சரி; நான் அவனுக்கு எழுதிக் கேட்கிறேன். உங்களுடையது தான் என்று அவன் எழுதினால் உங்கள் வீட்டில் சேர்ப்பித்து விடுகிறேன்" என்று கூறி அவரை அனுப்பினேன்.

ராகவனுக்குச் சுடச் சுட ஒரு கடிதம் அப்போதே எழுதி முடித்தேன். அவன் செய்கை நாணயஸ்தன் செய்யும் செய்கையல்ல என்பதை அதைப் படித்து அவன் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பது என் எண்ணம்.

இரண்டு நாட்கள் கழித்து என் கடிதத்துக்குப் பதில் வந்தது.

"ஈஸிசேர் ஈசுவரனின் உடைமைதான். தயவு செய்து அதை அவரிடம் சேர்ப்பித்து விடவும். நான் அப்போதே அதைச் சொல்லாததின் காரணம், ஆறு மாதத்துக்கு முன்னால் நீ என்னிடமிருந்து மறுநாளே தருவதாகக் கைமாத்தாக வாங்கிக்கொண்ட ஐந்து ரூபாய் பணத்தை வசூலிக்க அது எனக்கு ஒரு குறுக்கு வழியாய்ப் பட்டதால்தான். என்னை மன்னித்து விடவும்" என்று எழுதியிருந்தான் ராகவன்.

ஈஸிசேரை அன்றே ஈச்வரனிடம் சேர்த்து விட்டு நண்பன் ராகவனிடம் மன்னிப்புக் கோரிக் கடிதம் எழுதினேன்.



"உனக்கு இந்தப் புடவை ரொம்ப நன்றா யிருக்கிறது. இதை உடுத்திக் கொண்டால் நீ பத்து வயசு சின்னவளாகத் தோன்றுகிறாய்!"

"அப்படியானால் எனக்கு இந்தப் புடவை வேண்டாம்!"

"ஏன்?"

"இந்தப் புடவையைக் கட்டிக் கொள்ளாத சமயத்தில் பத்து வயசு அதிகமாக அல்லவா காட்டும்?"

# தமிழ்க்களஞ்சியம்

## டி.கே.சி

### 28. அப்படி யெல்லாம் கொதிக்கும் பாலை

நாடகம் என்றால் ஒரு கதைதான். அதில் எத்தனையோ கட்டங்கள். அதாவது துறைகள். துறைகளில் இறங்கி அனுபவிக்கலாம், ஆனால் அனுபவிக்கக் கூடியதாய் இருக்க வேண்டும். பாத்திரம், பேசுகிற பேச்சு, தமிழ், நாடகம் எல்லாம் கவிதான்.

உணர்ச்சி, செய்யுளின் ஓசை பாவம், எல்லாம் கவியில் இருக்க வேண்டும். இல்லாது போனால் பிரயோசனம் இல்லை.

எத்தனை எத்தனையோ கோவைகள். அவைகளில் துறைகள் எத்தனை எத்தனையோ, ஆனாலும் ஒரு கவி இராது. செய்யுளை இப்படியும் அப்படியுமாக முறுக்கிய கோணலாக இருக்கும். பாத்திரத்தையும் பாஷையையும் சித்திரவதைக்கு உள்ளாக்குகிற காரியமாகத்தான் இருக்கும் எல்லாம். இந்த நிலையில் கவி வருவது கஷ்டந்தானே?

* * *

ஒரு துறை பற்றிய பூர்வமான கவி ஒன்றைப் பார்க்கலாம்.

பாலை வழியாக இளைஞனோடு மகள் கஷ்டப்பட்டு நடந்து போன செய்தியைக் கேட்ட தாயின் உள்ளம் துடிக்கிறது என்பதுதான் துறை. 'மோட்டிபு' என்று மேல் நாட்டார் இதைச் சொல்லுவார்கள் என்று தான் பார்த்தோமே.

தாய் புலம்புகிறாள் : பெண் மலை வளத்தில் வளர்ந்த பெண். அரசன் அசதியின் மலை வளத்தில் சுகமாய் வளர்ந்த பெண்.

அற்றாரைத் தாங்கிய
ஐவேல் அசதி
அணிவரை யின்

முற்றா முகிழ்முலை
எவ்வாறு சென்றனள்!

[அற்றாரைத் தாங்கிய : ஏழைகளை அன்னமிட்டுப் பாதுகாக்கும் ; ஐவேல் அசதி அணிவரையின் : கூர்மையான வேலோடு போர் புரியும் அசதி மன்னனின் அழகான மலைநாட்டில் சுகமாய் வளர்ந்த ; முற்றா முகிழ்முலை எவ்வாறு சென்றனள் : சின்னஞ் சிறு பேதை எப்படித்தான் நடந்தாளோ !—பாலை வனத்தில்.]

* * *

தொன்மையான முத்தமிழை அனுபவித்துத் திளைக்கும் கூட்டம் கலைகிறதாய் இருந்தால், அதிலும் இனிமேல் சந்திக்க வாய்ப்பே இல்லை என்றிருந்தால், எப்படி மனசைக் கொதிக்கப் பண்ணும் அந்தப் பிரிவு!

மேலும், அனுபவிக்க முடியாத அறிவிலிகள் நம்மோடு கூடுகிற காரியம் எப்படி மனசைக் கொதிக்கச் செய்யும்!

வயசு காலத்தில் வறுமை வந்தால், 'ஏதோ கொஞ்ச நாள். அதோடு தொலைந்து போகிற காரியந்தானே அந்தத் தரித்திரம்' என்று சொல்லி விடலாம். ஆனால் ஒரு இளைஞன் திடீரென்று தரித்திரத்துக்கு உள்ளாய் விட்டால் அவனுடைய ஏக்கமும் கொதிப்பும் எப்படி இருக்கும்!

அப்படி யெல்லாம் கொதிக்கும் பாலையில் எப்படித்தான் நடந்து போனாளோ!

முழுப் பாடலுக்கு வரலாம் இனி:

அற்றாரைத் தாங்கிய
ஐவேல் அசதி
அணிவரை யின்

முற்றா முகிழ்முலை
எவ்வாறு சென்றனள்!
முத்தமிழ் நூல்

கற்றார் பிரிவும்நல்
லாதவர் ஈட்டமும்
கைப்பொருள் கள்

அற்றார் இளமையும்
போலே கொதிக்கும்
அருஞ்சுரத் தே.

[அருஞ் சுரம் : கடுமையான பாலை வனம்.]

ஆயிரம் வருஷ காலமாகத் தமிழ் மக்கள் நாவில் பாடல் உலவி உலவி வந்திருக்கிறது. அப்படி வருவதுதானே கவி?

## உங்களுடைய சரக்குகளை
# ட்ரேயான்ஸ்
## ட்ரான்ஸ்பெரன்ட் காகிதத்தால் பாக்கிங் செய்யுங்கள்!



பாதுகாப்புக்கும், அழகுக்கும், குறைந்த செலவிற்கும்!

ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம் இந்த அனுகூலங்களை அளிக்கிறது. மிட்டாய்கள் சோப்புகள், விளையாட்டுச்சாமான்கள், புகையிலை, வாசனைத் திரவியங்கள், துணிமணிகள், உலர்ந்த உணவுப் பொருள்கள், பழங்கள் முதலியவைகளை பாக்கிங் செய்ய ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் காகிதம் உகந்தது. இன்றே ட்ரேயான்ஸ் காகிதத்தால் பாக்கிங் செய்யும் முறையைப் பின்பற்றுங்கள்.



2 விதங்களில் கிடைக்கிறது. நிறமற்றது-அம்பர்-500 தாள்கள் கொண்ட ரீம்கள். (20"x30") தற்சமய தொழிற்சாலை விலையில்







TR. 3577

---

# வெட்டுக்காயம், நெருப்புப்புண், கஞ்சிக்கொப்பளம், காயங்கள் ஆகியவை விரைவில் குணமாகும்



உடனே ஜாம்-பெக் மூலிகை களிம்பைத் தேய்க்கவும். ஜாம்-பெக்கிலுள்ள விஷத்தன்மையைப் போக்கும் சிறந்த மருந்துக் கலப்புள்ள தைலங்கள் உடனே உங்களுக்குப் பாதுகாப்பளிக்கும். துரிதமாக ஊடுருவிச் செல்லும் இத்தைலங்கள் விஷக்கிருமிகளை அழித்து இதம் அளித்து நோய்வாய்ப்பட்டுள்ள பாகங்களைக் குணப்படுத்தும். வீக்கத்தையும் எரிச்சலையும் போக்கடிக்கும். ஜாம்-பெக் இல்லாமல் இருக்கவே வேண்டாம். இன்றே ஒன்று வாங்குங்கள். சருமம், மண்டை நோய்களுக்கும், வெட்டுக்காயம், நெருப்புப்புண், ரணங்கள், சேற்றுப்புண், பூச்சிக்கடி, மூலம் ஆகிய வற்றிற்கும் ஜாம்-பெக் உலகப்பிரசித்தி பெற்ற நிவாரணியாகும்.




மிருகக் கொழுப்பற்றது என்பதற்கு உத்திரவாதம்.

# Zam-Buk

ஜாம்-பெக் உலகத்தின் தலைசிறந்த சரும ஆயின்ட்மென்ட்

மதராஸிற்கு சோல் ஏஜெண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க் டவுன்.



இந்தியாவில் மிகப் பெரியதும், மிகவும் நூதனமான ஸைகிள் தயாரிக்கும் இயந்திரங்களில் செம்மையாகத் தயாரிக்கப் பட்ட ஹிந்த் ஸைகிள்கள் உயர்தரக இயந்திரங்களே நியாயமான விலையில் வாங்க விரும்பும் வாடிக்கைக்காரர்களுக்கும் பிடித்தமானது.

செம்மையான செய்முறை 1

பூல்-ப்ரூப் லிக்விட் ப்ரேஸிங்.

ஸைகிளின் கீழ் ஷெல்றுகளும், லக்குகளும் பித்தளைக் குழம்பு உலைகளில் தோய்க்கப்பட்டவை.

# ஹிந்த் ஸைகிள்

இந்தியாவிற்கே சொந்தமானது



ஹிந்த் ஸைகிள்ஸ் லி., 250, வர்லி, பம்பாய் 18

# தனிச் சிறப்பு வாய்ந்த பல்கேரியா

ஜெயமணி

பால்கன் நாடுகளிலேயே மிகச் சிறியதான அல்பேனியாவைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு இப்போது பல்கேரியா தேசத்துக்கு வந்துள்ளோம்.

பல்கேரியா நாட்டைச் சுற்றிப் பார்ப்பதற்கு முன், பால்கன் நாடுகள் என்றால் எவை என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

முக்கியமாக கிரீஸ், அல்பேனியா, யூகோஸ்லேவியா, ருமேனியா, பல்கேரியா இவைதான் பால்கன் பிரதேசங்கள் என்று குறிப்பிடப்படுகின்றன. அந்த நாடுகளில் பால்கன் மலைத் தொடர் செல்லுவதாலேயே அப்பெயர் வழங்கி வருகிறது.

மேற்படி பிரதேசத்தைத் தான் 'ஐரோப்பாவின் வெடி மருந்துப் பீப்பாய்' என்று சரித்திராசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். ஏனெனில் அந்தப் பிரதேசம் பல யுத்தங்களுக்குக் காரணமாக இருந்திருக்கிறது. முதலாவது மகாயுத்தம் பால்கன் பிரதேசத்தில் தான் ஆரம்பமாயிற்று. பிறகுதான் அது ஐரோப்பா முழுதும் பரவியது.

இப்போது அல்பேனியா, பல்கேரியா, ருமேனியா முதலிய பால்கன் நாடுகள் இரும்புத் திரைக்குள் இருப்பதால், அந்தப் பிரதேசம் மற்றொரு யுத்தத்துக்குக் காரணமாகி விடுமோ என்று ஐரோப்பிய வல்லரசுகள் கலங்குவது இயல்பு அல்லவா?

பல்கேரியா தேசம் பால்கன் பிரதேசத்தின் ஹிருதய ஸ்தானமாக விளங்குகிறது.

* * *

இரண்டு விஷயங்களில் உலகத்திலேயே வேறெந்த நாட்டுக்கும் இராத தனிப் பெருமை பல்கேரியாவுக்கு உண்டு.

1. பல்கேரியர்கள் சரீர பலத்துக்கும் நீண்ட ஆயுளுக்கும் உலகப் பிரசித்தி பெற்றவர்கள். அந்த நாட்டில் நூறு வயதுக்கு மேல் உள்ள வயோதிகர்கள் இன்னும் ஏராளமாக இருக்கிறார்கள்.

2. உலகத்தில் உற்பத்தியாகும் உயர்ந்த ரோஜா அத்தரில் முக்கால் பாகம் பல்கேரியாவில்தான் உற்பத்தியாகிறது.

எனினும் அரசியல் சம்பந்தப்பட்ட வரையில் பல்கேரியா பெருமைப்படக் கூடிய சம்பவம் எதுவும் அங்கு நிகழ்ந்ததில்லை.

பால்கன் நாடுகளில் கடைசியாக சுதந்திரம் பெற்ற நாடு பல்கேரியாதான்.

கிறிஸ்து பிறப்பதற்கு முன் ரோமிய சாம்ராஜ்யம் மிகுந்த பலத்துடனும் செல்வாக்குடனும் இருந்தபோது, பல்கேரியா மேற்படி சாம்ராஜ்யத்துக்கு உட்பட்டிருந்தது. கிறிஸ்து ஜனனமான சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு ரோமிய சாம்ராஜ்யம் வீழ்ச்சியுற்ற போது, ஸ்லேவிய மலைஜாதியார் பல்கேரியா மீது படையெடுத்தனர். அப்போது பல்கேரியர்கள் அவர்களைத் தோற்கடித்து விட்டார்கள். எனினும் இன்று பல்கேரியாவில் ஸ்லேவியர்கள் ஏராளமாக இருக்கின்றனர். அவர்கள் பல்கேரியாவில் ஐக்கியமாகிப் பல்கேரியர்கள் என்றே அழைக்கப்படுகிறார்கள்.



போரிஸ் மன்னர்

964-ம் ஆண்டில் பல்கேரியர்கள் கிறிஸ்துவ மதத்தைத் தழுவினர். அதிலிருந்து பதின்மூன்றும் நூற்றாண்டு வரையில் பால்கன் பிரதேசத்தில் பல்கேரிய சாம்ராஜ்யம் இருந்து வந்தது. ஆனால் பிறகு துருக்கியர்கள் படையெடுத்த போது பல்கேரிய சாம்ராஜ்யம் தோல்வியுற்று மறைந்தது. துருக்கியர்கள் பல்கேரியாவை ஐந்நூறு வருஷங்கள் வரையில் ஆட்சி புரிந்து வந்தார்கள்.

1876-ல் தான் பல்கேரியர்கள் துருக்கியர்களின் கொடுங்கோன்மையை எதிர்த்துப் போர் புரிய ஆரம்பித்தார்கள். அப்போது துருக்கியர்கள் பல்கேரியர்களுக்கு இழைத்த சகிக்க முடியாத கொடுமைகளைக் கிறிஸ்துவ நாடுகள் யாவும் வன்மையாகக் கண்டித்தன.

கடைசியாக பல்கேரியாவுக்கு உதவியளிக்க ருஷ்யா முன் வந்தது. பால்கன் பிரதேசத்தில் தங்களுடைய ஆதிக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதுதான், பல்கேரியாவுக்கு உதவி புரிய விரும்பிய ருஷ்யாவின் அந்தரங்க நோக்கமாகும்.

அதைத் தவிர, துருக்கியைச் சேர்ந்த கான்ஸ்டாண்டிநோபிள் முதலிய நகரங்கள் மீதும் ருஷ்யா கண்ணோட்டம் செலுத்தி வந்தது. எனவே, துருக்கியை எதிர்த்துப் பல்கேரியர்கள் புரட்சியை ஆரம்பித்தபோது, அதை ருஷ்யர்கள் தங்களுக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக் கொள்ள விரும்பினர்.

அப்போது, அதாவது 1877-78ல் ருஷ்யாவுக்கும் துருக்கிக்கும் நடந்த யுத்தத்தில் துருக்கி தோல்வி யடைந்தது. பிறகு ருஷ்யாவுக்கும் பல்கேரியாவுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கைக்கு இணங்க, ஐரோப்பாவில் துருக்கிக்குச் சொந்தமாக இருந்த பிரதேசங்களும், மேஸிடோனியாவும் பல்கேரியாவுக்குக் கிடைத்தன.

ஆனால் மேற்படி ஏற்பாட்டை மற்ற ஐரோப்பிய வல்லரசுகள்

ஒத்துக் கொள்ளவில்லை. பேராசையுள்ள பல்கேரியா, துருக்கியின் மேற்பார்வையில் ஒரு சிறிய நாடாகவே இருந்துவர வேண்டும் என்று அந்த வல்லரசுகள் வற்புறுத்தின.

இச் சந்தர்ப்பத்தில் பல்கேரிய மன்னர் பல்கேரிய ஜார் சக்கரவர்த்தி என்று தமக்குத் தாமே பட்டம் சூட்டிக் கொண்டார். பல்கேரியா ஒரு காலத்தில் சாம்ராஜ்யமாக இருந்ததால், மீண்டும் பல்கேரியா சாம்ராஜ்யமாகவே இருக்கவேண்டும் என்ற ஆசை அவருக்கு ஏற்பட்டு விட்டது.

1942 லிருந்து 1945-ம் வருஷம் வரையில் பல்கேரியா நாலு யுத்தங்களில் ஈடுபடும்படி நேர்ந்ததற்குக் காரணம் பல்கேரியாவின் சாம்ராஜ்ய ஆசைதான்.

* * *

முதலாவது உலக மகாயுத்தம் ஆரம்பமான போது பல்கேரியா ஜெர்மனியுடன் சேர்ந்து கொண்டு செர்பியாவை ஆக்கிரமித்துக் கொண்டது. ஆனால் பிறகு நடந்த போரில் பல்கேரியா தோல்வியுற்றதால், அது தன் சாம்ராஜ்யத்தை இழந்ததுடன், அது தான் போருக்கு இழுத்த அண்டை நாடுகளுக்கு ஏராளமான தொகை நஷ்ட ஈடு கொடுக்கும்படியும் நேர்ந்தது.

முதலாவது மகா யுத்தத்தில் பல்கேரியர்களுக்கு அபரிமிதமான உயிர்ச் சேதமும் பொருட் சேதமும் ஏற்பட்டன.

அந்த யுத்தத்துக்குப் பின் பல்கேரியாவில் அதிகார ஆசை கொண்ட தலைவர்களிடையே கடுமையான போட்டி உண்டாயிற்று.

பல்கேரிய விவசாயிகளின் கட்சித் தலைவரும் நாலு வருஷம் பிரதம மந்திரியாக இருந்தவருமான அலெக்ஸாண்டர் ஸ்டாம்புலிஸ்கி என்பவர் இராணுவ அதிகாரிகள் உள்பட சில தலைவர்களின் சதிக்கு இலக்காகி 1920-ம் ஆண்டில் கொலையுண்டார்.

அதன் பிறகு பல்கேரிய சர்க்காரின் அதிகார பீடத்துக்கு வந்த தலைவர்கள் மறுபடியும் பல்கேரிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க வேண்டும் என்று முழங்கத் தொடங்கினார்கள். உலகத்திலே இணையற்ற செல்வாக்குடன் விளங்கிய ரோமிய, துருக்கி சாம்ராஜ்யத்தின் கதி இறுதியில் என்ன ஆயிற்று என்பதை அவர்கள் கவனிக்கவில்லை.

பல்கேரியாவில் 1926-ல் இருந்து எட்டு வருஷகாலம் வரையில் ஜனநாயகக் கட்சிகளே அதிகாரத்தில் இருந்து வந்தன. 1934-ல் மறுபடியும் இராணுவ அதிகாரிகள் அதிகாரத்தைக் கைப்பற்றினர்.

அவர்கள் பல்கேரியாவில் ஜனப் பிரதிநிதி சபையையே ஒழித்து விட்டு, சர்வாதிகார ஆட்சியை அமைக்க விரும்பினார்கள். அவர்களுடைய விருப்பத்துக்கு இணங்க மூன்றாம் போரிஸ் மன்னர் பல்கேரியாவின் சர்வாதிகாரியானார்.

அச் சந்தர்ப்பத்தில் தான் ஜெர்மனியில் ஹிட்லரின் தலைமையில் நாஜியர்கள் அதிகாரத்துக்கு வந்தார்கள். 1939-ம் வருஷத்துக்குள் ஆஸ்திரியா, செக்கோஸ்லவேகியா, மேற்கு போலந்து முதலிய நாடுகள் மின்னல் வேகத்தில் நாஜியர்களின் வசமாயின.

* * *

நாஜியர்களின் வெற்றியை பல்கேரியர்கள் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ள விரும்பினார்கள். ஜெர்மனிக்கு உதவியாக இருந்ததற்காகத் தங்களுக்குச் சில பிரதேசங்களை வெகுமதியாகக் கொடுக்க வேண்டும் என்று பல்கேரியர்கள் ஜெர்மனியர்களைக் கேட்டுக் கொண்டார்கள். அதற்கிணங்க, அவர்களுக்கு ருமேனியாவைச் சேர்ந்த ஒரு பகுதி வெகுமதியாகக் கிடைத்தது.

பிறகு 1941-ல் ஜெர்மனி யூகோஸ்லேவியா மீது படை யெடுத்தது. அப்போது பல்கேரியத் துருப்புகள் ஜெர்மனியின் துருப்புகளுக்கு உதவியாகச் சென்று யூகோஸ்லேவியாவிலும் கிரீஸ் நாட்டிலும் பிரவேசித்தன.

பால்கன் நாடுகளில் பல்கேரியா ஜெர்மனிக்குப் போர்த்தளமாகியது. எனவே அங்கிருந்து ருஷ்யாவுக்கு விரோதமாக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வது ஜெர்மனிக்குச் சாத்தியமாயிற்று.

எனினும் ஜெர்மானியர்கள் தங்கள் நாட்டிலிருந்து ருஷ்யாவுக்கு விரோதமாக நடவடிக்கை எடுத்துக் கொள்வதைப் பல்கேரியர்கள் விரும்பவில்லை. ஏனெனில் பல்கேரியர்கள் எக்காலத்திலும் ருஷ்யர்களைத் தங்கள் இனத்தவர்களாகக் கருதி அவர்களுடன் நட்புக் கொண்டிருந்ததே அதற்குக் காரணம்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10

# டால்டா வனஸ்பதி நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு முழுப் பிரயோஜனத்தைத் தருகிறது

நான் எப்பொழுதும்
டால்டாவையே
வாங்குகிறேன்.
அது காற்றுப்புகாத
டின்னில் எப்பொழுதும்
புதிதாகவும்,
சுத்தமாகவும்,
ஊட்டமளிப்பதாகவும்
இருக்கிறது.

பள்ளிசெல்லும் சிறுவர்களுக்கு
பிரத்தியேக உணவுகள் தேவையா?
இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—
அல்லது என்று வேண்டுமானாலும்
—எழுதுங்கள்!
தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

தரத்திற்கு டால்டா நிகரற்றது. டால்டா கைபடாமல் மிகவும் சிறந்த மூலப்பொருள்களைக்கொண்டு தயாரிக்கப்பட்டது. டால்டா எப்பொழுதும் சுத்தமாகவும், புதிதாகவும், ஊட்டமளிப்பதாகவும் காற்றுப் புகாத சீல் செய்த டின்னில் உங்களுக்குக் கிடைக்கிறது. மேலும் இது சிக்கனமானதும் கூட.




## டால்டா

10, 5, 2, 1 பவுண்டு டின்களில் கிடைக்கிறது

HVM. 189-50 TM

REGD. No. M. 4392
*Registered as a newspaper in Ceylon*

# அழகின் ஆதாரம்

# உங்கள் சருமம் தான்

**உங்கள் வதனத்திற்கு பாதுகாப்பும் அழகும் அளியுங்கள்**





வெய்யில், புழுதி, வெப்பம், குளிர், ஈரம், மழை இவைகளிலிருந்து உங்கள் சருமத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். நமது மிதமிஞ்சிய சீதோஷ்ண நிலைகளுக்கு ஏற்றதாயிருப்பதற்கென்றே ஹிமாலயா புக்கே ஸ்னோ தயாரிக்கப்பட்டுள்ளது. இதை தினமும் உபயோகித்து உங்கள் சருமத்தை மிருதுவாகவும், தெளிவாகவும் இருக்கச்செய்யுங்கள். பௌடர் பூசிக்கொள்வதற்கு முன் இதை தடவிக்கொள்ள மிகவும் பிரியப்படுவீர்கள். இதன் நறுமணத்தையும்விரும்புவீர்கள்.






## ஹிமாலயா புக்கே ஸ்னோ

இன்னுமொரு நேர்த்தியான **இராஸ்மிக்** தயாரிப்பு

HBS. 8-50 TM    இராஸ்மிக் கம். லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது